அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை

அருட்பெருஞ்ஜோதி
அருட்பெருஞ்ஜோதி

## திரு அருட்பிரகாச வள்ளலார்

அருளிய



# திருஅருட்பா

# ஆறாம் திருமுறை

வெளியீடு:

திரு அருட்பிரகாச வள்ளலார் தெய்வ நிலையம்,
வடலூர்.

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

## திருஅருட்பிரகாச வள்ளலார்

அருளிய

# திருஅருட்பா

# ஆறாம் திருமுறை





*வெளியீடு :*
**திரு அருட்பிரகாச வள்ளலார் தெய்வ நிலையம்,**
**வடலூர், தமிழ்நாடு.**

முதற்பதிப்பு : 5–10–1999 – வள்ளலார் அவதார தினம்
2000 பிரதிகள்

இரண்டாம் பதிப்பு : 1–1–2002 – மாதப்பூசம் 2000 பிரதிகள்

பதிப்பு உரிமை : திருஅருட்பிரகாச வள்ளலார் தெய்வநிலையம்
வடலூர் –607 303.
கடலூர் மாவட்டம் தமிழ்நாடு.
போன் : 04142– 359250

பக்கங்கள் : 608

எழுத்து : 12 புள்ளிகள்

பேப்பர் தரம் : சேஷசாயி 11.6 கிலோ



அச்சிட்டோர் :

**இலட்சுமி அச்சகம்,**

(கம்ப்யூட்டர் ஆப்செட் பிரிண்டிங்)

வடலூர் – 607 303.

போன் : 04142 – 359561

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

# திருஅருட்பா ஆறாம் திருமுறை

## பொருளடக்கம்



ஜீவகாருண்ய ஒழுக்கத்தை நடத்தும் பொருட்டு வள்ளற்பெருமானார் வடலூரில் 23–05–1867ல் நிறுவிய சத்திய தருமச்சாலை



சாதி, மதம், இனம், மொழி, தேசம், நிறம் முதலிய வேறுபாடுகள் இல்லாத நிலையில் அருட்பெருஞ்ஜோதியை வழிபட, உலகில் வேறு எங்கும் இல்லாத அற்புத அமைப்பாக வள்ளற்பெருமானார் வடலூரில் 1872–ல் நிறுவிய சத்திய ஞான சபை.



வள்ளற் பெருமானார் மரணமிலாப் பெருவாழ்வு அடைந்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவராய் நிறைந்த சித்திவளாகத் திருமாளிகை.

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி
**எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க!.**

# முன்னுரை

**திருஅருட்பா** நம் தீந்தமிழ் மொழியில் அருளப்பெற்ற ஈடு இணையற்ற தெய்வீக நூலாகும். நமது தமிழ் மொழியின் செய்யுள் இலக்கணத்தில் எத்தனை வகை யாப்புகள் உண்டோ அத்தனை வகையாலும் பாடப் பெற்றுள்ளன. அத்துடன் புத்தம் புதிய இசைப் பாடல்கள் என்னும் கீர்த்தனங்களும் இதில் அமையப் பெற்றுள்ளன. எனவே **திருஅருட்பா** மெய்ஞ்ஞானச் சுரங்கம் மட்டுமன்று தீந்தமிழின் தேவகானமும் ஆகும்.

சன்மார்க்க சங்கத்தவர்களது அருள் வேதமே **திருஅருட்பா**தான். இது சாதி, மதம், சமயம், இனம், மொழி. நிறம், தேசம் - முதலிய வேறுபாடுகள் இல்லாத சன்மார்க்க சமுதாயம் உருவாக வழி காட்டுகின்றது. ஆன்மநேயம் தழைத்து ஓங்க உறுதுணையாகின்றது.

வள்ளற் பெருமானார், தான் பெற்ற பெரும் பேற்றையும், அருள் அனுபவங்களையும் ஆற்றலையும் சாகாக்கல்வியையும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரைப் பற்றிய ஒரு முழுமையான அருமையான அருள் அற்புத விளக்கத்தையும் **"திருஅருட்பா ஆறாம் திருமுறையில்"** அருளி உள்ளார்கள்.

ஏடகத்தே எழுதாத மறைகள் எல்லாம் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர், நம் பெருமானார் அருள் உள்ளத்தில் எழுதுவித்தார். அந்தச் சத்திய மறைகளையெல்லாம் ஆன்ம நேயத்தால் திருஅருட்பாவில் நமக்காக அருளியுள்ளார்கள்.

**"வான் கொடுத்த மணி மன்றில் திருநடனம் புரியும்**
**வள்ளல் எலாம் வல்லவர் நன்மலர் எடுத்து என் உளத்தே**
**தான் கொடுக்க நான் வாங்கித் தொடுக்கின்றேன்"**

எனத் திருஅருட்பாவைப் பற்றிப் பெருமானார் அருளி உள்ளார்கள்.

"புனைந்துரையேன்,
பொய்ப் புகலேன்,
சத்தியம் சொல்கின்றேன்,
ஆசை உண்டேல் வம்மின்." என நம்மை அழைத்து நாம் மரணமிலாப் பெருவாழ்வில் வாழ வழிகாட்டுகிறார்கள்.

அருட்பெருஞ்ஜோதி அற்புத ஆண்டவரின் தனிப்பெருங்கருணையாய்த் திகழும் திரு அருட்பிரகாச வள்ளலார் அருளிய திருஅருட்பா ஆறு திருமுறைகளாகப் பகுக்கப் பெற்றுள்ளது. வள்ளற் பெருமானார் தோன்றும் துணையாய் இருந்தபோது முதல் மாணாக்கர், உபயகலாநிதிப் பெரும் புலவர், தொழுவூர் வேலாயுதனார் 1867 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் திருஅருட்பா முதல் நான்கு திருமுறைகளை, பேரன்பர் இறுக்கம் இரத்தினம் என்பவர் பெருமுயற்சியினால் வெளியிட்டார். அந்நூலினை மறு அச்சாக்கி நம் தெய்வ நிலையத்தால் 23-1-1997 தைப்பூச நன்னாளில் மலிவு விலைப் பதிப்பாக வெளியிடப் பெற்றுள்ளது.

1880-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் **திருஅருட்பா ஐந்தாம் திருமுறையை** முதல் மாணாக்கர் வெளியிட்டார். அவர் தொகுத்த பதிகங்களின் வரிசையிலும், பதம் பிரித்தும், திருஅருட்பா பதிப்புச் செம்மல் ஆ. பாலகிருஷ்ணர், சன்மார்க்க அறிஞர், ஊரன் அடிகளார் ஆகியோரது பதிப்புகளை ஆதாரப் பதிப்புகளாகக் கொண்டும், நம் தெய்வ நிலையத்தால் 10-2-1998 தைப்பூச நன்னாளில் திருஅருட்பா ஐந்தாம் திருமுறை மலிவு விலைப் பதிப்பாக வெளியிடப் பெற்றுள்ளது.

**திருஅருட்பா ஆறாம் திருமுறையை** முதன் முதலில் வேலூர் பத்மநாபர் 1885 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் வெளியிட்டார். சன்மார்க்க அறிஞர் ஊரன் அடிகளார் வரலாற்று முறை பதிப்பாக 24-5-1972 இல் ஆறு திருமுறைகளையும் சேர்த்து வெளியிட்டு உள்ளார்.

இவ்விரு பதிப்புகளையும் மற்றும் உள்ள பழம் பதிப்புகளையும் ஆதாரப் பதிப்புகளாகக் கொண்டு நம் தெய்வ நிலையத்தால் **ஆறாம் திருமுறை** முதற்பதிப்பு 5-10-1999 வள்ளற்பெருமானார் அவதார தினத்தில் வெளியிடப் பெற்றது. தற்போது ஆறாம் திருமுறை இரண்டாம் பதிப்பு வெளியிடப்படுகின்றது. இரண்டாம் பதிப்பில் 150 பதிகங்களில் 2553 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. பாடல்கள் சந்தி பிரிக்கப் பெற்றுத் தொடர் எண்கள் கொடுக்கப் பெற்றுள்ளன. 20 பக்க அளவிற்குத் திருஅருட்பா உரைநடைப் பகுதி சேர்க்கப் பெற்றுள்ளது. ரூ. 200 மதிப்புள்ள இந்நூலை மலிவு விலைப் பதிப்பாக அன்பர்களின் நலன் கருதி ரூ. 100 க்கு வெளியிட்டு உள்ளோம்.

திருஅருட்பாவைக் கற்கக் கற்கக் களிப்பு உண்டாகும். அருள் இன்பத்தை வாரி வாரி வழங்கும். எனவே நினைந்து நினைந்து, உணர்ந்து உணர்ந்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து திருஅருட்பாவை தினசரி பாராயணம் செய்து, அதன் வழி நடந்து

அருட்பெருஞ்ஜோதியின் தனிப்பெருங்கருணையைப் பெறுவோமாக. அருள் இன்பம் எனும் பெரு வெள்ளம் **திருஅருட்பா ஆறாம் திருமுறையில்** கரைபுரண்டு ஓடுகின்றது பருக வாரீர்! வாரீர்!

நன்றி! நன்றி!! நன்றி!!!

இந்நூலினை வெளியிட அனுமதி வழங்கிய, இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை சென்னை ஆணையர், திருமிகு. **த.ரா. சீனிவாசன்** இ.ஆ.ப. அவர்களுக்கும், இப்பதிப்பு சிறப்புடன் வெளிவர ஆலோசனை வழங்கிய, ம்யிலாடுதுறை, இணை ஆணையர் திரு. **இரா. சுப்ரமணியன்,** பி.ஏ., பி.எல்., அவர்களுக்கும், சென்னை தலைமையிடத்துக் கூடுதல் ஆணையர் திரு. **எஸ். கனகய்யா** பி.எஸ்.சி.. பி.எல்., அவர்களுக்கும் சென்னை தலைமையிடத்து இணைஆணையர். திரு. **ப. தனபால்,** எம்.ஏ.. பி.எல்., அவர்களுக்கும் நன்றியினையும் வணக்கத்தினையும் தெரிவிக்கின்றோம்.

இந்நூலினை அச்சிடுவதற்கு நன்கொடை வழங்கிய புண்ணியர்கள் அனைவருக்கும், நன்றியினைத் தெரிவிக்கின்றோம். மேலும் அவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க! வாழ்க! என வாழ்த்துகின்றோம். சிறந்த முறையில் அச்சிட்டுத்தந்த இலட்சுமி அச்சகத்தார் மற்றும் பணியாளர்களுக்கும் எங்களது நன்றியினைத் தெரிவிக்கின்றோம். பதிப்புப்பணி : ப. ஞானப்பிரகாசம். பி.காம்., கணக்கர் வள்ளலார் தெய்வ நிலையம், வடலூர். இவருக்கும் அன்பான நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

திருஅருட்பா ஆறாம் திருமுறையை இரண்டாம் பதிப்பாக வெளியீடு செய்ய எங்களுக்கு அருள்பாலித்த, அருட்பெருஞ்ஜோதிக்கு அனந்தம் கோடி வந்தனம்! வந்தனம்!!

*இங்ஙனம்*

| | |
|---|---|
| **இரா. இராஜேந்திரன்,** பி.எஸ்சி., பி.எல்., | **வை. சங்கரநாராயணன்,** பி.எஸ்.சி., |
| தக்கார் / உதவி ஆணையர் | நிர்வாக அதிகாரி |
| இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை | வள்ளலார் தெய்வ நிலையம் |
| கடலூர் –1 | வடலூர். |

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

# திருஅருட்பா பொன்னேட்டில் புண்ணியர்கள்

**திருஅருட்பிரகாச வள்ளற் பெருமானார் அருளிய திருஅருட்பா ஆறாம் திருமுறை இரண்டாம் பதிப்பு வெளியிட நன்கொடை வழங்கிய புண்ணியர்கள் அனைவரும், அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் தனிப்பெருங்கருணையால் பேரின்பப் பெருவாழ்வில் வாழ்க! வாழ்க!! என வாழ்த்துகின்றோம்.**

01. சன்மார்க்க அறிஞர் ஊரன் அடிகளார், வடலூர்
02. அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம், B.Sc., F.I.E., பொள்ளாச்சி, (சென்னை)
03. அணுக்கத்தொண்டர் அருட்பாமணி ந. விசுவநாதன், வடலூர்
04. ஆர். செல்வராஜ், தாளாளர் மற்றும் செயலாளர், வள்ளலார் குருகுலம் மேனிலைப்பள்ளி, வடலூர்
05. மா. ஜானகி ஞானவேல், நாஞ்சில்கோட்டை ரோடு, தஞ்சாவூர்
06. தருமாம்பாள் பழனிவேல், அருள்குடில், வடலூர்
07. பி. சங்கரராவ், கங்கனப்பள்ளி, சித்தூர், ஆந்திரா
08. வாசவி நிறுவனத்தார், சேத்தியாத்தோப்பு
09. ப. உலகநாதன், ம. கூட்டுறவு வங்கி வடலூர், சன்மார்க்க சங்கம் வயலாமூர்
10. வாசுகி சாமிக்கண்ணு, வள்ளலார் இல்லம், அண்ணா நகர், கடலூர்
11. மு. பாலசுப்பிரமணியன், 98, நேரு சாலை, ஆழ்வார் திருநகர், சென்னை
12. வெ. இராமானுசன் சாவித்திரி, ஆசிரியர் (ஓய்வு) பார்வதிபுரம், வடலூர்
13. ஜீ. ரேணுபிரசாத், கங்கனப்பள்ளி, சித்தூர், ஆந்திரா
14. சூப்பர் சுப்பராயன், பாலகிருஷ்ணன் தெரு, சென்னை
15. வி. சுந்தரராமன், மேனேஜர், மத்திய கூட்டுறவு வங்கி, கடலூர்
16. து. மதிவாணன், கொடியாளம், வடச்சேரி, தஞ்சை
17. மஞ்சுளா சிவக்குமார், அரசு ஒப்பந்ததாரர், வசந்தம் மளிகை, வடலூர்
18. அருள் ஜோதி சாக்ஸ் கம்பெனி, சென்னை
19. ஆர். விஜயா, டைப்பிஸ்ட், பிரிட்டோ பிரஸ், வடலூர்

20. உமா ஞானசேகர், சந்தூர் ஏஜென்சி, வடலூர்
21. ஜீ. கணேசன், அருளகம் எலக்ட்ரிக்கல்ஸ், காலடிப்பேட்டை, சென்னை
22. எஸ். வைத்தியநாதன், திருமுடிநகர், புதுவை–1
23. கனக சுப்பிரமணியன், பெரியார் நகர், சென்னை
24. அருட்பா. மா. கோவிந்தசாமி, இந்திரா நகர், விழுப்புரம்
25. க. இராசாங்கம் சரஸ்வதி, ஆசிரியர் ஓய்வு, பார்வதிபுரம், வடலூர்
26. கே. சின்னச்சாமி, ராணிப்பேட்டை
27. வே. விசுவநாதன், வேலூர்
28. ஏ. ஜெகதீசன், சுபிடர் இல்லம், திருச்சிரோடு, கோவை
29. எஸ். பாலாஜிராஜாராம் – நாராயணபவனம், எஸ். எஸ். காலனி, மதுரை –10
30. ஆர். கோமதி ஸ்ரீதரன் – துவராகா எஸ். எஸ். காலனி, மதுரை – 10
31. ஆர்.எஸ். வேணுகோபால் – நாராயணபவனம், எஸ். எஸ். காலனி, மதுரை–10
32. கே. பரமசிவம், ஓட்டுநர், மேலவன்னியூர்
33. கே.என். பழனிசாமி, பழனியாண்டவர் ஹார்டுவேர்ஸ், பெருந்துறை
34. ஸ்ரீ அருளாம்பிகை இன்ஜினியரிங் ஒர்க்ஸ், அவினாசி
35. எஸ். எஸ். இராமகிருஷ்ணன், எஸ். எஸ். காலனி, மதுரை – 16
36. தமிழரசி அசோகன், வட்டம் 9, நெய்வேலி
37. சுப. காந்தி குருந்தம்பட்டு, சிவகங்கை மாவட்டம்
38. கே.எம். பாலசண்முகம், வ.உ.சி. நகர், வடலூர்
39. ஆர். தேவராஜன், அருட்பெருஞ்ஜோதி இல்லம், குமரன் நகர், ஆற்காடு
40. கே. சிவப்பிரகாசம் பி.டி.ஓ. (ஓய்வு) காட்பாடி, வேலூர்
41. இராமலிங்கம் ஜெயலட்சுமி, நடுக்குப்பம், காடாம்புலியூர்
42. வை. சங்கரநாராயணன், பி.எஸ்.சி.
நிர்வாக அதிகாரி, வள்ளலார் தெய்வநிலையம், வடலூர்
43. ப. ஞானப்பிரகாசம், ஞா. அருள்ஜோதி, தருமச்சாலை, வடலூர்

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

# திருஅருட்பிரகாச வள்ளலார் வரலாற்றுக் காலக் குறிப்புகள்

திருஅவதாரம் : சுபானு, புரட்டாசி 21 சித்திரை நட்சத்திரம் (ஞாயிறு) 5–10–1823
ஊர் : மருதூர்–சிதம்பரம் வட்டம், கடலூர் மாவட்டம்
பெற்றோர் : இராமையா–சின்னம்மமை
இயற்பெயர் : இராமலிங்கம்
சிறப்புப் பெயர் : திருஅருட்பி ரகாச வள்ளலார்

| | | | |
|---|---|---|---|
| குடும்பம் சென்னைக்குச் சென்றது | | – | 1824 |
| தொழுவூர் வேலாயுதனார், பெரும்மானாரின் மாணவரானது | | – | 1849 |
| ஒழிவிலொடுக்கம் பதிப்பித்தது | விரோதிகிருது, ஐப்பசி | – | 1851 |
| மனுமுறை கண்ட வாசகம் வெளிவந்தது | ஆனந்த, ஆனி | – | 6, 1854 |
| தொண்ட மண்டல சதகம் பதிப்பித்தது | இராஷச. மார்கழி | – | 1855 |
| சின்மய தீபிகை பதிப்பித்தது | பிங்கள, கார்த்திகை | – | 1857 |
| கருங்குழியில் உறையத் தொடங்கியது | – | – | 1858 |
| சன்மார்க்க சங்கம் நிறுவியது | – | – | 1865 |
| திருஅருட்பா முதல் நான்கு திருமுறைகள் வெளிவந்தது | அக்ஷய, தை | – | 2, 1867 |
| சத்திய தருமச்சாலை தொடங்கியது | பிரபவ, வைகாசி 11 | – | 23.5.1867 |
| மேட்டுக்குப்பத்தில் உறையத்தொடங்கியது | – | – | 1870 |
| சத்திய ஞானசபை அமைத்தது | – | – | 1871 |
| சத்திய ஞானசபையில் முதல் தைப்பூசம் | பிரஜோத்பத்தி, தை 13 | – | 25.1.1872 |
| அருட்பெருஞ்ஜோதி அகவல் எழுதியது | ஆங்கிரச, சித்திரை 8 | – | 18.4.1872 |
| ஞானசபை வழிபாட்டு விதி வகுத்தது, சங்கம், சாலை, சபை பெயர் மாற்றம் செய்தது | அங்கிரச, ஆடி 5 | – | 18.7.1872 |
| சன்மார்க்கக் கொடி கட்டியது, பேருபதேசம் | ஸ்ரீமுக, ஐப்பசி 7 | – | 22.10.1873 |
| மேட்டுக்குப்பம் சித்திவளாகத்தில் வழிபாட்டு முறை தொடங்கியது | | – | 1873 |
| சித்திவளாகத்தில் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவராய் நிறைந்தது | ஸ்ரீமுக, தை 19 – இரவு மணி 12 | – | 30.01.1874 |

## வள்ளற்பெருமானாரின் பன்முகஞானம்

சேக்கிழார் நூலாசிரியரும், உரையாசிரியரும், போதகாசிரியரும், ஞானாசிரியரும் ஆவாரெனத் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சேக்கிழார் பிள்ளைத்தமிழில் பாடியுள்ளார்.

*நாடிய விரிநூல் சொற்றிடு திறனால் நன்னூலா சிரியன்*
*நகுபா சுரமுத லுரைசெய் தலினால் நவிலுரை யாசிரியன்*
*நீடிய பரசம யக்குழி வீழ்ந்தவர் நீப்பப் போதனைசெய்*
*நிலையாற் போத காசிரி யன்னிவை நிகழ்தொறு நிகழ்தொறும்*
*ஆடிய ஞானத் திறனுற லான் ஞானாசிரி யனுநீ யென்*
*றான்றோர் பலரும் புகழப் படுபவ வகில மெலாஞ் சென்று*
*கூடிய புகழ்சால் குன்றத் தூரன் கொட்டுக சப்பாணி*
*கொற்றச் சேவையர்காவல நாவல கொட்டுக சப்பாணி.*

— சப்பாணிப் பருவம் 9

வள்ளற்பெருமானாரோ, நூலாசிரியரும், உரையாசிரியரும், ஞானாசிரியரும் ஆதலொடு பதிப்பாசிரியரும் பத்திரிகாசிரியரும் ஆவார். இவ்வாறு பல்வகை ஆசிரியராய் விளங்கியதோடன்றி வியாக்கியான கர்த்தராய், சித்தமருத்துவராய், சீர்திருத்த வாதியாய், அருட்கவிஞராய், இவை அத்தனைக்கும் மேலாக அருட்பெருஞ் ஜோதியராய் விளங்குகிறார்.

**நூலாசிரியர்**

மனு முறைகண்ட வாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம் என்ற நூல்களை இயற்றியமையான் நூலாசிரியர்.

**உரையாசிரியர்**

ஒழிவிலொடுக்கம், பாயிர விருத்தி உரை, தொண்ட மண்டல சதகத்தின் கடவுள் வாழ்த்துப் பாடல் உரை முதலியவற்றைச் செய்தமையான் உரையாசிரியர்.

**பதிப்பாசிரியர்**

ஒழிவிலொடுக்கம் பாயிரவிருத்தி, தொண்ட மண்டல சதகம், சின்மயதீபிகை ஆகிய நூல்களைப் பதிப்பித்தமையால் பதிப்பாசிரியர்.

**பத்திரிகாசிரியர்**

சன்மார்க்க விவேகவிருத்தி என்னும் பத்திரிகையைத் தொடங்கியமையான் பத்திரிகாசிரியர்.

**போதகாசிரியர்**

தொழுவூர் வேலாயுத முதலியார், இறுக்கம் இரத்தின முதலியார், நரசிங்கபுரம் வீராசாமி முதலியார், கிரியாயோக சாதகராகிய பண்டார ஆறுமுக ஐயா, பொன்னேரி சுந்தரம் பிள்ளை, காயாறு ஞானசுந்தர ஐயர் ஆகிய பலருக்குப் பாடஞ் சொன்னமையான் போதகாசிரியர்.

**ஞானாசிரியர்**

திருவருண் ஞானத்தை அனைவர்க்கும் வாரி வழங்கி வருவதால் ஞானாசிரியர்.

**வியாக்கியானகர்த்தர்**

உலகெலாம் என்னும் மெய்ம்மொழிப்பொருள் விளக்கம், தமிழ் என்னும் சொல்லுக்கிட்ட உரை முதலிய வியாக்கியானங்களைச் செய்தமையான் வியாக்கியானகர்த்தர்.

**சித்தமருத்துவர்**

தாமேபல மருந்துகளைச் செய்து பிணியாளர் பலருக்குக் கொடுத்து நோய் தீர்த்ததோடன்றிச் சிலருக்குக் கடித வாயிலாக மருந்து எழுதியது, மருந்துச் சரக்குகளின் குண அட்டவணை எழுதியது ஆகியவற்றால் சித்த மருத்துவர்.

மருத்துவத்தோடன்றி ரசவாதத்திலும் பெருமானார் வல்லவர். வைத்தியம், வாதம், யோகம், ஞானம் இவை ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. நம் நாட்டுச் சித்தர்கள் இவற்றில் வல்லவர்கள். பெருமானாரும் வல்லவரின் வல்லவர். பொன் செய்யும் வகையை இறைவன் தமக்கு உணர்த்தினான் எனப் பெருமானார் ஒரு பாடலிற் கூறுகின்றார். திருவருட்பா உரைநடைப் பகுதி நூலில் ரசவாதம் என்ற உபதேசக் குறிப்பையும் பொன்விளைவு என்ற திருமுகத்தையும் காண்க. இறுக்கம் இரத்தின முதலியார்க்கு வரைந்த வேறொரு திருமுகத்தில் தற்காலம் ஒருவகை முயற்சி நிமித்தம் சுமார் ஙய (30) வராகனெடை பொன் வேண்டுவது. அவை நஷ்ட மாகாது, விருத்தியே யாகும். இவையும் சிவபுண்ணியம் பற்றியே என்றெழுதி யுள்ளது முண்டு. பொன் செய்யும் ஆற்றலை ஒரு பேறாகவே பெருமானார் கூறுகின்றார்.

**சீர்திருத்தவாதி**

இன்று துறைகள்தோறும் தோன்றியுள்ள பல சீர்திருத்தங்களுக்கு வித்திட்டவர் வள்ளற் பெருமானாரே. சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் இவ்விருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் சைவசமயத்தில் பல சீர்த்திருத்தங்கள் தோன்றின. சீர்திருத்தச் சைவம் என்றொன்று தோன்றிற்று. சீர்திருத்தச் சைவம் தோன்றற்குக் காரணர் பெருமானாரே. சமயத் துறையில் மட்டுமின்றிச் சமூக வாழ்விலும் பெரும் மாறுதல்களும், சீர்திருத்தங்களும் பெருமானாரால் ஏற்பட்டன.

இதுவரை உலகில் தோன்றிய சீர்த்திருத்த வாதிகளுள் ஒப்பும் உயர்வும் அற்றவர் பெருமானாரே. சீர்திருத்தத்தில் பெருமானார் யாருக்கும் பின்னிற்பவர் அல்லர். பெருமானார் கூறிய சீர்திருத்தங்கள் பல, இதுவரை யாராலும் கூறப்பெறாதவை. சீர்திருத்த வானில் பெருமானார் ஒரு சூரியன். அவரை எட்டிப்பிடித்தல் இயலாது. எடுத்துக் காட்டாக ஒன்று கூறுவோம். கணவன் இறந்தால் மனைவி தாலி வாங்க வேண்டாம் என்பது பெருமானார் கூறிய சீர்திருத்தங்களுள் ஒன்று.

இத்தகைய சீர்திருத்தங்களைச் சொன்னவர் வேறு யார்? பெருமானார் சாதாரண சீர்திருத்தவாதி அல்லர். சீர்திருத்தவாதிகளுக் கெல்லாம் தலைச்சிறந்த சீர்திருத்தவாதி.

**அருட்கவிஞர்**

வள்ளற்பெருமானார் அருட் கவிஞர் என்பதைப் பலவாறு எடுத்துச் சொல்லவும் வேண்டுமோ? அதற்கு அவர்அருளிய திருஅருட்பா வொன்று போதாதோ?

**அருள்ஞானி**

வள்ளற்பெருமானார் அருள்ஞானி என்பதற்குப் பற்பல பகர்தல் வேண்டுமோ? திருஅருட்பிரகாச வள்ளலார் என்று அவர் பெற்ற பேரொன்றும் போதாதோ?

பொதுவாக, நூல்செய்ய வல்லார் உரைசெய்ய வல்லாராயிருப்பதில்லை. உரைசெய்ய வல்லார் நூல்செய்ய வல்லாராயிருப்பதில்லை. செய்யுள் வல்லார் உரைநடை வல்லாரா யிருப்பதில்லை. உரைநடை வல்லார் செய்யுள் வல்லாராயிருப்பதில்லை. இயல் வல்லார் இசை வல்லாரா யிருப்பதில்லை. இசைவல்லார் இயல் வல்லாராயிருப்ப தில்லை. இலக்கியம் வல்லார் இலக்கணம் வல்லாராயிருப்ப தில்லை. இலக்கணம் வல்லார் இலக்கியம் வல்லாராயிருப்ப தில்லை. சமய வல்லார் இலக்கண இலக்கிய வல்லாராயிருப்ப தில்லை. இலக்கண விலக்கியம் வல்லார் சமயநூல் வல்லாரா யிருப்பதில்லை. இலக்கணவிலக்கியம் வல்லாரா யிருப்போர், அவற்றைப் பாடஞ்சொல்ல வல்லாராயிருப்பதில்லை. சமயநூல் வல்லாராயிருப்போர் அவற்றைப் பாடஞ் சொல்ல வல்லாராயிருப்பதில்லை. எழுத்து வல்லாராயிருப்போர் பேச்சு வல்லாரா யிருப்பதில்லை. பேச்சுவல்லார் எழுத்து வல்லாரா யிருப்பதில்லை. அருளியல் வல்லார் உலகியல் வல்லாரா யிருப்பதில்லை. உலகியல் வல்லார் அருளியல் வல்லாரா யிருப்பதில்லை. இவ்வாறு ஒன்றில் வல்லார் பிறிதொன்றில் வல்லாரல்லராதலையே யாண்டும் காண்கிறோம். அன்றும் காண்கிறோம். இன்றும் காண்கிறோம். சென்ற நூற்றாண்டிலே பெருமானார் காலத்திலே நூல் செய்தல், உரைசெய்தல், பாடஞ்சொல்லுதல், பதிப்பித்தல் என்னும் துறைகளுள் ஒவ்வொன்றில் வல்லாரே பலராக இருந்தனர். இயற்றமிழாசிரியர் என்றே சிலர் வழங்க வள்ளற்பெருமானார் ஒருவரே செய்யுள் நூல் செய்தல், உரைநடை செய்தல், செய்யுள் நூல்களுக்கு உரை செய்தல், பாடஞ்சொல்லல், பதிப்பித்தல் எனும் பலதுறைகளிலும் வல்லாராய் மொழிப்புலமை மட்டுமேயன்றி இசை மருத்துவம் முதலிய கலைப்புலமைகளிலும் வல்லாராய் இவையனைத்தினுக்கும் மேற்பட்ட அருட்புலமை முற்றினவராய்ப் பன்முக ஞானத்தோடு ஒப்பாரும் மிக்காருமின்றி விளங்குகின்றார்.

**பலவற்றில் முதன்மையும் தனிச்சிறப்பும்**

முற்கூறியவாறு நூலாசிரியராய், உரையாசிரியராய், பதிப்பாசிரியராய், பத்திரிகாசிரியராய், போதகாசிரியராய், ஞானாசிரியராய், வியாக்கியானகர்த்தராய், சித்த மருத்துவராய், சீர்திருத்தவாதியாய், அருட்கவிஞராய், அருண்ஞானியாய்ப் பன்முகஞானத்தோடு விளங்கிய பெருமானார் பலவற்றில் முதல்வராயும் தனிச்சிறப் புடையவராயும் திகழ்கின்றார்கள்.

## வள்ளற்பெருமானாரின் அருளிச்செயல்கள்

1. பாடல்கள் – திருஅருட்பா – ஆறு திருமுறைகளாக வகுக்கப் பெற்றவை
2. பாடல்கள் – ஆறு திருமுறைகளிலும் சேராதவை
3. விண்ணப்பங்கள் – இறைவனிடத்துச்செய்துகொண்டவை (உரைநடை)
4. கடிதங்கள் – தம் கைப்பட எழுதியவை
5. கட்டளைகள் – தாம் நிறுவிய நிலையங்களின் நடை முறைகள் பற்றி எழுதியவை
6. பத்திரிகைகள் – சுற்றறிக்கைகளும், அழைப்பிதழ்களும்
7. உபதேசங்கள் – உடன் கூட்டத்தாராலும் கேட்டவர்களாலும் எழுதி வைக்கப்பட்டுள்ள குறிப்புகள்
8. உரைநடை நூல்கள் –
   1. மனுமுறை கண்டவாசகம்
   2. ஜீவகாருண்ய ஒழுக்கம்.
9. உரைகள் –
   1. தமிழ் என்ற சொல்லுக்கு வரைந்த உரை
   2. பெரியபுராணம் முதற் பாடல் முதற் சொல்லாகிய உலகெலாம் என்பதற்கு வரைந்த விளக்க உரை.
   3. ஒழிவிலொடுக்கப்பாயிரவிருத்தி.
   4. தொண்ட மண்டல சதகத்தின் நூற் பெயரிலக்கணமும், கடவுள் வாழ்த்துப் பாடலுக்குச் செய்த உரையும்.
   5. பொன்வண்ணத் தந்தாதியின் இருபத்தி இரண்டாம் பாடலுக்குச் செய்த உரை.
   6. வேதாந்த தேசிகரின் குறட்பா ஒன்றுக்கு வரைந்த உரை.
10. பதிப்பித்த நூல்கள் –
   1. ஒழிவிலொடுக்கம் (1851)
   2. தொண்டமண்டல சதகம் (1855)
   3. சின்மய தீபிகை (1857)
11. பிற – பிறரது நூல்களுக்கும் பதிப்புகளுக்கும் வழங்கிய சாற்றுக்கவிகள், மருந்துச் சரக்குகளின் குண அட்டவணை முதலியன.

### மகாமந்திரம்

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

## வள்ளற்பெருமானாரின் சன்மார்க்க பெருநெறிகள்

1. கடவுள் ஒருவரே – அவரே அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர்
2. தெய்வங்கள் பெயரால் உயிர்ப்பலி செய்யாதிருத்தல் வேண்டும
3. பசி தவிர்த்தலாகிய ஜீவகாருண்ய ஒழுக்கமே மோட்ச வீட்டின் திறவுகோல்
4. உலக அமைதிக்கு, ஆன்ம நேய ஒருமைப்பாட்டைக் கடைப்பிடிக்க வேண்டும்
5. மது, மாமிசம் உண்ணாதிருத்தல் வேண்டும்
6. சாதி, சமயம், மதம், இனம், தேசம், மொழி முதலிய வேறுபாடுகள் இன்றி இருத்தல் வேண்டும்
7. இறந்தவர்களை எரிக்காது சமாதி வைக்க வேண்டும்
8. உயிர் இரக்கமே உண்மையான பிரார்த்தனையாகும்
9. எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்தல் வேண்டும்.

### மகாமந்திரம்

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

## ஆறாம் திருமுறையின் சிறப்பு

| | |
|---|---|
| முதல் ஐந்து திருமுறைகள் | பொது |
| ஆறாம் திருமுறை | சிறப்பு |
| முதல் ஐந்து திருமுறைகள் | பூர்வம் |
| ஆறாம் திருமுறை | உத்தரம் |
| முதல் ஐந்து திருமுறைகள் | ELEMENTARY |
| ஆறாம் திருமுறை | ADVANCED |
| முதல் ஐந்து திருமுறைகள் | சமயஞ் சார்ந்தவை |
| ஆறாம் திருமுறை | சமயாதீதம் |
| முதல் ஐந்து திருமுறைகள் | தோத்திரம் மிகுதி |
| ஆறாம் திருமுறை | சாத்திரக் கருத்துகள் மிகுதி |
| முதல் ஐந்து திருமுறைகள் | சாதனம் |
| ஆறாம் திருமுறை | சாத்தியம் – அனுபவம் |
| முதல் ஐந்து திருமுறைகள் | முத்தி தருவது |
| ஆறாம் திருமுறை | சித்தி தருவது |
| முதல் ஐந்து திருமுறைகள் | உருவ வழிபாடு |
| ஆறாம் திருமுறை | ஒளி வழிபாடு |
| முதல் ஐந்து திருமுறைகள் | சமய, சன்மார்க்கம் |
| ஆறாம் திருமுறை | சமரச சுத்த சன்மார்க்கம் |
| முதல் ஐந்து திருமுறைகள் | சரியை கிரியை யோக ஞான அனுபவம் |
| ஆறாம் திருமுறை | அருள் அனுபவம் |
| முதல் ஐந்து திருமுறைகள் | அடி, நடு, தொடக்கநிலை |
| ஆறாம் திருமுறை | முடி. முடிந்தநிலை |

## அருட்பெருஞ்ஜோதி அகவலின்சிறப்பு

திருமுறை ஆறினுள்ளும் சிறந்தது ஆறாம் திருமுறை

அதனுள்ளும் சிறந்தது அருட்பெருஞ்ஜோதி அகவல்

திருஅருட்பா ஒரு ஞான உடம்பு எனின்

அதன் தலை (முகம்) ஆறாம் திருமுறை

அம்முகத்திற் கண் அருட்பெருஞ்ஜோதி அகவல்

அக்கண்ணுள் மணி அருட்பெருஞ்ஜோதி மந்திரம்

## ஆறாம் திருமுறையிற் காணும் அரும்பொருள்கள்

சாகாத்தலை – வேகாக்கால் – போகாப்புனல்
சாகாக்கல்வி
மரணமிலாப் பெருவாழ்வு
செத்தாரை எழுப்புதல்
சமாதி வற்புறுத்தல்
தத்பதம் – தொம்பதம் – அசிபதம், தத்துவமசிநிலை
தத்துவநிக்கிரகம், தத்துவவெற்றி
திருக்கதவந்திறத்தல், திரைவிலகல், அமுதசித்தி
ஏமசித்தி (பொன்விளைவு)
சத்து, சித்து, ஆனந்தம்
இயற்கைஉண்மை, இயற்கைவிளக்கம், இயற்கைஇன்பம்
நயனதீக்கை, பரிசதீக்கை, வாசகதீக்கை, திருவடிதீக்கை
அத்தமத்தக சையோக தீக்கை
சிலம்பொலி கேட்டல்
ஓங்காரம், எட்டும்இரண்டும், அகரஉகரம், சிகரவகரம், பஞ்சாக்கரம்
சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம்
சிவதுரியம் குருதுரியம் பரதுரியம்
புருவமத்திய அனுபவம்
இரவுபகலற்ற இடம், வரவுபோக்கற்ற நிலை
ஆறந்தம்
உடல்பொருள் ஆவிகளை மாற்றிக்கொள்ளல்
கற்பூர அனுபவம்
சுத்ததேகம், பிரணவதேகம், ஞானதேகம்
சிவமயமாதல் (கடவுள்நிலை யறிந்து அம்மயமாதல்)
ஐந்தொழிலாற்றல்
ஆன்மநேயஒருமைப்பாடு
அகவினம், புறவினம், புலை கொலை தவிர்த்தல்
சாதி சமயங்களைக் கண்டித்தல்
மூடப் பழக்க வழக்கங்களைக் கண்டித்தல்
ஜீவகாருண்யத்தை வற்புறுத்தல்
கடவுள் ஒருவரே எனல்
சிறுதெய்வ வழிபாட்டைக் கண்டித்தல்
நாத்திகத்தைக் கண்டித்தல்

# ஆறாம் திருமுறையிற் காணும் அருந்தொடர்கள்

கொல்லா நெறியே குருவருள்நெறி
கருணையும் சிவமே பொருள்
உயிரெலாம் ஒருநீ திருநடம் புரியும் ஒருதிருப்பொது
உயிர்க்கொலையும்புலைப்பொசிப்பும் உடையவர்கள் எல்லாம்
உறவினத்தார் அல்லர் அவர் புறஇனத்தார்
ஆருயிர்கட்கெல்லாம் நான் அன்புசெயல் வேண்டும்
என்போல் இவ்வுலகம் பெறுதல் வேண்டுவனே
எல்லா உலகமும் வாழ்க
எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க
ஒருமையின் உலகெலாம் ஓங்குக
ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்
ஒருமையுளராகி உலகியல்நடத்தல் வேண்டும்
சாதியும் மதமும் சமயமும் பொய்
நால்வருணம் ஆசிரமம் ஆசாரம் முதலா நவின்ற கலைச்
சரிதமெல்லாம் பிள்ளைவிளையாட்டே
மேல்வருணம் தோல்வருணம் கண்டறிவார் இலை
எங்குலம் எம்மினம் என்பது தொண்ணூற்றா றங்குலம்
எம்மத நிலையும்................................சம்மதம்
கண்மூடி வழக்கமெலாம் மண்மூடிப் போக
கருணைஇலா ஆட்சி கடுகி ஒழிக
நாத்திகம் சொல்கின்றவர்தம் நாக்கு முடைநாக்கு
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்
என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம் தானே
பரன் அளிக்கும் தேகம் இது சுடுவது அபராதம்

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

## பதிக அட்டவணை

## ஆசிரிய வணக்கம்

வள்ளற்பெருமானாரின் மாணாக்கர்

**புராணிகர் பொன்னேரி சுந்தரம் பிள்ளை**

*இயற்றியது*

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்

தாய்மலர்ந்த பெருங்கருணைத் தத்துவனார் எங்கள்
சனிப்பிறப்பை ஒறுத்துவினைத் தனித்தொடக்கை அறுக்க
ஏய்மலர்ந்த கருணைதிரு மேனிகொண்ட காலத்(து)
எண்தோளோ இருதோளோ முக்கண்ணோ இருமை
யாய்மலர்ந்த அருட்கண்ணோ நாமம்எழுத்(து) ஐந்தோ
அன்றிஅருள் இராமலிங்க அற்புதப்பொற் பெயரோ
வாய்மலர்ந்த(து) ஈரிரண்டு மறையோமூ விரண்டு
மாமுறையோ வகுத்துரையீர் மயக்கொழிமா தவரே.

திருச்சிற்றம்பலம்

## நூற்சிறப்பு

மதுரை திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம்

*சிதம்பர சுவாமிகள்*

அருளியது

நேரிசை வெண்பா

திருச்சிற்றம்பலம்

தண்ணீர் விளக்கெரித்த தன்மைபோன் மாந்தர்கள்தம்
உண்ணீர் சிவம்விளங்க ஓங்குவிக்கும் - கண்மணியாம்
நங்கள் இராமலிங்கன் நல்லஅருட் பாமுறையைத்
துங்கமுற மாணா தொழு.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

# திருஅருட்பா

# ஆறாம் திருமுறை

## 1. பரசிவ வணக்கம்

திருச்சிற்றம்பலம்

குறள் வெண்பா

1 எல்லாம் செயல்கூடும் என்ஆணை அம்பலத்தே
எல்லாம்வல் லான்தனையே* ஏத்து. 1

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2 திருவிளங்கச் சிவயோக சித்திஎலாம் விளங்கச்
சிவஞான நிலைவிளங்கச் சிவானுபவம் விளங்கத்
தெருவிளங்கு திருத்தில்லைத் திருச்சிற்றம்பலத்தே
திருக்கூத்து விளங்க ஒளிசிறந்த திருவிளக்கே
உருவிளங்க உயிர்விளங்க உணர்ச்சியது விளங்க
உலகமெலாம் விளங்கஅருள் உதவுபெருந் தாயாம்
மருவிளங்கு குழல்வல்லி மகிழ்ந்து ஒருபால் விளங்க
வயங்குமணிப் பொதுவிளங்க வளர்ந்தசிவக் கொழுந்தே. 2

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3 அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில்புகும் அரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம்பொருளே
அன்பெனும் கரத்தமர் அமுதே
அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே
அன்பெனும் உயிர்ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள் அமைந்தபே ரொளியே
அன்புருவாம் பரசிவமே! 3

திருச்சிற்றம்பலம்

---

* தாளைஏத்து – முதற் பதிப்பு, பொன்னேரி சுந்தரம் பதிப்பு.

## 2. அருட்பெருஞ்ஜோதி அகவல்

உ

திருச்சிற்றம்பலம்

நிலைமண்டில ஆசிரியப்பா

4 அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
அருட்சிவ நெறிசார் அருட்பெரு நிலைவாழ்
அருட்சிவ பதியாம் அருட்பெருஞ்ஜோதி
ஆகம முடிமேல் ஆரண முடிமேல்
ஆகநின்று ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி
இகநிலைப் பொருளாய்ப் பரநிலைப் பொருளாய்
அகமறப் பொருந்திய அருட்பெருஞ்ஜோதி
ஈனம்இன் றிகபரத்து இரண்டின்மேற் பொருளாய்
ஆனலின் றோங்கிய அருட்பெருஞ்ஜோதி
உரைமனம் கடந்த ஒருபெரு வெளிமேல்
அரைசு செய்து ஓங்கும் அருட்பெருஞ்ஜோதி
ஊக்கமும் உணர்ச்சியும் ஒளிதரும் ஆக்கையும்
ஆக்கமும் அருளிய அருட்பெருஞ்ஜோதி
எல்லையில் பிறப்பெனும் இருங்கடல் கடத்திஎன்
அல்லலை நீக்கிய அருட்பெருஞ்ஜோதி
ஏறா நிலைமிசை ஏற்றி என்தனக்கே
ஆறாறு காட்டிய அருட்பெருஞ்ஜோதி
ஐயமும் திரிபும் அறுத்து எனது உடம்பினுள்
ஐயமும் நீக்கிய அருட்பெருஞ்ஜோதி
ஒன்றென இரண்டென ஒன்றிரண்டென இவை
அன்றென விளங்கிய அருட்பெருஞ்ஜோதி
ஓதாது உணர்ந்திட ஒளி அளித்து எனக்கே
ஆதாரமாகிய அருட்பெருஞ்ஜோதி
ஔவியம் ஆதி ஓர் ஆறுந் தவிர்த்தபோர்
அவ்வியல் வழுத்தும் அருட்பெருஞ்ஜோதி
திருநிலைத் தனிவெளி சிவவெளி எனும் ஓர்
அருள்வெளிப் பதிவளர் அருட்பெருஞ்ஜோதி
சுத்த சன்மார்க்க சுகத்தனி வெளிஎனும்
அத்தகைச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி
சுத்த மெய்ஞ்ஞான சுகோதய வெளிஎனும்
அத்து விதச்சபை அருட்பெருஞ்ஜோதி
தூய கலாந்த சுகந்தரு வெளிஎனும்
ஆய சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி
ஞானயோகாந்த நடத்திரு வெளிஎனும்
ஆனியில் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி

விமலபோதாந்தமா மெய்ப்பொருள் வெளிஎனும்
அமல சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி
பெரிய நாதாந்தப் பெருநிலை வெளிஎனும்
அரிய சிற்றம்பலத்து அருட்பெருஞ்ஜோதி
சுத்த வேதாந்தத் துரியமேல் வெளிஎனும்
அத்தகு சிற்சபை அருட்பெருஞ்ஜோதி
சுத்த சித்தாந்த சுகப்பெரு வெளிஎனும்
அத்தனிச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி
தகரமெய்ஞ்ஞானத் தனிப்பெரு வெளிஎனும்
அகர நிலைப்பதி அருட்பெருஞ்ஜோதி
தத்துவா தீத தனிப்பொருள் வெளிஎனும்
அத்திரு அம்பலத்து அருட்பெருஞ்ஜோதி
சச்சிதானந்தத் தனிப்பர வெளிஎனும்
அச்சியல் அம்பலத்து அருட்பெருஞ்ஜோதி
சாகாக் கலைநிலை தழைத்திடு வெளிஎனும்
ஆகாயத் தொளிர் அருட்பெருஞ்ஜோதி
காரண காரியம் காட்டிடு வெளிஎனும்
ஆரணச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி
ஏகம் அனேகம் எனப்பகர் வெளிஎனும்
ஆகமச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி
வேதஆகமங்களின் விளைவுகட்கு எல்லாம்
ஆதாரமாம் சபை அருட்பெருஞ்ஜோதி
என்றாதிய சுடர்க்கு இயல்நிலையாய் அது
அன்றாம் திருச்சபை அருட்பெருஞ்ஜோதி
சமயம் கடந்த தனிப்பொருள் வெளியாய்
அமையும் திருச்சபை அருட்பெருஞ்ஜோதி
முச்சுடர் களும்ஒளி முயங்குற அளித்தருள்
அச்சுடராம் சபை அருட்பெருஞ்ஜோதி
துரியமுங் கடந்த சுக பூரணம்தரும்
அரிய சிற்றம்பலத்து அருட்பெருஞ்ஜோதி
எவ்வகைச் சுகங்களும் இனிதுற அளித்தருள்
அவ்வகைச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி
இயற்கை உண்மையதாய் இயற்கையின்பமுமாம்
அயர்ப்பிலாச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி
சாக்கிரா தீதத் தனிவெளியாய் நிறைவு
ஆக்கிய சிற்சபை அருட்பெருஞ்ஜோதி
சுட்டுதற்கு அரிதாம் சுகாதீத வெளிஎனும்
அட்டமேற் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி
நவந்தவிர் நிலைகளும் நண்ணும் ஓர்நிலையாய்
அவந்தவிர் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி

உபய பக்கங்களும் ஒன்றெனக் காட்டிய
அபய சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி
சேகர மாம்பல சித்திநிலைக்கு எலாம்
ஆகர மாம்சபை அருட்பெருஞ்ஜோதி
மனாதிகட்கு அரிய மதாதீத வெளியாம்
அனாதி சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி
ஓதிநின்று உணர்ந்துணர்ந்து உணர்தற்கு அரிதாம்
ஆதி சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி,
வாரமும் அழியா வரமும் தருந்திரு
ஆரமு தாம்சபை அருட்பெருஞ்ஜோதி
இழியாப் பெருநலம் எல்லாம் அளித்தருள்
அழியாச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி
கற்பம் பலபல கழியினும் அழிவுறா
அற்புதம் தரும்சபை அருட்பெருஞ்ஜோதி
எனைத்தும் துன்புஇலா இயலளித்து எண்ணிய
அனைத்தும் தருஞ்சபை அருட்பெருஞ்ஜோதி
பாணிப் பிலதாய்ப் பரவினோர்க்கு அருள்புரி
ஆணிப்பொன் அம்பலத்து அருட்பெருஞ்ஜோதி
எம்பலம் எனத்தொழுது ஏத்தினோர்க்கு அருள்புரி
அம்பலத்து ஆடல்செய் அருட்பெருஞ்ஜோதி
தம்பர ஞான சிதம்பரம் எனும்ஓர்
அம்பரத்து ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி
எச்சபை பொதுஎன இயம்பினர் அறிஞர்கள்,
அச்சபை இடங்கொளும் அருட்பெருஞ்ஜோதி
வாடுதல் நீக்கிய மணிமன்று இடையே
ஆடுதல் வல்ல அருட்பெருஞ்ஜோதி
நாடகத் திருச்செயல் நவிற்றிடும் ஒருபேர்
ஆடகப் பொது ஒளிர் அருட்பெருஞ்ஜோதி
கற்பனை முழுவதும் கடந்து ஒளிதரும் ஓர்
அற்புதச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி
ஈன்ற நற்றாயினும் இனிய பெருந்தயவு
ஆன்ற சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி
இன்புறுநானுளத் தெண்ணியாங்கு எண்ணியாங்கு
அன்புறத் தருசபை அருட்பெருஞ்ஜோதி
எம்மையும் என்னைவிட்டு இறையும் பிரியாது
அம்மை அப்பனுமாம் அருட்பெருஞ்ஜோதி
பிறிவுற்று அறியாப் பெரும்பொரு ளாய்என்
அறிவுக்கு அறிவாம் அருட்பெருஞ்ஜோதி
சாதியும் மதமும் சமயமும் காணா
ஆதி அநாதியாம் அருட்பெருஞ்ஜோதி

தனுகர ணாதிகள் தாம்கடந்து அறியும் ஓர்
அனுபவம் ஆகிய அருட்பெருஞ்ஜோதி
உனும் உணர்வு உணர்வாய் உணர்வெலாம் கடந்த
அனுபவா தீத அருட்பெருஞ்ஜோதி
பொதுவுணர்வு உணரும் போது அலால் பிரித்தே
அது எனில் தோன்றா அருட்பெருஞ்ஜோதி
உளவினில் அறிந்தால் ஒழியமற்று அளக்கின்
அளவினில் அளவா அருட்பெருஞ்ஜோதி
என்னையும் பணிகொண்டு இறவா வரம் அளித்து
அன்னையில் உவந்த அருட்பெருஞ்ஜோதி
ஓதி ஓதாமல் உறவு எனக்கு அளித்த
ஆதியீறு இல்லா அருட்பெருஞ்ஜோதி
படி அடி வான்முடி பற்றினும் தோற்றா
அடிமுடி எனும் ஓர் அருட்பெருஞ்ஜோதி
பவனத்தின் அண்டப் பரப்பின் எங்கெங்கும்
அவனுக்கு அவனாம் அருட்பெருஞ்ஜோதி
திவள் உற்ற அண்டத் திரளின் எங்கெங்கும்
அவளுக்கு அவளாம் அருட்பெருஞ்ஜோதி
மதன் உற்ற அண்ட வரைப்பின் எங்கெங்கும்
அதனுக்கு அதுவாம் அருட்பெருஞ்ஜோதி
எப்பாலுமாய் வெளியெல்லாம் கடந்து மேல்
அப்பாலும் ஆகிய அருட்பெருஞ்ஜோதி
வல்லதாய் எல்லாம் ஆகிஎல்லாமும்
அல்லதாய் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி
எப்பொருள் மெய்ப்பொருள் என்பர்மெய்கண்டோர்
அப்பொருள் ஆகிய அருட்பெருஞ்ஜோதி
தாங்கு அகிலாண்ட சராசர நிலை நின்று
ஆங்குற விளங்கும் அருட்பெருஞ்ஜோதி
சத்தர்கள் எல்லாம் தழைத்திட அகம்புறத்து
அத்திசை விளங்கும் அருட்பெருஞ்ஜோதி
சத்திகள் எல்லாம் தழைக்க எங்கெங்கும்
அத்தகை விளங்கும் அருட்பெருஞ்ஜோதி
முந்துறும் ஐந்தொழில் மூர்த்திகள் பலர்க்கும்
ஐந்தொழில் அளிக்கும் அருட்பெருஞ்ஜோதி
பெரிதினும் பெரிதாய்ச் சிறிதினும் சிறிதாய்
அரிதினும் அரிதாம் அருட்பெருஞ்ஜோதி
காட்சியும் காணாக் காட்சியும் அதுதரும்
ஆட்சியும் ஆகிய அருட்பெருஞ்ஜோதி
இன்புறு சித்திகள் எல்லாம் புரிகவென்று
அன்புடன் எனக்கு அருள் அருட்பெருஞ்ஜோதி

இறவா வரம் அளித்து என்னை மேல் ஏற்றிய
அறவாழியாம் தனி அருட்பெருஞ்ஜோதி
நான் அந்தம் இல்லா நலம்பெற எனக்கே
ஆனந்தம் நல்கிய அருட்பெருஞ்ஜோதி
எண்ணிய எண்ணியாங்கு இயற்றுக என்றுஎனை
அண்ணி உள் ஓங்கும் அருட்பெருஞ்ஜோதி
மேயினை மெய்ப்பொருள் விளங்கினைநீ அது
ஆயினை என்று அருள் அருட்பெருஞ்ஜோதி
எண்ணிற் செழுந்தேன் இனியதெள்ளமுதுஎன
அண்ணித்து இனிக்கும் அருட்பெருஞ்ஜோதி
சிந்தையில் துன்பொழி சிவம்பெறுகஎனத்தொழில்
ஐந்தையும் எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி
எங்கெங்கு இருந்துஉயிர் ஏதெது வேண்டினும்
அங்கங்கு இருந்து அருள் அருட்பெருஞ்ஜோதி
சகமுதல் புறப்புறம் தங்கிய அகப்புறம்
அகம்புறம் முற்றுமாம் அருட்பெருஞ்ஜோதி
சிகரமும் வகரமும் சேர்தனி உகரமும்
அகரமும் ஆகிய அருட்பெருஞ்ஜோதி
உபரச வேதியின் உபயமும் பரமும்
அபரமும் ஆகிய அருட்பெருஞ்ஜோதி
மந்தணம் இது என மறுஇலா மதியால்
அந்தணர் வழுத்தும் அருட்பெருஞ்ஜோதி
எம்புயக்கனி என எண்ணுவார் இதய
அம்புயத்து அமர்ந்த அருட்பெருஞ்ஜோதி
செடியறுத் தேதிட தேகமும் போகமும்
அடியருக் கேதரும் அருட்பெருஞ்ஜோதி
துன்பு அறுத்துஒரு சிவதுரிய சுகந்தனை
அன்பருக்கே தரும் அருட்பெருஞ்ஜோதி
பொதுவது சிறப்பது புதியது பழயது என்று
அதுவது வாய்த்திகழ் அருட்பெருஞ்ஜோதி
சேதனப் பெருநிலை திகழ்தரும் ஒருபரை
ஆதனத்து ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி
ஓமயத் திருவுரு உவப்புடன் அளித்துஎனக்கு
ஆமயத் தடைதவிர் அருட்பெருஞ்ஜோதி
எப்படி எண்ணியது என்கருத்து இங்கு எனக்கு
அப்படி அருளிய அருட்பெருஞ்ஜோதி
எத்தகை விழைந்தன என்மனம் இங்கு எனக்கு
அத்தகை அருளிய அருட்பெருஞ்ஜோதி
இங்குறத்திரிந்து உளம் இளையா வகை எனக்கு
அங்கையில் கனியாம் அருட்பெருஞ்ஜோதி

பார்உயப் புரிகெனப்பணித்து எனக்கு அருளிஎன்
ஆருயிர்க்குள் ஒளிர் அருட்பெருஞ்ஜோதி
தேவிஉற்று ஒளிர்தரு திருஉருஉடன் எனது
ஆவியில் கலந்து ஒளிர் அருட்பெருஞ்ஜோதி
எவ்வழி மெய்வழி என்பவே தாகமம்
அவ்வழிஎனக்கு அருள் அருட்பெருஞ்ஜோதி
வையமும் வானமும் வாழ்த்திட எனக்கருள்
ஐயறிவு அளித்த அருட்பெருஞ்ஜோதி
சாமாறு அனைத்தும் தவிர்த்து இங்கு எனக்கே
ஆமாறு அருளிய அருட்பெருஞ்ஜோதி
சத்தியமாம் சிவ சத்தியை யீந்து எனக்கு
அத்திறல் வளர்க்கும் அருட்பெருஞ்ஜோதி
சாவா நிலை இதுதந்தனம் உனக்கே
ஆவா என அருள் அருட்பெருஞ்ஜோதி
சாதியும் மதமும் சமயமும் பொய் என
ஆதியில் உணர்த்திய அருட்பெருஞ்ஜோதி
மயர்ந்திடேல் சிறிதும் மனம் தளர்ந்து அஞ்சேல்
அயர்ந்திடேல் என்றருள் அருட்பெருஞ்ஜோதி
தேசுறத் திகழ்தரு திருநெறிப் பொருள் இயல்
ஆசறத்தெரித்த அருட்பெருஞ்ஜோதி
காட்டிய உலகெலாம் கருணை யால் சித்தியின்
ஆட்டியல் புரியும் அருட்பெருஞ்ஜோதி
எங்குலம் எம்இனம் என்ப தொண்ணூற்றாறு
அங்குலம் என்றருள் அருட்பெருஞ்ஜோதி
எம்மதம் எம் இறை என்ப உயிர்த்திரள்
அம்மதம் என்றருள் அருட்பெருஞ்ஜோதி
கூறிய கருநிலை குலவிய கீழ்மேல்
ஆறியல் என உரை அருட்பெருஞ்ஜோதி
எண்தர முடியாது இலங்கிய பற்பல
அண்டமும் நிறைந்தொளிர் அருட்பெருஞ்ஜோதி
சார் உயிர்க்கு எல்லாம் தாரக மாம்பரை
ஆருயிர்க்கு உயிராம் அருட்பெருஞ்ஜோதி
வாழிநீடூழி வாழியென்று ஓங்குபேர்
ஆழியை அளித்த அருட்பெருஞ்ஜோதி
மாய்ந்தவர் மீட்டும் வருநெறி தந்துஇதை
ஆய்ந்திடு என்றுரைத்த அருட்பெருஞ்ஜோதி
எச்சம் நினைக்கிலை எல்லாம் பெறுகஎன்று
அச்சம் தவிர்த்த என் அருட்பெருஞ்ஜோதி
நீடுகநீயே நீள்உலகு அனைத்தும் நின்று
ஆடுக என்ற என் அருட்பெருஞ்ஜோதி

முத்திறல் வடிவமும் முன்னிஆங்கு எய்துறும்
அத்திறல் எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி
மூவகைச் சித்தியின் முடிபுகள் முழுவதும்
ஆவகை எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி
கரும சித்திகளின் கலைபல கோடியும்
அரசுற எனக்கருள்அருட்பெருஞ்ஜோதி
யோகசித்திகள் வகை உறுபல கோடியும்
ஆக என்று எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி
ஞான சித்தியின் வகைநல்விரிவு அனைத்தும்
ஆனி யின்று எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி
புடைஉறு சித்தியின் பொருட்டே முத்தியை
அடைவது என்று அருளிய அருட்பெருஞ்ஜோதி
முத்தி என்பது நிலைமுன் உறுசாதனம்
அத்தக என்றஎன் அருட்பெருஞ்ஜோதி
சித்திஎன்பது நிலைசேர்ந்த அநுபவம்
அத்திறல் என்ற என் அருட்பெருஞ்ஜோதி
ஏகசிற் சித்தியே இயல்உற அனேகம்
ஆகியது என்ற என் அருட்பெருஞ்ஜோதி
இன்பசித்தியின் இயல்ஏகம் அனேகம்
அன்பருக்கு என்ற என் அருட்பெருஞ்ஜோதி
எட்டு இரண்டு என்பன இயலும் முற்படியென
அட்டநின்று அருளிய அருட்பெருஞ்ஜோதி
இப்படி கண்டனை இனி உறுபடிஎலாம்
அப்படியே எனும் அருட்பெருஞ்ஜோதி
படிமுடி கடந்தனை பார் இதுபார் என
அடிமுடி காட்டிய அருட்பெருஞ்ஜோதி
ஜோதியுட் ஜோதியின் சொருபமே அந்தம்
ஆதி என்று அருளிய அருட்பெருஞ்ஜோதி
இந்த சிற்ஜோதியின் இயல்உறு ஆதி
அந்தம் என்று அருளிய அருட்பெருஞ்ஜோதி
ஆதியும் அந்தமும் அறிந்தனை நீயே
ஆதி என்று அருளிய அருட்பெருஞ்ஜோதி
நல்அமுது என் ஒரு நா உளம் காட்டி என்
அல்லலை நீக்கிய அருட்பெருஞ்ஜோதி
கற்பகம் என் உளங் கைதனில் கொடுத்தே
அற்புதம் இயற்றெனும் அருட்பெருஞ்ஜோதி
கதிர் நலம் என் இரு கண்களிற் கொடுத்தே
அதிசயம் இயற்றெனும் அருட்பெருஞ்ஜோதி
அருள் ஒளி என்தனி அறிவினில் விரித்தே
அருள்நெறி விளக்கெனும் அருட்பெருஞ்ஜோதி

பரை ஒளி என்மனப் பதியினில் விரித்தே
அரசது இயற்றெனும் அருட்பெருஞ்ஜோதி
வல்லப சத்திகள் வகை எலாம் அளித்து எனது
அல்லலை நீக்கிய அருட்பெருஞ்ஜோதி
ஆரியல் அகம்புறம் அகப்புறம் புறப்புறம்
ஆரமுது எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி
சூரிய சந்திர ஜோதியுட் ஜோதி என்று
ஆரியர் புகழ்தரும் அருட்பெருஞ்ஜோதி
பிறிவேது இனி உனைப் பிடித்தனம் உனக்குநம்
அறிவே வடிவெனும் அருட்பெருஞ்ஜோதி
எஞ்சேல் உலகினில் யாதொன்று பற்றியும்
அஞ்சேல் என்றருள் அருட்பெருஞ்ஜோதி
மாண்டுழ லாவகை வந்து இளங்காலையே
ஆண்டுகொண்டருளிய அருட்பெருஞ்ஜோதி
பற்றுகள் அனைத்தையும் பற்றறத் தவிர்த்து எனது
அற்றமும் நீக்கிய அருட்பெருஞ்ஜோதி
சமயம் குலமுதல் சார்பெலாம் விடுத்த
அமயம் தோன்றிய அருட்பெருஞ்ஜோதி
வாய்தற்கு உரித்தெனும் மறை ஆகமங்களால்
ஆய்தற்கு அரிய அருட்பெருஞ்ஜோதி
எல்லாம் வல்லசித்தெனக்கு அளித்து எனக்குஉனை
அல்லாது இலையெனும் அருட்பெருஞ்ஜோதி
நவைஇலா உளத்தில் நாடிய நாடிய
அவைஎலாம் அளிக்கும் அருட்பெருஞ்ஜோதி
கூற்றுதைத்து என்பால் குற்றமுங் குணங்கொண்டு
ஆற்றல்மிக் களித்த அருட்பெருஞ்ஜோதி
நன்று அறிவு அறியா நாயினேன் தனையும்
அன்று வந்து ஆண்ட அருட்பெருஞ்ஜோதி
நாயினும் கடையேன் ஈயினும் இழிந்தேன்
ஆயினும் அருளிய அருட்பெருஞ்ஜோதி
தோத்திரம் புகலேன் பாத்திரம் அல்லேன்
ஆத்திரம் அளித்த அருட்பெருஞ்ஜோதி
எச்சோ தனைகளும் இயற்றாது எனக்கே
அச்சோ என்றருள் அருட்பெருஞ்ஜோதி
ஏறாநிலைநடு ஏற்றி என்றனை ஈண்டு
ஆறாறு கடத்திய அருட்பெருஞ்ஜோதி
தாபத்துயரம் தவிர்த்து உலகுஉறும் எலா
ஆபத்தும் நீக்கிய அருட்பெருஞ்ஜோதி
மருட்பகை தவிர்த்துஎனை வாழ்வித்து எனக்கே
அருட்குரு ஆகிய அருட்பெருஞ்ஜோதி

உருவமும் அருவமும் உபயமும் ஆகிய
அருள்நிலை தெரித்த அருட்பெருஞ்ஜோதி
இருளறுத்து என்உளத்து எண்ணியாங்கு அருளி
அருள் அமுது அளித்த அருட்பெருஞ்ஜோதி
தெருள்நிலைஇது எனத்தெருட்டி என்னுளத்திருந்து
அருள்நிலை காட்டிய அருட்பெருஞ்ஜோதி
பொருட்பதம் எல்லாம் புரிந்துமேல் ஓங்கிய
அருட்பதம் அளித்த அருட்பெருஞ்ஜோதி
உருள்சகடு ஆகிய உளஞ்சலியாவகை
அருள்வழி நிறுத்திய அருட்பெருஞ்ஜோதி
வெருள்மன மாயை வினைஇருள் நீக்கிஉள்
அருள் விளக்கேற்றிய அருட்பெருஞ்ஜோதி
சுருள்விரி வுடைமனச் சுழல்எலாம் அறுத்தே
அருள்ஒளி நிரப்பிய அருட்பெருஞ்ஜோதி
விருப்போடு இகல்உறு வெறுப்பும் தவிர்த்தே
அருட்பேறு அளித்த அருட்பெருஞ்ஜோதி
அருட்பேர் தரித்து உலகனைத்தும் மலர்ந்திட
அருட்சீர் அளித்த அருட்பெருஞ்ஜோதி
உலகெலாம் பரவஎன் உள்ளத்து இருந்தே
அலகிலா ஒளிசெய் அருட்பெருஞ்ஜோதி
விண்ணினுள் விண்ணாய் விண்ணடு விண்ணாய்
அண்ணி நிறைந்த அருட்பெருஞ்ஜோதி
விண்உறு விண்ணாய் விண்நிலை விண்ணாய்
அண்ணி வயங்கும் அருட்பெருஞ்ஜோதி
காற்றினுட் காற்றாய்க் காற்றிடைக் காற்றாய்
ஆற்றலின் ஓங்கும் அருட்பெருஞ்ஜோதி
காற்றுறு காற்றாய்க் கானிலைக் காற்றாய்
ஆற்ற விளங்கும் அருட்பெருஞ்ஜோதி
அனலினுள் அனலாய் அனல் நடு அனலாய்
அனல்உற விளங்கும் அருட்பெருஞ்ஜோதி
அனல்உறும் அனலாய் அனல்நிலை அனலாய்
அனல்உற வயங்கும் அருட்பெருஞ்ஜோதி
புனலினுள் புனலாய்ப் புனலிடைப் புனலாய்
அனை என வயங்கும் அருட்பெருஞ்ஜோதி
புன்லுறு புனலாய்ப் புனல் நிலைப் புனலாய்
அனை எனப் பெருகும் அருட்பெருஞ்ஜோதி
புவியின் உட் புவியாய்ப் புவிநடுப் புவியாய்
அவைதர வயங்கும் அருட்பெருஞ்ஜோதி
புவி உறு புவியாய்ப் புவிநிலைப் புவியாய்
அவைகொள விரிந்த அருட்பெருஞ்ஜோதி

விண்நிலை சிவத்தின் வியன் நிலை அளவி
அண் உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
வளிநிலை சத்தியின் வளர்நிலை அளவி
அளியுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
நெருப்பது நிலைநடுநிலை எலாம் அளவி
அருப்பிட வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நீர்நிலை திரைவளர் நிலைதனை அளவி
ஆர்வுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
புவிநிலை சுத்தமாம் பொற்பதி அளவி
அவை உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி

மண்ணினில் திண்மையைவகுத்து அதில்கிடக்கை
அண்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
மண்ணினில் பொன்மை வகுத்து அதில்ஐமையை
அண்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
மண்ணினில் ஐம்பூவகுத்த அதில் ஐந்திறம்
அண்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
மண்ணினில் நாற்றம் வகுத்தது பல்வகை
அண்உறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி
மண்ணினில் பற்பல வகைகருநிலை இயல்
அண்உறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி
மண்ணினில் ஐந்தியல் வகுத்து அதில் பல்பயன்
அண்உற வகுத்த் அருட்பெருஞ்ஜோதி
மண்ணிடை அடிநிலை வகுத்து அதில் பன்னிலை
அண்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
மண்ணில் ஐந்தைந்துவகையும் கலந்துகொண்டு
அண்உறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி
மண்இயற் சத்திகள் மண்செயற் சத்திகள்
அண்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
மண்உருச் சத்திகள் மண்கலைச் சத்திகள்
அண்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
மண்ஒளிச் சத்திகள் மண்கருச் சத்திகள்
அண்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
மண்கணச் சத்திகள் வகைபல பலவும்
அண்கொள அமைத்த அருட்பெருஞ்ஜோதி
மண்நிலைச் சத்தர்கள் வகைபல பலவும்
அண்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
மண்கரு உயிர்த்தொகை வகைவிரி பலவா
அண்கொள அமைத்த அருட்பெருஞ்ஜோதி
மண்ணினில் பொருள்பல வகைவிரி வெவ்வேறு
அண்உறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி

மண்உறு நிலைபல வகுத்து அதில் செயல்பல
அண்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
மண்ணிடைப் பக்குவம் வகுத்த அதில்பயன்பல
அண்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
மண்இயல் பலபல வகுத்து அதில் பிறவும்
அண்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி

நீரினில் தண்மையும் நிகழ்ஊ ரொழுக்கமும்
ஆர்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நீரினில் பசுமையை நிறுத்தி அதில்பல
ஆருற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நீரிடைப் பூவியல் நிகழுறு திறவியல்
ஆர்தர வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நீரினில் சுவைநிலை நிரைத்து அதில் பல்வகை
ஆருறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி
நீரினில் கருநிலை நிகழ்த்திய பற்பல
ஆர்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நீரிடை நான்குஇயல் நிலவுவித்து அதில்பல
ஆர்தர வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நீரிடை அடிநடு நிலைஉறவகுத்து அனல்
ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி
நீரிடை ஒளிஇயல் நிகழ்பல குணஇயல்
ஆர்தர வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நீரிடைச் சத்திகள் நிகழ்வகை பலபல
ஆர்தர வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நீரினில் சத்தர்கள் நிறைவகை உறைவகை
ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி
நீரிடை உயிர்பல நிகழ்உறு பொருள்பல
ஆர்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
நீரிடை நிலைபல நிலைஉறு செயல்பல
ஆர்கொள வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நீர்உறு பக்குவ நிறைவுறு பயன்பல
ஆர்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
நீர்இயல் பலபல நிறைத்து அதில் பிறவும்
ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி

தீயினில் சூட்டியல் சேர்தரச்செலவு இயல்
ஆய்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
தீயினில் வெண்மைத் திகழ்இயல் பலவா
ஆய்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
தீயிடைப் பூஎலாம் திகழ்உறு திறம்எலாம்
ஆய்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி

தீயிடை ஒளியே திகழ்உற அமைத்து அதில்
ஆய்பல வகுத்த அருட்பெருஞ்ஜோதி
தீயிடை அருநிலை திருநிலை கருநிலை
ஆய்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
தீயிடை மூவியல் செறிவித்து அதிற்பல
ஆய்வகை அமைத்த அருட்பெருஞ்ஜோதி
தீயிடை நடுநிலை திகழ்நடு நடுநிலை
ஆய்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
தீயிடைப் பெருந்திறல் சித்திகள் பலபல
ஆய்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
தீயிடைச் சித்துகள் செப்புறும் அனைத்தும்
ஆய்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
தீயிடைச் சத்திகள் செறிதரு சத்தர்கள்
ஆய்பல வகுத்த அருட்பெருஞ்ஜோதி
தீயிடை உயிர்பல திகழ்உறு பொருள்பல
ஆய்வகை அமைத்த அருட்பெருஞ்ஜோதி
தீயிடை நிலைபல திகழ்செயல் பலபயன்
ஆய்பல வகுத்த அருட்பெருஞ்ஜோதி
தீயினில் பக்குவம் சேர்குணம் இயற்குணம்
ஆய்பல வகுத்த அருட்பெருஞ்ஜோதி
தீயிடை உருக்கியல் சிறப்பியல் பொதுஇயல்
ஆய்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
தீஇயல் பலபல செறித்து அதில்பலவும்
ஆய்உறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி

காற்றிடை அசை இயல் கலைஇயல் உயிர் இயல்
ஆற்றிலின் அமைத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றிடைப்பூ இயல் கருதுறு திறவியல்
ஆற்றலின் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றினில் ஊறியல் காட்டுறு பலபல
ஆற்றலின் அமைத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றினில் பெருநிலை கருநிலை அளவில
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றிடை ஈரியல் காட்டி அதிற்பல
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றினில் இடைநடு கடைநடு அகம்புறம்
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றினில் குணம்பல கணம்பல வணம்பல
ஆற்றலின் அமைத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றிடைச் சத்திகள் கணக்கில உலப்பில
ஆற்றவும் அமைத்த அருட்பெருஞ்ஜோதி

காற்றிடைச் சத்தர்கள் கணிதம் கடந்தன
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றிடை உயிர்பல கதிபல கலைபல
ஆற்றலின் அமைத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றிடை நானிலைக் கருவிகள் அனைத்தையும்
ஆற்றுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றிடை உணரியல் கருதியல் ஆதிய
ஆற்றுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றிடைச் செயல் எலாம் கருதியபயன் எலாம்
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றினில் பக்குவக் கதியெலாம் விளைவித்து
ஆற்றலின் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றினில் காலம் கருதுறு வகைஎலாம்
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
காற்றியல் பலபல கணித்து அதில்பிறவும்
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
வெளியிடைப் பகுதியின் விரிவியல் அணைவியல்
அளிஉற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
வெளியிடைப் பூஎலாம் வியப்புறு திறன்எலாம்
அளிஉற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
வெளியினில் ஒலிநிறை வியன்நிலை அனைத்தும்
அளிஉற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
வெளியிடைக் கருநிலை விரிநிலை அருநிலை
அளிகொள வகுத்த அருட்பெருஞ்ஜோதி
வெளியிடை முடிநிலை விளங்குற வகுத்தே
அளிபெற விளக்கும் அருட்பெருஞ்ஜோதி
வெளியினில் சத்திகள் வியப்புற சத்தர்கள்
அளிஉற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
வெளியிடை ஒன்றே விரித்து அதிற் பற்பல
அளிஉற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
வெளியிடை பலவே விரித்து அதிற் பற்பல
அளிதர அமைத்த அருட்பெருஞ்ஜோதி
வெளியிடை உயிர்இயல் வித்தியல் சித்தியல்
அளிபெற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
வெளியின் அனைத்தையும் விரித்து அதில் பிறவும்
அளிஉற அமைத்த அருட்பெருஞ்ஜோதி

புறநடு வொடுகடை புணர்ப்பித்து ஒருமுதல்
அறம்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
புறந்தலை நடுவொடு புணர்ப்பித்து ஒருகடை
அறம்பெற வகுத்த அருட்பெருஞ்ஜோதி

அகப்புற நடுக்கடை அணைவால் புறமுதல்
அகப்பட வகுத்த அருட்பெருஞ்ஜோதி
அகப்புற நடுமுதல் அணைவால் புறக்கடை
அகப்பட அமைத்த அருட்பெருஞ்ஜோதி
கருது அக நடுவொடு கடைஅணைந்து அகமுதல்
அருள்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
தணி அக நடுவொடு தலை அணைந்து அகக்கடை
அணிஉற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
அகநடு புறக்கடை அணைந்து அகப்புறமுதல்
அகம்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
அகநடு புறத்தலை அணைந்து அகப்புறக்கடை
அகலிடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி
அகநடு அதனால் அகப்புற நடுவை
அகம் அற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
அகப்புற நடுவால் அணிபுற நடுவை
அகப்பட அமைத்த அருட்பெருஞ்ஜோதி
புறநடு அதனால் புறப்புற நடுவை
அறம்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
புகல் அரும் அகண்ட பூரண நடுவால்
அகநடு வகுத்த அருட்பெருஞ்ஜோதி
புறப்புறக் கடைமுதல் புணர்ப்பால் புறப்புறம்
அறக்கணம் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
புறத்தியல் கடைமுதல் புணர்ப்பால் புறத்துறும்
அறக்கணம் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
அகப்புறக் கடைமுதல் அணைவால் அக்கணம்
அகத்துற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
அகக்கடைமுதல் புணர்ப்பு அதனால் அகக்கணம்
அகத்திடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி

வானிடைக் காற்றும் காற்றிடை நெருப்பும்
ஆனற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நெருப்பிடை நீரும் நீரிடைப் புவியும்
அருப்பிட வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நீர்மேல் நெருப்பும் நெருப்பின்மேல் உயிர்ப்பும்
ஆர்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
புனல்மேல் புவியும் புவிமேல் புடைப்பும்
அனல்மேல் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பகுதிவான் வெளியில் படர்ந்தமா பூத
அகல்வெளி வகுத்த அருட்பெருஞ்ஜோதி

உயிர்வெளி இடையே உரைக்கரும் பகுதி
அயவெளி வகுத்த அருட்பெருஞ்ஜோதி
உயிர்வெளி அதனை உணர்கலை வெளியில்
அயல் அற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
கலைவெளி அதனைக் கலப்பறு சுத்த
அலர்வெளி வகுத்த அருட்பெருஞ்ஜோதி
சுத்தநல் வெளியைத் துரிசறு பரவெளி
அத்திடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பரவெளி அதனைப் பரம்பர வெளியில்
அரசுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பரம்பர வெளியைப் பராபர வெளியில்
அரந்தெற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பராபர வெளியைப் பகர்பெரு வெளியில்
அராவற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பெருவெளி அதனைப் பெருஞ்சுக வெளியில்
அருள்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
குணமுதல் கருவிகள் கூடிய பகுதியில்
அணைவுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
மனமுதல் கருவிகள் மன்உயிர் வெளியிடை
அனமுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
காலமே முதலிய கருவிகள் கலைவெளி
ஆலுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
துரிசறு கருவிகள் சுத்தநல் வெளியிடை
அரசுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
இவ்வெளி எல்லாம் இலங்க அண்டங்கள்
அவ்வயின் அமைத்த அருட்பெருஞ்ஜோதி
ஓங்கிய அண்டம் ஒளிபெற முச்சுடர்
ஆங்கிடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி
சிருட்டித் தலைவரைச் சிருட்டி அண்டங்களை
அருள் திறல் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
காவல்செய் தலைவரைக் காவல் அண்டங்களை
ஆவகை அமைத்த அருட்பெருஞ்ஜோதி
அழித்தல்செய் தலைவரை அவர் அண்டங்களை
அழுக்கற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
மறைத்திடு தலைவரை மற்றும் அண்டங்களை
அறத்தொடு வகுத்த அருட்பெருஞ்ஜோதி
தெளிவுசெய் தலைவரைத் திகழும் அண்டங்களை
அளிபெற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
விந்துவாம் சத்தியை விந்தின் அண்டங்களை
அந்திறல் வகுத்த அருட்பெருஞ்ஜோதி

ஓங்கார சத்திகள் உற்ற அண்டங்களை
ஆங்காக அமைத்த அருட்பெருஞ்ஜோதி
சத்தத் தலைவரைச் சாற்றும் அண்டங்களை
அத்தகை வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நாதமாம் பிரமமும் நாத அண்டங்களும்
ஆதரம் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பகர்பரா சத்தியைப் பதியும் அண்டங்களை
அகம்அற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பரசிவ பதியைப் பரசிவாண்டங்களை
அரசுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
எண்ணில்பல் சத்தியை எண்ணில் அண்டங்களை
அண்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
அளவில்பல் சத்தரை அளவில் அண்டங்களை
அளவுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
உயிர்வகை அண்டம் உலப்பில எண்ணில
அயர்வற வகுத்த அருட்பெருஞ்ஜோதி

களவில கடல்வகை கங்கில கரையில
அளவில வகுத்த அருட்பெருஞ்ஜோதி
கடலவை அனைத்தும் கரையின்றி நிலையுற
அடலனல் அமைத்த அருட்பெருஞ்ஜோதி
கடல்களும் மலைகளும் கதிகளும் நதிகளும்
அடல்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
கடலிடைப் பல்வளம் கணித்து அதில் பல்உயிர்
அடலுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி

மலையிடைப் பல்வளம் வகுத்து அதில் பல்உயிர்
அலைவற வகுத்த அருட்பெருஞ்ஜோதி

ஒன்றினில் ஒன்றே ஒன்றிடை ஆயிரம்
அன்றற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பத்திடை ஆயிரம் பகர் அதில்கோடி
அத்துற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
நூற்றிடை இலக்கம் நுவல் அதில் அனந்தம்
ஆற்றிடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி
கோடியில் அனந்த கோடி பல்கோடி
ஆடுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி

வித்தியல் ஒன்றாய் விளைவியல் பலவா
அத்தகை அமைத்த அருட்பெருஞ்ஜோதி
விளைவியல் அனைத்தும் வித்திடை அடங்க
அளவு செய்து அமைத்த அருட்பெருஞ்ஜோதி

வித்தும்பதமும் விளையும் உப கரிப்பும்
அத்திறல் அமைத்த அருட்பெருஞ்ஜோதி
வித்திடை முளையும் முளையிடை விளைவும்
அத்தக அமைத்த அருட்பெருஞ்ஜோதி
வித்தினுள் வித்தும் வித்ததில் வித்தும்
அத்திறம் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
விளைவினுள் விளைவும் விளைவதில் விளைவும்
அளையுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
முளையதின் முளையும் முளையினுள் முளையும்
அளைதர அமைத்த அருட்பெருஞ்ஜோதி
வித்திடைப் பதமும் பதத்திடை வித்தும்
அத்துற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
பதமதிற் பதமும் பதத்தினுள் பதமும்
அதிர்வற வகுத்த அருட்பெருஞ்ஜோதி

ஒற்றுமை வேற்றுமை உரிமைகள் அனைத்தும்
அற்றென வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பொருள்நிலை உறுப்பியல் பொதுவகை முதலிய
அருள்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
உறவினில் உறவும் உறவினில் பகையும்
அறன்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பகையினிற் பகையும் பகையினில் உறவும்
அகைவுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பாதியும் முழுதும் பதிசெயும் அந்தமும்
ஆதியும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
துணையும் நிமித்தமும் துலங்கதின் அதுவும்
அணைவுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
உருவதின் உருவும் உருவினுள் உருவும்
அருள்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
அருவினுள் அருவும் அருவதில் அருவும்
அருள்இயல் அமைத்த அருட்பெருஞ்ஜோதி
கரணமும் இடமும் கலைமுதல் அணையும் ஓர்
அரண்நிலை வகுத்த அருட்பெருஞ்ஜோதி
உருவதில் அருவும் அருவதில் உருவும்
அருளுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
வண்ணமும் வடிவும் மயங்கிய வகைபல
அண்உற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
சிறுமையில் சிறுமையும் சிறுமையில் பெருமையும்
அறிதர வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பெருமையின் பெருமையும் பெருமையில் சிறுமையும்
அருள்நிலை வகுத்த அருட்பெருஞ்ஜோதி

திண்மையில் திண்மையும் திண்மையில் நேர்மையும்
அண்மையின் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
மென்மையில் மென்மையும் மென்மையில் வன்மையும்
அன்மை அற்றமைத்த அருட்பெருஞ்ஜோதி
அடியினுள் அடியும் அடியிடை அடியும்
அடிஉற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
நடுவினுள் நடுவும் நடுவதில் நடுவும்
அடர்வுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
முடியினுள் முடியும் முடியினில் முடியும்
அடர்தர அமைத்த அருட்பெருஞ்ஜோதி

அகப்பூ அகவுறுப் பாக்க அதற்கவை
அகத்தே வகுத்த அருட்பெருஞ்ஜோதி
புறப்பூ புறத்தில் புனையுரு வாக்கிட
அறத்துடன் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
அகப்புறப் பூ அகப் புற உறுப் பியற்றிட
அகத்திடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி
புறப்புறப் பூவதில் புறப்புற உறுப்புற
அறத்திடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி

பாரிடை வேர்வையில் பையிடை முட்டையில்
ஆருயிர் அமைக்கும் அருட்பெருஞ்ஜோதி
ஊர்வன பறப்பன உறுவன நடப்பன
ஆர்வுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
அசைவில அசைவுள ஆருயிர்த் திரள்பல
அசலற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
அறிவொரு வகைமுதல் ஐவகை அறுவகை
அறிதர வகுத்த அருட்பெருஞ்ஜோதி
வெவ்வேறு இயலொடு வெவ்வேறு பயன் உற
அவ்வாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி
சித்திர விசித்திர சிருட்டிகள் பலபல
அத்தகை வகுத்த அருட்பெருஞ்ஜோதி

பெண்ணினுள் ஆணும் ஆணினுள் பெண்ணும்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பெண்ணினுள் மூன்றும் ஆணினுள் இரண்டும்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பெண்ணிடை நான்கும் ஆணிடை மூன்றும்
அண்ணுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
பெண்இயல் ஆணும் ஆண்இயல் பெண்ணும்
அண்உற அமைத்த அருட்பெருஞ்ஜோதி

பெண்திறல் புறத்தும் ஆண்திறல் அகத்தும்
அண்டுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பெண்இயல் மனமும் ஆண்இயல் அறிவும்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி
தனித்தனி வடிவினும் தக்க ஆண் பெண் இயல்
அனைத்துற வகுத்த அருட்பெருஞ்ஜோதி

உனற்கரும் உயிர்உள உடல்உள உலகுள
அனைத்தையும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி
ஓவுறா எழுவகை உயிர் முதல் அனைத்தும்
ஆவகை வகுத்த அருட்பெருஞ்ஜோதி
பைகளில் முட்டையில் பாரினில் வேர்வினில்
ஐபெற அமைத்த அருட்பெருஞ்ஜோதி
தாய் கருப்பையினுள் தங்கிய உயிர்களை
ஆய்வுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
முட்டைவாய்ப் பயிலும் முழுஉயிர்த் திரள்களை
அட்டமே காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
நிலம் பெறும் உயிர்வகை நீள்குழு அனைத்தும்
அலம்பெறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
வேர்வுற உதித்த மிகும் உயிர்த் திரள்களை
ஆர்வுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
உடல்உறு பிணியால் உயிர் உடல் கெடாவகை
அடல்உறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
சிசு முதல் பருவச் செயல் களின் உயிர்களை
அசைவறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
உயிர்உறும் உடலையும் உடல்உறும் உயிரையும்
அயர்வறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
பாடுறும் அவத்தைகள் பலவினும் உயிர்களை
ஆடுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
முச்சுடர் ஆதியால் எச்சக உயிரையும்
அச்சறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
வான்முகில் சத்தியால் மழைபொழி வித்து உயிர்
ஆனறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
இன்புறு சத்தியால் எழில்மழை பொழிவித்து
அன்புறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
எண்இயல் சத்தியால் எல்லா உலகினும்
அண் உயிர் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
அண்டப் புறப்புற அமுதம் பொழிந்து உயிர்
அண்டுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
தேவரை எல்லாம் திகழ்புற அமுதளித்து
ஆவகை காத்தருள் அருட்பெருஞ்ஜோதி

அகப்புற அமுதளித்து ஐவர் ஆதிகளை
அகப்படக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
தருமக அமுதால் சத்தி சத்தர்களை
அருளினிற் காக்கும் அருட்பெருஞ்ஜோதி
காலமும் நியதியும் காட்டி எவ்வுயிரையும்
ஆலுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
விச்சையை இச்சையை விளைவித்து உயிர்களை
அச்சறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
போகமும் களிப்பும் பொருந்துவித்து உயிர்களை
ஆகமுட் காக்கும் அருட்பெருஞ்ஜோதி
கலையறிவு அளித்துக் களிப்பினில் உயிரெலாம்
அலைவறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
விடய நிகழ்ச்சியால் மிகுமுயிர் அனைத்தையும்
அடைவுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
துன்பளித்து ஆங்கே சுகமளித்து உயிர்களை
அன்புறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
கரணேந் தியத்தால் களிப்புற உயிர்களை
அரண்நேர்ந்து அளித்தருள் அருட்பெருஞ்ஜோதி
எத்தகை எவ்வுயிர் எண்ணின அவ்வுயிர்க்கு
அத்தகை அளித்தருள் அருட்பெருஞ்ஜோதி
எப்படி எவ்வுயிர் எண்ணின அவ்வுயிர்க்கு
அப்படி அளித்தருள் அருட்பெருஞ்ஜோதி
ஏங்காது உயிர்த்திரள் எங்கெங்கு இருந்தன
ஆங்காங்கு அளித்தருள் அருட்பெருஞ்ஜோதி
சொல்லுறும் அசுத்தத் தொல்லுயிர்க் கவ்வகை
அல்லலில் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
சுத்தமும் அசுத்தமும் தோயுயிர்க் கிருமையின்
அத்தகை காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
வாய்ந்திடும் சுத்த வகையுயிர்க்கு ஒருமையின்
ஆய்ந்துறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி
எவையெலாம் எவைஎலாம் ஈண்டின ஈண்டின
அவைஎலாம் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி

அண்டத் துரிசையும் அகிலத் துரிசையும்
அண்டற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
பிண்டத் துரிசையும் பேருயிர்த் துரிசையும்
அண்டற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
உயிருறு மாயையின் உறுவிரிவு அனைத்தும்
அயிரற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
உயிருறும் இருவினை உறுவிரிவு அனைத்தும்
அயர்வற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி

காமப் புடைப்புயிர் கண் தொடராவகை
ஆமற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
பொங்குறு வெகுளிப் புடைப்புகள் எல்லாம்
அங்கற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
மதம்புரை மோகமும் மற்றவும் ஆங்காங்கு
அதம்பெற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
வடுவுறும் அசுத்த வாதனை அனைத்தையும்
அடர்பற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
சுத்தமும் அசுத்தமும் தோய்ந்தவா தனைகளை
அத்தகை அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
நால்வயிற் றுரிசும் நண்ணுயிர் ஆதியில்
ஆலற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
நால்வயிற் படைப்பும் நால்வயிற் காப்பும்
ஆலற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
மூவிடத்து இருமையின் முன்னிய தொழிற்கரில்
ஆவிடத்து அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
மூவிட மும்மையின் முன்னிய தொழிற்கரில்
ஆவிடம் அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
தத்துவச் சேட்டையும் தத்துவத் துரிசும்
அத்தகை அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
சுத்தமா நிலையில் சூழுறு விரிவை
அத்தகை அடக்கும் அருட்பெருஞ்ஜோதி

கரைவின்மா மாயைக் கரும்பெரும் திரையால்
அரைசது மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி
பேருறு நீலப்பெருந்திரை அதனால்
ஆருயிர் மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி
பச்சைத் திரையால் பரவெளி அதனை
அச்சுற மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி
செம்மைத் திரையால் சித்துறு வெளியை
அம்மையின் மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி
பொன்மைத் திரையால் பொருளுறு வெளியை
அன்மையின் மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி
வெண்மைத் திரையால் மெய்ப்பதி வெளியை
அண்மையின் மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி
கலப்புத் திரையால் கருது அனுபவங்களை
அலப்புற மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி
விடய நிலைகளை வெவ்வேறு திரைகளால்
அடர்புற மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி
தத்துவ நிலைகளைத் தனித்தனித் திரையால்
அத்திறம் மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி

திரைமறைப்பெல்லாம் தீர்த்து ஆங்காங்கே
அரசுறக் காட்டும் அருட்பெருஞ்ஜோதி

தோற்றமா மாயைத் தொடர்பறுத்து அருளின்
ஆற்றலைக் காட்டும் அருட்பெருஞ்ஜோதி
சுத்தமா மாயைத் தொடர்பறுத்து அருளை
அத்தகை காட்டும் அருட்பெருஞ்ஜோதி
எனைத்து ஆணவமுதல் எல்லாம் தவிர்த்தே
அனுக்கிர கம்புரி அருட்பெருஞ்ஜோதி
விடய மறைப்பெலாம் விடுவித்து உயிர்களை
அடைவுறத் தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி
சொருப மறைப்பெலாம் தொலைப்பித்து உயிர்களை
அருளினில் தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி
மறைப்பின் மறந்தன வருவித்து ஆங்கே
அறத்தொடு தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி
எவ்வகை உயிர்களும் இன்புற ஆங்கே
அவ்வகை தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி
கடவுளர் மறைப்பைக் கடிந்தவர்க் கின்பம்
அடையுறத் தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி
சத்திகள்மறைப்பைத் தவிர்த்தவர்க் கின்பம்
அத்துறத் தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி
சத்தர்கள் மறைப்பைத் தவிர்த்தவர்க் கின்பம்
அத்தகை தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி
படைக்கும் தலைவர்கள் பற்பல கோடியை
அடைப்புறப் படைக்கும் அருட்பெருஞ்ஜோதி
காக்கும் தலைவர்கள் கணக்கில் பல் கோடியை
ஆக்குறக் காக்கும் அருட்பெருஞ்ஜோதி
அடக்கும் தலைவர்கள் அளவிலர் தம்மையும்
அடர்ப்பற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
மறைக்கும் தலைவர்கள் வகைபல கோடியை
அறத்தொடு மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி
தெருட்டும் தலைவர்கள் சேர்பல கோடியை
அருள்திறம் தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி
ஐந்தொழில் ஆதிசெய் ஐவர் ஆதிகளை
ஐந்தொழில் ஆதிசெய் அருட்பெருஞ்ஜோதி
இறந்தவர் எல்லாம் எழுந்திட உலகில்
அறந்தலை அளித்த அருட்பெருஞ்ஜோதி
செத்தவர் எல்லாம் சிரித்து ஆங்கு எழுதிறல்
அத்தகை காட்டிய அருட்பெருஞ்ஜோதி
இறந்தவர் எழுகஎன்று எண்ணி ஆங்கு எழுப்பிட
அறந்துணை எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி

செத்தவர் எழுகெனச் செப்பி ஆங் கெழுப்பிட
அத்திறல் எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி
சித்தெலாம் வல்ல திறல்அளித்து எனக்கே
அத்தனென்று ஓங்கும் அருட்பெருஞ்ஜோதி

ஒன்றதில் இரண்டது ஒன்றின் இரண்டது
ஒன்றினுள் ஒன்றது ஒன்றெனும் ஒன்றே
ஒன்றல இரண்டல ஒன்றின் இரண்டல
ஒன்றினுள் ஒன்றல ஒன்றுஎனும் ஒன்றே
ஒன்றினில் ஒன்றுள ஒன்றினில் ஒன்றில
ஒன்றற ஒன்றிய ஒன்றெனும் ஒன்றே

களங்கநீத்து உலகம் களிப்புற மெய்ந் நெறி
விளங்க என்னுள்ளே விளங்கு மெய்ப்பொருளே
மூவிரு நிலையின் முடிநடு முடிமேல்
ஓவற விளங்கும் ஒருமை மெய்ப்பொருளே
எழு நிலை மிசையே இன்புரு ஆகி
வழுநிலை நீக்கி வயங்கு மெய்ப்பொருளே
நவநிலை மிசையே நடுவுறு நடுவே
சிவமயம் ஆகித் திகழ்ந்த மெய்ப்பொருளே
ஏகா தசநிலை யாது அதின் நடுவே
ஏகா தனமிசை இருந்த மெய்ப்பொருளே
திரையோ தசநிலை சிவவெளி நடுவே
வரையோ தருசுக வாழ்க்கை மெய்ப்பொருளே
ஈரெண் ணிலை என இயம்புமேல் நியைில்
பூரண சுகமாய்ப் பொருந்து மெய்ப்பொருளே
எல்லா நிலைகளும் இசைந்து ஆங்காங்கே
எல்லாம் ஆகி இலங்கு மெய்ப்பொருளே
மனாதிகள் பொருந்தா வானடு வானாய்
அனாதி உண்மையதாய் அமர்ந்த மெய்ப்பொருளே
தானொரு தானாய்த் தானே தானாய்
ஊனுயிர் விளக்கும் ஒரு தனிப்பொருளே
அதுவினுள் அதுவாய் அதுவே அதுவாய்ப்
பொதுவினுள் நடிக்கும் பூரணப் பொருளே
இயல்பினுள் இயல்பாய் இயல்பே இயல்பாய்
உயலுற விளங்கும் ஒருதனிப்பொருளே
அருவினுள் அருவாய் அருவரு அருவாய்
உருவினுள் விளங்கும் ஒருபரம் பொருளே
அலகிலாச் சித்தாய் அதுநிலை அதுவாய்
உலகெலாம் விளங்கும் ஒருதனிப் பொருளே

பொருளினுள் பொருளாய்ப்பொருளது பொருளாய்
ஒருமையின் விளங்கும் ஒருதனிப்பொருளே
ஆடுறு சித்திகள் அறுபத்து நான்கெழு
கோடியும் விளங்கக் குலவு மெய்ப்பொருளே
கூட்டுறு சித்திகள் கோடிபல் கோடியும்
ஆட்டுற விளங்கும் அரும்பெரும்பொருளே
அறிவுறு சித்திகள் அனந்த கோடிகளும்
பிறிவற விளக்கும் பெரும் தனிப்பொருளே
வீடுகள் எல்லாம் விதிநெறி விளங்க
ஆடல்செய் தருளும் அரும்பெரும் பொருளே
பற்றுகள் எல்லாம் பதிநெறி விளங்க
உற்றருள் ஆடல்செய்ஒரு தனிப்பொருளே
பரத்தினிற் பரமே பரத்தின்மேல்பரமே
பரத்தினுட் பரமே பரம்பரம் பரமே
பரம்பெறும் பரமே பரம்தரும் பரமே
பரம்பதம் பரமே பரஞ் சிதம்பரமே
பரம்புகழ் பரமே பரம்பகர் பரமே
பரஞ்சுக பரமே பரம்சிவ பரமே
பரங்கொள் சிற்பரமே பரஞ்செய் தற்பரமே
தரங்கொள் பொற்பரமே தனிப்பெரும்பரமே
வரம்பரா பரமே வணம்பரா பரமே
பரம்பரா பரமே பதம்பரா பரமே

சத்திய பதமே சத்துவ பதமே
நித்திய பதமே நிற்குண பதமே
தத்துவ பதமே தற்பத பதமே
சித்துறு பதமே சிற்சுக பதமே
தம்பரம் பதமே தனிச்சுகம் பதமே
அம்பரம் பதமே அருட்பரம் பதமே
தந்திர பதமே சந்திர பதமே
மந்திர பதமே மந்தண பதமே
நவந்தரு பதமே நடந்தரு பதமே
சிவந்தரு பதமே சிவசிவ பதமே

பிரமமெய்க் கதியே பிரமமெய்ப்பதியே
பிரமநிற் குணமே பிரமசிற் குணமே
பிரமமே பிரமப் பெருநிலை மிசையுறும்
பரமமே பரம பதந்தரும் சிவமே
அவனோடு அவளாய் அதுவாய் அலவாய்
நவமா நிலைமிசை நண்ணிய சிவமே

எம்பொருளாகி எமக்கு அருள் புரியும்
செம்பொருளாகிய சிவமே சிவமே
ஒருநிலை இதுவே உயர்நிலை எனும்ஒரு
திருநிலை மேவிய சிவமே சிவமே
மெய்வைத்து அழியா வெறு வெளி நடுவுறு
தெய்வப் பதியாம் சிவமே சிவமே
புரை தவிர்த்து எனக்கே பொன்முடி சூட்டிச்
சிரமுற நாட்டிய சிவமே சிவமே
கல்வியும் சாகாக் கல்வியும் அழியாச்
செல்வமும் அளித்த சிவமே சிவமே
அருளமு தெனக்கே அளித்தருள் நெறிவாய்த்
தெருளுற வளர்க்கும் சிவமே சிவமே
சத்தெலாம் ஆகியும் தானொரு தானாம்
சித்தெலாம் வல்லதோர் திருவருட் சிவமே
எங்கே கருணை இயற்கையின் உள்ளன
அங்கே விளங்கிய அருட்பெருஞ்சிவமே
யாரே என்னினும் இரங்குகின் றார்க்குச்
சீரே அளிக்கும் சிதம்பர சிவமே
பொய்ந்நெறி அனைத்தினும்புகுத்தா தெனையருள்
செந்நெறி செலுத்திய சிற்சபைச் சிவமே
கொல்லா நெறியே குருவருள் நெறிஎனப்
பல்கால் எனக்குப் பகர்ந்த மெய்ச்சிவமே
உயிரெலாம் பொதுவின் உளம்பட நோக்குக
செயிரெலாம் விடுகெனச் செப்பியசிவமே
பயிர்ப்புறு கரணப் பரிசுகள் பற்பல
உயிர்த்திரள் ஒன்றென உரைத்த மெய்ச்சிவமே
உயிருள்யாம் எம் முள் உயிர் இவை யுணர்ந்தே
உயிர்நலம் பரவுகென்று உரைத்த மெய்ச்சிவமே
இயல்அருள் ஒளிஓர் ஏகதே சத்தினாம்
உயிர்ஒளிகாண்க என்றுரைத்த மெய்ச்சிவமே

அருளலாது அணுவும் அசைந்திடாது அதனால்
அருள்நலம் பரவுகென்று அறைந்தமெய்ச்சிவமே
அருளுறின் எல்லாம் ஆகும் ஈது உண்மை
அருளுற முயல்கவென்று அருளியசிவமே
அருள்நெறி ஒன்றே தெருள்நெறி மற்றெலாம்
இருள்நெறி யென எனக்கு இயம்பிய சிவமே
அருள்பெறில் துரும்பும் ஓர்ஐந்தொழில் புரியும்
தெருளிது எனவே செப்பிய சிவமே
அருளறிவு ஒன்றே அறிவுமற் றெல்லாம்
மருளறிவு என்றே வகுத்த மெய்ச்சிவமே

அருட்சுகம் ஒன்றே அரும்பெறல் பெருஞ்சுகம்
மருட்சுகம் பிறஎன வகுத்த மெய்ச்சிவமே
அருட்பேறு அதுவே அரும்பெறல் பெரும்பேறு
இருட்பேறு அறுக்கும் என்றியம் பியசிவமே
அருள்தனி வல்லபம் அதுவே எல்லாஞ்செய்
பொருள் தனிச்சித்தெனப் புகன்ற மெய்ச்சிவமே
அருளறியார் தமை அறியார் எம்மையும்
பொருளறியார் எனப் புகன்ற மெய்ச்சிவமே
அருள்நிலை ஒன்றே அனைத்தும் பெறுநிலை
பொருள் நிலை காண்கெனப் புகன்ற மெய்ச்சிவமே
அருள் வடிவு அதுவே அழியாத் தனிவடிவு
அருள்பெற முயலுகென்று அருளிய சிவமே
அருளே நம்மியல் அருளே நம்உரு
அருளே நம்வடிவாம் என்ற சிவமே
அருளே நம்அடி அருளே நம்முடி
அருளே நம்நடு ஆம் என்ற சிவமே
அருளே நம்மறிவு அருளே நம்மனம்
அருளே நம்குணமாம் என்ற சிவமே
அருளே நம்பதி அருளே நம்பதம்
அருளே நம்மிடமாம் என்ற சிவமே
அருளே நம்துணை அருளே நம்தொழில்
அருளே நம் விருப்பாம் என்ற சிவமே
அருளே நம்பொருள் அருளே நம்ஒளி
அருளே நாம் அறிவாய் என்ற சிவமே
அருளே நம்குலம் அருளே நம்இனம்
அருளே நாம் அறிவாய் என்ற சிவமே
அருளே நம்சுகம் அருளே நம்பெயர்
அருளே நாம் அறி வாய் என்ற சிவமே
அருளொளி அடைந்தனை அருளமுது உண்டனை
அருள்மதி வாழ்கவென்று அருளிய சிவவே
அருள்நிலை பெற்றனை அருள்வடிவு உற்றனை
அருளரசு இயற்றுகென்று அருளிப சிவமே

உள்ளகத் தமர்ந்தெனது உயிரிற் கலந்தருள்
வள்ளல்சிற் றம்பலம் வளர்சிவ பதியே
நிகரிலா இன்ப நிலைநடு வைத்தெனைத்
தகவொடு காக்கும் தனிச் சிவபதியே
சுத்த சன்மார்க்க சுகநிலை தனிலெனைச்
சத்தியன் ஆக்கிய தனிச் சிவபதியே
ஐவருங் காண்டற்கு அரும் பெரும் பொருள் என்
கைவரப் புரிந்த கதிசிவ பதியே

துன்பம் தொலைத்தருள் ஜோதியால் நிறைந்த
இன்பம் எனக்கருள் எழில் சிவபதியே
சித்தமும் வாக்கும் செல்லாப் பெருநிலை
ஒத்துற வேற்றிய ஒரு சிவபதியே
கையறவு அனைத்தும் கடிந்து எனைத்தேற்றி
வையமேல் வைத்த மாசிவ பதியே
இன்புறச் சிறியேன் எண்ணுதோ றெண்ணுதோறும்
அன்பொடுஎன் கண்ணுறும் அருட்சிவபதியே
பிழையெலாம் பொறுத்து எனுள் பிறங்கிய கருணை
மழையெலாம் பொழிந்து வளர் சிவபதியே
உளத்தினும் கண்ணினும் உயிரினும் எனது
குளத்தினும் நிரம்பிய குருசிவ பதியே
பரமுடன் அபரம் பகர்நிலை இவையெனத்
திரமுற அருளிய திருவருட் குருவே
மதிநிலை இரவியின் வளர்நிலை அனலின்
திதிநிலை அனைத்தும் தெரித்த சற்குருவே
கணநிலை அவற்றின் கருநிலை அனைத்தும்
குணமுறத் தெரித்து உட்குலவு சற்குருவே
பதிநிலை பசுநிலை பாசநிலை எலாம்
மதியுறத் தெரித்து உள்வயங்கு சற்குருவே
பிரம ரகசியம் பேசி என்னுளத்தே
தரமுற விளங்கும் சாந்த சற்குருவே
பரம ரகசியம் பகர்ந்து எனதுளத்தே
வரமுற வளர்த்து வயங்கு சற்குருவே
சிவரகசியம் எலாம் தெரிவித்து எனக்கே
நவநிலை காட்டிய ஞானசற் குருவே
சத்தியல் அனைத்தும் சித்தியல் முழுவதும்
அத்தகை தெரித்த அருட்சிவ குருவே
அறிபவை எல்லாம் அறிவித்து என்னுள்ளே
பிறிவற விளங்கும் பெரிய சற்குருவே
கேட்பவை எல்லாம் கேட்பித்து எனுள்ளே
வேட்கையின் விளங்கும் விமல சற்குருவே
காண்பவை எல்லாம் காட்டுவித்து எனக்கே
மாண்பதம் அளித்து வயங்கு சற்குருவே
செய்பவை எல்லாம் செய்வித்து எனக்கே
உய்பவை அளித்தெனுள் ஓங்கு சற்குருவே
உண்பவை எல்லாம் உண்ணுவித்து என்னுள்
பண்பினில் விளங்கும் பரம சற்குருவே
சாகாக் கல்வியின் தரமெலாம் கற்பித்து
ஏகாக் கரப்பொருள் ஈந்த சற்குருவே

சத்திய மாம்சிவ சித்திகள் அனைத்தையும்
மெய்த்தகை அளித்தெனுள் விளங்கு சற்குருவே
எல்லா நிலைகளும் ஏற்றிச் சித்தெலாம்
வல்லான் எனஎனை வைத்த சற்குருவே

சீருற அருளாம் தேசுற அழியாப்
பேருற என்னைப் பெற்ற நற்றாயே
பொருந்திய அருட்பெரும் போகமே உறுகெனப்
பெருந்தயவால் எனைப் பெற்ற நற்றாயே
ஆன்ற சன்மார்க்கம் அணிபெற எனைத்தான்
ஈன்றமுது அளித்த இனிய நற்றாயே
பசித்திடுதோறும் என்பால் அணைந்து அருளால்
வசித்தமுது அருள்புரி வாய்மை நற்றாயே
தளர்ந்ததோ றடியேன் சார்பணைந் தென்னை
உளந்தெளி வித்த ஒருமை நற்றாயே
அருளமு தேமுதல் ஐவகை அமுதமும்
தெருளுற எனக்கருள் செல்வ நற்றாயே
இயலமு தேமுதல் எழுவகை அமுதமும்
உயலுற எனக்கருள் உரிய நற்றாயே
நண்புறும் எண்வகை நவவகை அமுதமும்
பண்புற எனக்கருள் பண்புடைத்தாயே
மற்றுள அமுத வகையெலாம் எனக்கே
உற்றுண் அளித்தருள் ஓங்கு நற்றாயே
கலக்கமும் அச்சமும் கடிந்து என துளத்தே
அலக்கணும் தவிர்த்தருள் அன்புடைத்தாயே
துய்ப்பினில் அனைத்தும் சுகம்பெற அளித்தெனக்கு
எய்ப்பெலாம் தவிர்த்த இன்புடைத்தாயே
சித்திகள்எல்லாம் தெளிந்திட எனக்கே
சத்தியை அளித்த தயவுடைத்தாயே
சத்தினி பாதந் தனையளித்து எனைமேல்
வைத்தமு தளித்த மரபுடைத்தாயே
சத்தி சத்தர்கள் எலாஞ் சார்ந்தெனது ஏவல்செய்
சித்தியை அளித்த தெய்வ நற்றாயே
தன்னிகர் இல்லாத் தலைவனைக் காட்டியே
என்னை மேலேற்றிய இனிய நற்றாயே
வெளிப்பட விரும்பிய விளைவெலாம் எனக்கே
அளித்தளித்து இன்புசெய் அன்புடைத் தாயே
எண்அகத் தொடுபுறத்து என்னைஎஞ் ஞான்றும்
கண்எனக் காக்கும் கருணை நற்றாயே
இன்னருள் அமுதளித்து இறவாத் திறல்புரிந்து
என்னை வளர்த்திடும் இன்புடைத் தாயே

என்னுடல் என்னுயிர் என்னறிவு எல்லாம்
தன்னவென் றாக்கிய தயவுடைத்தாயே
தெரியா வகையால் சிறியேன் தளர்ந்திடத்
தரியாது அணைத்த தயவுடைத் தாயே
சினமுதல் அனைத்தையும் தீர்த்தெனை நனவினும்
கனவினும் பிரியாக் கருணை நற்றாயே
தூக்கமும் சோம்பும் என் துன்பமும் அச்சமும்
ஏக்கமும் நீக்கிய என் தனித் தாயே

துன்பெலாந் தவிர்த்துளே அன்பெலாம் நிரம்ப
இன்பெலாம் அளித்த என்தனித் தந்தையே
எல்லா நன்மையும் என்றெனக்கு அளித்த
எல்லாம் வல்லசித்து என்தனித் தந்தையே
நாயிற்கடையேன் நலம்பெறக் காட்டிய
தாயிற் பெரிதும் தயவுடைத் தந்தையே
அறிவிலாப் பருவத்து அறிவெனக்கு அளித்தே
பிறிவிலாது அமர்ந்த பேரருள் தந்தையே
புன்னிகர் இல்லேன் பொருட்டு இவண் அடைந்த
தன்னிகர் இல்லாத் தனிப்பெருந் தந்தையே
அகத்தினும் புறத்தினும் அமர்ந்து அருட்ஜோதி
சகத்தினில் எனக்கே தந்த மெய்த்தந்தையே
இணையிலாக் களிப்புற்று இருந்திட எனக்கே
துணைஅடி சென்னியில் சூட்டிய தந்தையே
ஆதியீறு அறியா அருளரசு ஆட்சியில்
ஜோதிமா மகுடம் சூட்டிய தந்தையே
எட்டிரண்டு அறிவித்து எனைத்தனி ஏற்றிப்
பட்டிமண்டபத்தில் பதித்த மெய்த் தந்தையே
தங்கோல் அளவது தந்து அருட்ஜோதிச்
செங்கோல் செலுத்தெனச் செப்பிய தந்தையே
தன்பொருள் அனைத்தையும் தன் அரசாட்சியில்
என்பொருள் ஆக்கிய என்தனித் தந்தையே
தன்வடிவு அனைத்தையும் தன் அரசாட்சியில்
என்வடிவு ஆக்கிய என்றனித் தந்தையே
தன்சித் தனைத்தையும் தன் சமுகத்தினில்
என்சித் தாக்கிய என்றனித் தந்தையே
தன்வசம் ஆகிய தத்துவம் அனைத்தையும்
என்வசம் ஆக்கிய என்னுயிர்த் தந்தையே
தன்கையில் பிடித்த தனி அருட்ஜோதியை
என்கையில் கொடுத்த என்றனித் தந்தையே
தன்னையும் தன்னருள் சத்தியின் வடிவையும்
என்னையும் ஒன்றென இயற்றிய தந்தையே

தன்இயல் என்இயல் தன்செயல் என்செயல்
என்ன இயற்றிய என்தனித் தந்தையே
தன்உரு என் உரு தன்உரை என்உரை
என்ன இயற்றிய என்தனித் தந்தையே
சதுரப் பேரருள் தனிப்பெரும் தலைவனென்று
எதிரற்று ஓங்கிய என்னுடைத் தந்தையே
மனவாக் கறியா வரைப்பினில் எனக்கே
இனவாக் கருளிய என்னுயிர்த்தந்தையே
உணர்ந்துணர்ந்து உணரினும் உணராப் பெருநிலை
அணைந்திட எனக்கே அருளிய தந்தையே
துரிய வாழ்வுடனே சுக பூரணமெனும்
பெரிய வாழ்வளித்த பெருந்தனித் தந்தையே
ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த
பேறளித்து ஆண்டபெருந்தகைத்தந்தையே
எவ்வகைத் திறத்தினும் எய்துதற்கு அரிதாம்
அவ்வகை நிலையெனக் களித்த நல்தந்தையே
இனிப் பிறவாநெறி எனக்களித்து அருளிய
தனிப்பெரும் தலைமைத் தந்தையே தந்தையே

பற்றயர்ந்து அஞ்சிய பரிவுகண் டணைந்துஎனைச்
சற்றுமஞ்சேல் எனத் தாங்கிய துணையே
தளர்ந்தஅத் தருணம்என் தளர்வெலாம் தவிர்த்துஉள்
கிளர்ந்திட எனக்குக் கிடைத்த மெய்த்துணையே
துறையிது வழியிது துணிவிது நீசெயும்
முறையிது எனவே மொழிந்தமெய்த்துணையே
எங்குறு தீமையும் எனைத்தொடரா வகை
கங்குலும் பகலும் மெய்க்காவல்செய்துணையே
வேண்டிய வேண்டிய விருப்பெலாம் எனக்கே
ஈண்டிருந்து அருள்புரி என்னுயிர்த் துணையே
இகத்தினும் பரத்தினும் எனக்கிடர் சாராது
அகத்தினும் புறத்தினும் அமர்ந்த மெய்த்துணையே

அயர்வற எனக்கே அருள்துணை யாகிஎன்
உயிரினும் சிறந்த ஒருமை என் நட்பே
அன்பினில் கலந்து எனதறிவினில் பயின்றே
இன்பினில் அளைந்தஎன் இன்னுயிர் நட்பே
நான் புரிவன எலாம்தான் புரிந்து எனக்கே
வான் பதம் அளிக்க வாய்த்த நல்நட்பே
உள்ளமும் உணர்ச்சியும் உயிரும் கலந்துகொண்டு
எள்ளுறு நெய்யில் என்உள்ளுறும் நட்பே
செற்றமும் தீமையும் தீர்த்துநான் செய்த
குற்றமும் குணமாக் கொண்ட என்நட்பே

குணங்குறி முதலிய குறித்திடாது எனையே
அணங்கறக் கலந்த அன்புடை நட்பே
பிணக்கும் பேதமும் பேயுல கோர்புகல்
கணக்கும் தீர்த்தெனைக் கலந்தநல் நட்பே
சவலை நெஞ்சகத்தின் தளர்ச்சியும் அச்சமும்
கவலையும் தவிர்த்தெனைக் கலந்தநன் நட்பே

களைப்பறிந் தெடுத்துக் கலக்கம் தவிர்த்தெனக்கு
இளைப்பறிந்து உதவிய என்னுயிர் உறவே
தன்னைத் தழுவுறு தரஞ்சிறிது அறியா
என்னைத் தழுவிய என்னுயிர் உறவே
மனக்குறை நீக்கிநல் வாழ்வளித்து என்றும்
எனக்குறவு ஆகிய என்னுயிர் உறவே
துன்னும் அனாதியே சூழ்ந்துஎனைப் பிரியாது
என்னுறவு ஆகிய என்னுயிர் உறவே

என்றுமோர் நிலையாய் என்றுமோர் இயலாய்
என்றும் உள் எதுவாம் என்தனிச் சத்தே
அனைத்துலகு அவைகளும் ஆங்காங்கு உணரினும்
இனைத்தென அறியா என்தனிச் சத்தே
பொதுமறை முடிகளும் புகலவை முடிகளும்
இதுஎனற்கு அரிதாம் என்தனிச் சத்தே
ஆகம முடிகளும் அவைபுகல் முடிகளும்
ஏகுதற்கு அரிதாம் என்தனிச் சத்தே
சத்தியம் சத்தியம் சத்தியம் எனவே
இத்தகை வழுத்தும் என்தனிச் சத்தே
துரியமும் கடந்ததோர் பெரியவான் பொருள்என
உரைசெய் வேதங்கள் உன்னும் மெய்ச்சத்தே
அன்றதன் அப்பால் அதன்பரத்து அதுதான்
என்றிட நிறைந்த என்தனிச் சத்தே

என்றும் உள்ளதுவாய் எங்கும் ஓர் நிறைவாய்
என்றும் விளங்கிடும் என்தனிச் சித்தே
சத்திகள் பலவாய்ச் சத்தர்கள் பலவாய்
இத்தகை விளங்கும் என்தனிச் சித்தே
தத்துவம் பலவாய்த் தத்துவி பலவாய்
இத்தகை விளங்கும் என்தனிச் சித்தே
படி நிலை பலவாய்ப் பதநிலை பலவாய்
இடிவற விளங்கிடும் என்தனிச் சித்தே
மூர்த்தர்கள் பலவாய் மூர்த்திகள் பலவாய்
ஏற்பட விளக்கிடும் என்தனிச் சித்தே

உயிர்வகை பலவாய் உடல்வகை பலவாய்
இயலுற விளக்கிடும் என்தனிச் சித்தே
அறிவவை பலவாய் அறிவன பலவாய்
எறிவற விளக்கிடும் என்தனிச் சித்தே
நினைவவை பலவாய் நினைவன பலவாய்
இனைவற விளக்கிடும் என்தனிச் சித்தே
காட்சிகள் பலவாய்க் காண்பன பலவாய்
ஏட்சியின் விளக்கிடும் என்தனிச் சித்தே
செய்வினை பலவாய்ச் செய்வன பலவாய்
எய்வற விளக்கிடும் என்தனிச் சித்தே
அண்டசராசரம் அனைத்தையும் பிறவையும்
எண்தர விளக்கும்என்தனிச் சித்தே
எல்லாம் வல்லசித்து எனமறை புகன்றிட
எல்லாம் விளக்கிடும் என்தனிச் சித்தே

ஒன்றதில் ஒன்றென்று உரைக்கவும் படாதாய்
என்றும் ஓர் படித்தாம் என்தனி இன்பே
இது அது என்னா இயலுடை அதுவாய்
எதிர் அற நிறைந்த என்தனி இன்பே
ஆக்குறும் அவத்தைகள் அனைத்தையும் கடந்துமேல்
ஏக்கற நிறைந்த என்தனி இன்பே
அறிவுக்கு அறிவினில் அது அது அதுவாய்
எறிவற்று ஓங்கிய என்தனி இன்பே
விடயம் எவற்றினும் மேல்மேல் விளைந்தவை
இடையிடை ஓங்கிய என்தனி இன்பே
இம்மையும் மறுமையும் இயம்பிடும் ஒருமையும்
எம்மையும் நிரம்பிடும் என்தனி இன்பே
முத்தர்கள் சித்தர்கள் சத்திகள் சத்தர்கள்
எத்திறத்தவர்க்குமாம் என்தனி இன்பே
எல்லா நிலைகளின் எல்லா உயிர்உறும்
எல்லா இன்புமாம் என்தனி இன்பே

கரும்புறு சாறும் கனிந்தமுக் கனியின்
விரும்புறும் இரதமும் மிக்கதீம் பாலும்
குணங்கொள் கோல் தேனும் கூட்டி ஒன்றாக்கி
மணங்கொளப் பதஞ்செய் வகைஉற இயற்றிய
உணவெனப் பல்கால் உரைக்கினும் நிகரா
வணமுறும் இன்ப மயமே அதுவாய்க்
கலந்து அறிவுறுவாய்க் கருதுதற்கு அரிதாய்
நலந்தரு விளக்கமும் நவிலரும் தண்மையும்
உள்ளதாய் என்றும் உள்ளதாய் என்னுள்
உள்ளதாய் என்தன் உயிர் உளம் உடம்புடன்

எல்லாம் இனிப்ப இயலுறு சுவையளித்து
எல்லாம் வல்லசித்து இயற்கைய தாகிச்
சாகா வரமும் தனித்த பேரறிவும்
மாகா தலிற்சிவ வல்லப சத்தியும்
செயற்கரும் அனந்த சித்தியும் இன்பமும்
மயக்கறத் தருந்திறல் வண்மையதாகிப்
பூரண வடிவாய்ப் பொங்கிமேல் ததும்பி
ஆரண முடியுடன் ஆகம முடியும்
கடந்தென தறிவாம் கனமேற் சபைநடு
நடந்திகழ் கின்ற மெய்ஞ்ஞான ஆரமுதே
சத்திய அமுதே தனித்திரு அமுதே
நித்திய அமுதே நிறைசிவ அமுதே
சச்சி தானந்தத் தனிமுதல் அமுதே
மெய்ச் சிதாகாசவிளை அருளமுதே
ஆனந்த அமுதே அருள்ஒளி அமுதே
தானந்தம் இல்லாத் தத்துவ அமுதே
நவநிலை தரும்ஓர் நல்ல தெள்ளமுதே
சிவநிலை தனிலே திரண்ட உள்ளமுதே
பொய்படாக் கருணைப் புண்ணிய அமுதே
கைபடாப் பெருஞ்சீர்க் கடவுள் வானமுதே
அகம்புறம் அகப்புறம் ஆகிய புறப்புறம்
உகந்தநான்கு இடத்தும் ஓங்கிய அமுதே
பனிமுதல் நீக்கிய பரம்பர அமுதே
தனிமுதல் ஆய சிதம்பர அமுதே
உலகெலாம் கொள்ளினும் உலப்பிலா அமுதே
அலகிலாப் பெருந்திறல் அற்புத அமுதே

அண்டமும் அதன்மேல் அண்டமும் அவற்றுள
பண்டமும் காட்டிய பரம்பர மணியே
பிண்டமும் அதிலுறு பிண்டமும் அவற்றுள
பண்டமும் காட்டிய பராபர மணியே
நினைத்தவை நினைத்தவை நினைத்தாங்கு எய்துற
அனைத்தையும் தரும்ஓர் அரும்பெறல் மணியே
விண்பதம் அனைத்தும் மேற்பதம் முழுவதும்
கண்பெற நடத்தும் ககனமா மணியே
பார்பதம் அனைத்தும் பகரடி முழுவதும்
சார்புற நடத்தும் சரவொளி மணியே
அண்டகோடிகள் எலாம் அரைக்கணத்து ஏகிக்
கண்டுகொண்டிட ஒளிர் கலைநிறை மணியே
சராசர உயிர்தொறும் சாற்றிய பொருள்தொறும்
விராவி யுள்விளங்கும் வித்தக மணியே

மூவரும் முனிவரும் முத்தரும் சித்தரும்
தேவரும் மதிக்கும் சித்திசெய் மணியே
தாழ்வெலாம் தவிர்த்துச் சகமிசை அழியா
வாழ்வெனக் களித்த வளரொளி மணியே
நவமணி முதலிய நலமெலாம் தருமொரு
சிவமணி எனும் அருட்செல்வமா மணியே

வான் பெறற்கு அரியவகையெலாம் விரைந்து
நான் பெறவளித்த நாத மந்திரமே
கற்பம் பலபல கழியினும் அழியாப்
பொற்புற அளித்த புனித மந்திரமே
அகரமும் உகரமும் அழியாச் சிகரமும்
வகரமும் ஆகிய வாய்மை மந்திரமே
ஐந்தென எட்டென ஆறென நான்கென
முந்துறு மறைமுறை மொழியு மந்திரமே
வேதமும் ஆகம விரிவுகள் அனைத்தும்
ஓதநின்று உலவாது ஓங்கு மந்திரமே

உடற்பிணி அனைத்தையும் உயிர்ப்பிணி அனைத்தையும்
அடர்ப்பறத் தவிர்த்த அருட்சிவ மருந்தே
சித்திக்கு மூலமாம் சிவமருந்து எனஉளம்
தித்திக்கு ஞானத் திருவருள் மருந்தே
இறந்தவர் எல்லாம் எழுந்திடப் புரியும்
சிறந்தவல் லபம்உறு திருவருள் மருந்தே
மரணப் பெரும்பிணி வாரா வகைமிகு
கரணப் பெருந்திறல் காட்டிய மருந்தே
நரைதிரை மூப்பவை நண்ணா வகைதரும்
உரைதரு பெருஞ்சீர் உடையநன் மருந்தே
என்றே என்னினும் இளமையோடு இருக்க
நன்றே தரும் ஒரு ஞானமா மருந்தே
மலப்பிணி தவிர்த்தருள் வலம்தரு கின்றதோர்
நலத்தகை அதுவென நாட்டிய மருந்தே
சிற்சபை நடுவே திருநடம் புரியும்
அற்புத மருந்தெனும் ஆனந்த மருந்தே

இடையுறப் படாத இயற்கை விளக்கமாய்த்
தடைஒன்றும் இல்லாத் தகவுடை யதுவாய்
மாற்றிவை என்ன மதித்து அளப்பரிதாய்
ஊற்றமும் வண்ணமும் ஒருங்குடை அதுவாய்க்
காட்சிக் கினியநற் கலையுடை அதுவாய்
ஆட்சிக் குரியபன் மாட்சியும் உடைத்தாய்

கைதவர் கனவினும் காண்டற்கு அரிதாய்ச்
செய்தவப் பயனாந் திருவருள் வலத்தால்
உளம்பெறும் இடமெலாம் உதவுக எனவே
வளம்பட வாய்த்து மன்னிய பொன்னே
புடம்படாத் தரமும் விடம்படாத் திறமும்
வடம்படா நலமும் வாய்த்த செம்பொன்னே
மும்மையும் தருமொரு செம்மையை உடைத்தாய்
இம்மையேகிடைத்து இங்கிலங்கிய பொன்னே
எடுத்தெடுத்து உதவினும் என்றும் குறையாது
அடுத்தடுத்து ஓங்குமெய் அருளுடைப்பொன்னே
தளர்ந்திடேல் எடுக்கின் வளர்ந்திடு வேம்எனக்
கிளர்ந்திட உரைத்துக் கிடைத்த செம்பொன்னே
எண்ணிய தோறும் இயற்றுக என்றெனை
அண்ணி என்கரத்தில் அமர்ந்தபைம் பொன்னே
நீகேண் மறக்கினும் நின்னையாம் விட்டுப்
போகேம் என எனைப் பொருந்திய பொன்னே
எண்ணிய எண்ணியாங்கு எய்திட எனக்குப்
பண்ணிய தவத்தால் பழுத்த செம்பொன்னே
விண்ணியல் தலைவரும் வியந்திட எனக்குப்
புண்ணியப் பயனால் பூத்த செம்பொன்னே
நால்வகை நெறியினும் நாட்டுக எனவே
பால்வகை முழுதும் பணித்த பைம்பொன்னே
எழுவகை நெறியினும் இயற்றுக எனவே
முழுவகைகாட்டி முயங்கிய பொன்னே

எண்ணியபடி எலாம் இயற்றுக என்றெனைப்
புண்ணிய பலத்தாற் பொருந்திய நிதியே
ஊழிதோ றூழி உலப்புறாது ஓங்கி
வாழிஎன்று எனக்கு வாய்த்த நன்னிதியே
இதமுற ஊழிதோறு எடுத்தெடுத்து உலகோர்க்கு
உதவினும் உலவாது ஓங்கு நன்னிதியே
இருநிதி எழுநிதி இயல்நவ நிதிமுதல்
திருநிதி எல்லாம் தரும்ஒரு நிதியே
எவ்வகை நிதிகளும் இந்தமா நிதியிடை
அவ்வகை கிடைக்கும் என்று அருளிய நிதியே
அற்புதம் விளங்கும் அருட்பெரு நிதியே
கற்பனை கடந்த கருணைமா நிதியே
நற்குண நிதியே சற்குண நிதியே
நிற்குண நிதியே சிற்குண நிதியே

பளகிலாது ஓங்கும் பளிக்குமா மலையே
வளம்எலாம் நிறைந்த மாணிக்க மலையே
மதியுற விளங்கும் மரகத மலையே
வதிதரு பேரொளி வச்சிர மலையே
உரைமனம் கடந்தாங்கு ஓங்குபொன் மலையே
துரியமேல் வெளியில் ஜோதிமா மலையே

புற்புதம் திரைநுரை புரைமுதல் இலதோர்
அற்புதக் கடலே அமுதத்தண் கடலே
இருட்கலை தவிர்த்தொளி எல்லாம் வழங்கிய
அருட்பெரும் கடலே ஆனந்தக் கடலே
பவக்கடல் கடந்துநான் பார்த்தபோது அருகே
உவப்புறு வளங்கொண்டு ஓங்கிய கரையே
என் துயர்ச் சோடைகள் எல்லாம் தவிர்த்துளம்
நன்றுற விளங்கிய நந்தனக்காவே
சேற்றுநீர் இன்றிநல் தீஞ்சுவை தரும்ஓர்
ஊற்றுநீர் நிரம்ப உடையபூந் தடமே
கோடைவாய் விரிந்த குளிர்தரு நிழலே
மேடைவாய் வீசிய மெல்லிய காற்றே
களைப்பறக் கிடைத்த கருணை நன்னீரே
இளைப்பற வாய்த்த இன்சுவை உணவே
தென்னைவாய்க் கிடைத்த செவ்விளநீரே
தென்னை வான் பலத்தில் திருகுதீம் பாலே
நீர் நசை தவிர்க்கும் நெல்லியங் கனியே
வேர் விளை பலவின் மென்சுவைச் சுளையே
கட்டுமாம் பழமே கதலிவான் பழமே
இட்ட நற்சுவைசெய் இலந்தையங் கனியே
புனிதவான் தருவில் புதுமையாம் பலமே
கனி எலாங் கூட்டிக் கலந்த தீஞ்சுவையே
இதந்தரு கரும்பில் எடுத்த தீஞ்சாறே
பதந்தரு வெல்லப் பாகினின் சுவையே
சாலவே இனிக்கும் சர்க்கரைத் திரளே
ஏலவே நாவுக்கு இனிய கற்கண்டே
உலப்புறாது இனிக்கும் உயர்மலைத் தேனே
கலப்புறா மதுரம் கனிந்த கோற்தேனே
நவையிலாது எனக்கு நண்ணிய நறவே
சுவையெலாம் திரட்டிய தூயதீம் பதமே
பதம்பெறக் காய்ச்சிய பசு நறும் பாலே
இதம்பெற உருக்கிய இளம்பசு நெய்யே
உலர்ந்திடாது என்றும் ஒரு படித்து ஆகி
மலர்ந்துநல் வண்ணம் வயங்கிய மலரே

இகந்தரு புவிமுதல் எவ்வுலகு உயிர்களும்
உகந்திட மணக்கும் சுகந்த நன்மணமே
யாழுறும் இசையே இனிய இன்னிசையே
ஏழுறும் இசையே இயல் அருளிசையே
திவள்ஒளிப் பருவம் சேர்ந்த நல்லவளே
அவளொடும் கூடி அடைந்ததோர் சுகமே
நாதநல் வரைப்பின் நண்ணிய பாட்டே
வேதகீதத்தில் விளை திருப்பாட்டே
நன்மார்க்கர் நாவில் நவிற்றிய பாட்டே
சன்மார்க்க சங்கம் தழுவிய பாட்டே
நம்புறும் ஆகமம் நவிற்றிய பாட்டே
எம்பலம் ஆகிய அம்பலப் பாட்டே
என்மனக் கண்ணே என்அருட் கண்ணே
என்இரு கண்ணே என்கணுண் மணியே
என்பெரும் களிப்பே என்பெரும் பொருளே
என்பெரும் திறலே என்பெரும் செயலே
என்பெரும் தவமே என்தவப் பலனே
என்பெருஞ் சுகமே என்பெரும் பேறே
என்பெரு வாழ்வே என்றன் வாழ் முதலே
என்பெரு வழக்கே என்பெரும் கணக்கே
என்பெரு நலமே என்பெரும் குலமே
என்பெரு வலமே என் பெரும்புலமே
என்பெரு வரமே என்பெரும் தரமே
என்பெரு நெறியே என்பெரு நிலையே
என்பெரும் குணமே என்பெரும் கருத்தே
என்பெரும் தயவே என்பெரும் கதியே
என்பெரும் பதியே என்னுயிர் இயலே
என்பெரு நிறைவே என்தனி அறிவே

தோலெலாம் குழைந்திடச் சூழ் நரம்பனைத்தும்
மேலெலாம் கட்டவை விட்டு விட்டு இயங்கிட
என்பெலாம் நெக்குநெக்கு இயலிடை நெகிழ்ந்திட
மென்புடைத் தசையெலாம் மெய்யுறத்தளர்ந்திட
இரத்தம் அனைத்தும் உள் இறுகிடச் சுக்கிலம்
உரத்திடை பந்தித்து ஒருதிரள் ஆயிட
மடல்எலாம் மூளை மலர்ந்திட அமுதம்
உடலெலாம் ஊற்றெடுத்து ஓடி நிரம்பிட
ஒண்ணுதல் வியர்த்திட ஒளிமுகம் மலர்ந்திட
தண்ணிய உயிர்ப்பினில் சாந்தம் ததும்பிட
உண்ணகை தோற்றிட உரோமம் பொடித்திடக்
கண்ணில் நீர் பெருகிக் கால்வழிந்து ஓடிட

வாய்துடித்து அலறிட வளர்செவித் துணைகளிற்
கூயிசைப் பொறியெலாம் கும்மெனக் கொட்டிட
மெய்யெலாம் குளிர்ந்திட மென்மார் பசைந்திடக்
கையெலாம் குவிந்திடக் காலெலாம் சுலவிட
மனங்கனிந் துருகிட மதிநிறைந் தொளிர்ந்திட
இனம்பெறு சித்தம் இயைந்து களித்திட
அகங்காரம் ஆங்காங்கு அதிகரிப் பமைந்திடச்
சகங்காண உள்ளம் தழைத்து மலர்ந்திட
அறிவுறு அனைத்தும் ஆனந்தம் ஆயிடப்
பொறியுறும் ஆன்மதற் போதமும் போயிடத்
தத்துவம் அனைத்தும் தாம்ஒருங்கு ஒழிந்திடச்
சத்துவம் ஒன்றே தனித்துநின்று ஓங்கிட
உலகெலாம் விடயம் உளவெலாம் மறைந்திட
அலகிலா அருளின் ஆசைமேல் பொங்கிட
என்னுளத் தெழுந்து உயிர்எல்லாம் மலர்ந்திட
என்னுளத்து ஓங்கிய என்தனி அன்பே
பொன்னடி கண்டு அருட் புத்தமுது உணவே
என்னுளத்து எழுந்த என்னுடை அன்பே
தன்னையே எனக்குத் தந்தருள் ஒளியால்
என்னை வேதித்த என்தனி அன்பே
என்னுளே அரும்பி என்னுளே மலர்ந்து
என்னுளே விரிந்த என்னுடை அன்பே
என்னுளே விளங்கி என்னுளே பழுத்து
என்னுளே கனிந்த என்னுடை அன்பே
தன்னுளே நிறைவுறு தரமெலாம் அளித்தே
என்னுளே நிறைந்த என்தனி அன்பே
துன்புள அனைத்தும் தொலைத்து எனதுஉருவை
இன்புரு ஆக்கிய என்னுடை அன்பே
பொன்னுடம்பு எனக்குப்பொருந்திடும் பொருட்டா
என்னுளம் கலந்த என்தனி அன்பே
தன்வசமாகித் ததும்பிமேல் பொங்கி
என்வசம் கடந்த என்னுடை அன்பே
தன்னுளே பொங்கிய தண்ணமுது உணவே
என்னுளே பொங்கிய என்தனி அன்பே

அருளொளி விளங்கிட ஆணவம் எனும் ஓர்
இருளற என்னுளத்து ஏற்றிய விளக்கே
துன்புறு தத்துவத் துரிசெலாம் நீக்கிநல்
இன்புற என்னுளத்து ஏற்றிய விளக்கே
மயலற அழியா வாழ்வு மேன்மேலும்
இயலுற என்னுளத்து ஏற்றிய விளக்கே

இடுவெளி அனைத்தும் இயல்ஒளி விளங்கிட
நடுவெளி நடுவே நாட்டிய விளக்கே
கருவெளி அனைத்தும் கதிரொளி விளங்கிட
உருவெளி நடுவே ஒளிர்தரு விளக்கே
தேற்றிய வேதத் திருமுடி விளங்கிட
ஏற்றிய ஞான இயலொளி விளக்கே
ஆகம முடிமேல் அருளொளி விளங்கிட
வேகமது அறவே விளங்கொளி விளக்கே
ஆரியர் வழுத்திய அருள்நிலை அனாதி
காரியம் விளக்கும் ஓர் காரண விளக்கே

தண்ணிய அமுதே தந்து என துளத்தே
புண்ணியம் பலித்த பூரணமதியே
உய்தர அமுதம் உதவி என்னுளத்தே
செய்தவம் பலித்த திருவளர் மதியே
பதியெலாம் தழைக்கப் பதம் பெறும் அமுத
நிதியெலாம் அளித்த நிறைதிரு மதியே
பாலெனத்தண்கதிர் பரப்பி எஞ்ஞான்று
மேல்வெளி விளங்க விளங்கிய மதியே

உயங்கிய உள்ளமும் உயிரும் தழைத்திட
வயங்கிய கருணை மழைபொழி மழையே
என்னையும் பணிகொண்டு என்னுளே நிரம்ப
மன்னிய கருணை மழைபொழி மழையே
உளங்கொளும் எனக்கே உவகைமேல் பொங்கி
வளங்கொளக் கருணை மழைபொழி மழையே
நலந்தர உடலுயிர் நல்லறிவு எனக்கே
மலர்ந்திடக் கருணை மழைபொழி மழையே
தூய்மையால் எனது துரிசெலாம் நீக்கிநல்
வாய்மையால் கருணை மழைபொழி மழையே

வெம்மல இரவது விடி தருணம்தனில்
செம்மையில் உதித்துளம் திகழ்ந்த செஞ்சுடரே
திரையெலாம் தவிர்த்துச் செவ்விஉற்று ஆங்கே
வரையெலாம் விளங்க வயங்கு செஞ்சுடரே
அலகிலாத் தலைவர்கள் அரசு செய் தத்துவ
உலகெலாம் விளங்க ஓங்கு செஞ்சுடரே
முன்னுறு மலஇருள் முழுவது நீக்கியே
என்னுள வரைமேல் எழுந்த செஞ்சுடரே
ஆதியும் நடுவுடன் அந்தமும் கடந்த
ஜோதியாய் என்னுளம் சூழ்ந்த மெய்ச்சுடரே

உள்ளொளி ஓங்கிட உயிரொளி விளங்கிட
வெள்ளொளிகாட்டிய மெய்யருட்கனலே
நலங்கொளப் புரிந்திடு ஞானயா கத்திடை
வலஞ்சுழித்து எழுந்து வளர்ந்த மெய்க்கனலே
வேதமும் ஆகமவிரிவும் பரம்பர
நாதமும் கடந்த ஞானமெய்க் கனலே
எண்ணிய எண்ணிய எல்லாம்தர எனுள்
நண்ணிய புண்ணிய ஞானமெய்க் கனலே
வலமுறு சுத்தசன் மார்க்க நிலைபெறு
நலமெலாம் அளித்த ஞானமெய்க் கனலே

இரவொடு பகலிலா இயல்பொது நடமிடு
பரம வேதாந்தப் பரம்பரஞ் சுடரே
வரநிறை பொதுவிடை வளர்திரு நடம்புரி
பரம சித்தாந்தப் பதிபரஞ் சுடரே
சமரச சத்தியச் சபையில் நடம்புரி
சமரச சத்தியத் தற்சுயம் சுடரே

சபைஎன துளமெனத் தானமர்ந்து எனக்கே
அபயம் அளித்ததோர் அருட்பெருஞ்ஜோதி
மருளெலாம் தவிர்த்து வரமெலாம் கொடுத்தே
அருளமுது அருத்தியஅருட்பெருஞ்ஜோதி
வாழிநின்பேரருள் வாழிநின் பெருஞ்சீர்
ஆழி ஒன்றளித்த அருட்பெருஞ்ஜோதி
என்னையும் பொருளென எண்ணி என்னுளத்தே
அன்னையும் அப்பனும் ஆகி வீற்றிருந்து
உலகியல் சிறிதும் உளம்பிடி யாவகை
அலகில்பே ரருளால் அறிவது விளக்கிச்
சிறுநெறி செல்லாத் திறனளித்து அழியாது
உறுநெறி உணர்ச்சி தந்து ஒளியுறப் புரிந்து
சாகாக் கல்வியின் தரமெலாம் உணர்த்திச்
சாகா வரத்தையும் தந்துமேன் மேலும்
அன்பையும் விளைவித்து அருட்பே ரொளியால்
இன்பையும் நிறைவித்து என்னையும் நின்னையும்
ஓர்உரு ஆக்கியான் உன்னியபடி எலாம்
சீர்உறச் செய்துயிர்த் திறம்பெற அழியா
அருளமுது அளித்தனை அருள்நிலை ஏற்றினை
அருளறிவு அளித்தனை அருட்பெருஞ்ஜோதி
வெல்கநின் பேரருள் வெல்கநின் பெருஞ்சீர்
அல்கலின் றோங்கிய அருட்பெருஞ்ஜோதி

உலகுயிர்த் திரளெலாம் ஒளிநெறி பெற்றிட
இலகும் ஐந்தொழிலையும் யான்செயத் தந்தனை
போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி
மூவரும் தேவரும் முத்தரும் சித்தரும்
யாவரும் பெற்றிடா இயல்எனக் களித்தனை
போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி
சித்திகள் அனைத்தையும் தெளிவித்து எனக்கே
சத்திய நிலைதனைத் தயவினில் தந்தனை
போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி
உலகினில் உயிர்களுக்கு உறும்இடையூ றெலாம்
விலகநீ அடைந்து விலக்குக மகிழ்க
சுத்த சன்மார்க்க சுகநிலை பெறுக
உத்தமன் ஆகுக ஓங்குக என்றனை
போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி
அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி

திருச்சிற்றம்பலம்



# 3. அருட்பெருஞ்ஜோதி அட்டகம்

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

5 அருட்பெரு வெளியில் அருட்பெரு உலகத்து
அருட்பெருந் தலத்து மேல் நிலையில்
அருட்பெரும் பீடத்து அருட்பெரு வடிவில்
அருட்பெரும் திருவிலே அமர்ந்த
அருட்பெரும் பதியே அருட்பெரும் நிதியே
அருட்பெரும் சித்தி என் அமுதே
அருட்பெரும் களிப்பே அருட்பெரும் சுகமே
அருட்பெருஞ் ஜோதி என் அரசே. 1

6 குலவுபே ரண்டப் பகுதியோர் அனந்த
கோடி கோடிகளும் ஆங்காங்கே
நிலவிய பிண்டப் பகுதிகள் முழுதும்
நிகழ்ந்தபற் பலபொருள் திரளும்
விலகுறாது அகத்தும் புறத்தும் மேலிடத்தும்
மெய்யறி வானந்தம் விளங்க
அலகுறாது ஒழியாது அதுவதில் விளங்கும்
அருட்பெருஞ் ஜோதிஎன் அரசே. 2

7 கண்முதல் பொறியால் மனமுதல் கரணக்
கருவினால் பகுதியின் கருவால்
எண்முதல் புருட தரத்தினால் பரத்தால்
இசைக்கும் ஓர் பரம்பர உணர்வால்
விண்முதல் பரையால் பராபர அறிவால்
விளங்குவது அரிதென உணர்ந்தோர்
அண்முதல் தடித்துப் படித்திட ஓங்கும்
அருட்பெருஞ் ஜோதிஎன் அரசே. 3

8 நசைத்த மேனிலை ஈதென உணர்ந்தாங்கே
நண்ணியும் கண்ணுறாது அந்தோ
திசைத்தமா மறைகள் உயங்கின மயங்கித்
திரும்பின எனில் அதன் இயலை
இசைத்தல் எங்ஙனமோ ஐயகோ சிறிதும்
இசைத்திடு வேம்என நாவை
அசைத்திடற்கு அரிதென்று உணர்ந்துளோர் வழுத்தும்
அருட்பெருஞ் ஜோதிஎன் அரசே. 4

9 சுத்த வேதாந்த மவுனமோ அலது
சுத்த சித்தாந்த ராசியமோ
நித்த நாதாந்த நிலை அனுபவமோ
நிகழ்பிற முடிபின் மேல்முடிபோ
புத்தமு தனைய சமரசத் ததுவோ
பொருளியல் அறிந்திலம் எனவே
அத்தகை உணர்ந்தோர் உரைத்து உரைத்தேத்தும்
அருட்பெருஞ் ஜோதிஎன் அரசே. 5

10 ஏகமோ அன்றி அனேகமோ என்றும்
இயற்கையோ செயற்கையோ சித்தோ
தேகமோ பொதுவோ சிறப்பதோ பெண்ணோ
திகழ்ந்திடும் ஆணதோ அதுவோ
யோகமோ பிரிவோ ஒளியதோ வெளியோ
உரைப்பது எற்றோஎன உணர்ந்தோர்
ஆகமோ டுரைத்து வழுத்த நின்றோங்கும்
அருட்பெருஞ்ஜோதி என் அரசே. 6

11 தத்துவம் அனைத்தும் தனித்தனி கடந்தேம்
தத்துவா தீதமேல் நிலையில்
சித்தியல் முழுதும் தெரிந்தனம் அவைமேல்
சிவநிலை தெரிந்திடச் சென்றேம்
ஒத்தஅந் நிலைக்கண் யாமும் எம்உணர்வும்
ஒருங்குறக் கரைந்துபோ யினம்என்று
அத்தகை யுணர்ந்தோர் வழுத்த நின்றோங்கும்
அருட்பெருஞ்ஜோதி என் அரசே. 7

12 எங்குமாய் விளங்கும் சிற்சபை யிடத்தே
இது அது என உரைப் பரிதாய்த்
தங்குமோர் இயற்கைத் தனிஅனு பவத்தைத்
தந்து எனைத் தன்மய மாக்கிப்
பொங்கும் ஆனந்த போகபோக் கியனாய்ப்
புத்தமு தருத்தியென் உளத்தே
அங்கையில் கனிபோன்று அமர்ந்தருள் புரிந்த
அருட்பெருஞ்ஜோதி என் அரசே. 8

திருச்சிற்றம்பலம்

# 4. பதிவிளக்கம்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

13 அகரநிலை விளங்குசத்தர் அனைவருக்கும் அவர்பால்
அமர்ந்தசத்தி மாரவர்கள் அனைவருக்கும் அவரால்
பகரவரும் அண்டவகை அனைத்தினுக்கும் பிண்டப்
பகுதிகள்அங் கனைத்தினுக்கும் பதங்கள்அனைத் தினுக்கும்
இகரமுறும் உயிர்எவைக்கும் கருவிகள்அங் கெவைக்கும்
எப்பொருட்கும் அனுபவங்கள் எவைக்கும்முத்தி எவைக்கும்
சிகரமுதல் சித்திவகை எவைக்கும்ஒளி வழங்கும்
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வமொன்றே கண்டீர். 1

14 வண்ணமிகு பூதவெளி பகுதிவெளி முதலா
வகுக்குமடி வெளிகளெலாம் வயங்குவெளி யாகி
எண்ணமுறு மாமவுன வெளியாகி அதன்மேல்
இசைத்தபர வெளியாகி இயல்உபய வெளியாய்
அண்ணுறுசிற் பரவெளியாய்த் தற்பரமாம் வெளியாய்
அமர்ந்தபெரு வெளியாகி அருளின்ப வெளியாய்த்
திண்ணமுறும் தனிஇயற்கை உண்மைவெளி யான
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வமொன்றே கண்டீர். 2

15 சார்பூத விளக்கமொடு பகுதிகளின் விளக்கம்
தத்துவங்கள் விளக்கமெலாந் தருவிளக்க மாகி
நேராதி விளக்கமதாய்ப் பரைவிளக்க மாகி
நிலைத்தபரா பரைவிளக்க மாகிஅகம் புறமும்
பேராசை விளக்கமதாய்ச் சுத்தவிளக் கமதாய்ப்
பெருவிளக்க மாகிஎலாம் பெற்றவிளக் கமதாய்ச்
சீராட விளங்குகின்ற இயற்கைவிளக் கமதாம்
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வமொன்றே கண்டீர். 3

16 இடம்பெறும்இந் திரியஇன்பம் கரணஇன்பம் உலக
இன்பம்உயிர் இன்பம்முதல் எய்தும்இன்ப மாகித்
தடம்பெறும்ஓர் ஆன்மஇன்பம் தனித்தஅறி வின்பம்
சத்தியப்பே ரின்பம்முத்தி இன்பமுமாய் அதன்மேல்
நடம்பெறுமெய்ப் பொருள்இன்பம் நிரதிசய இன்பம்
ஞானசித்திப் பெரும்போக நாட்டரசின் பமுமாய்த்
திடம்பெறஓங் கிய இயற்கைத் தனிஇன்ப மயமாம்
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வமொன்றே கண்டீர். 4

17 எல்லாந்தான் உடையதுவாய் எல்லாம்வல் லதுவாய்
எல்லாந்தான் ஆனதுவாய் எல்லாந்தான் அலதாய்ச்
சொல்லாலும் பொருளாலும் தோன்றும்அறி வாலும்
துணிந்தளக்க முடியாதாய்த் துரியவெளி கடந்த
வல்லாளர் அனுபவத்தே அதுஅதுவாய் அவரும்
மதித்திடுங்கால் அரியதுவாய்ப் பெரியதுவாய் அணுவும்
செல்லாத நிலைகளினும் செல்லுவதாய் விளங்கும்
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வமொன்றே கண்டீர். 5

18 அயர்வறுபே ரறிவாகி அவ்வறிவுக் கறிவாய்
அறிவறிவுள் அறிவாய்ஆங் கதனுள்ளோர் அறிவாய்
மயர்வறும்ஓர் இயற்கைஉண்மைத் தனிஅறிவாய்ச் செயற்கை
மன்னும்அறி வனைத்தினுக்கும் வயங்கியதா ரகமாய்த்
துயரறுதா ரகமுதலாய் அம்முதற்கோர் முதலாய்த்
துரியநிலை கடந்ததன்மேல் சுத்தசிவ நிலையாய்
உயர்வுறுசிற் றம்பலத்தே எல்லாந்தா மாகி
ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவருண்டே கண்டீர். 6

19 அண்டம்எலாம் பிண்டம்எலாம் உயிர்கள்எலாம் பொருள்கள்
ஆனஎலாம் இடங்கள்எலாம் நீக்கமற நிறைந்தே
கொண்டஎலாங் கொண்டஎலாங் கொண்டுகொண்டு மேலும்
கொள்வதற்கே இடங்கொடுத்துக் கொண்டுசலிப் பின்றிக்
கண்டமெலாங் கடந்துநின்றே அகண்டமதாய் அதுவும்
கடந்தவெளி யாய்அதுவும் கடந்ததனி வெளியாம்
ஒண்தகுசிற் றம்பலத்தே எல்லாம்வல் லவராய்
ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவருண்டே கண்டீர். 7

20 பாரொடுநீர் கனல்காற்றா காயம்எனும் பூதப்
பகுதிமுதல் பகர்நாதப் பகுதிவரை யான
ஏர்பெறுதத் துவஉருவாய்த் தத்துவகா ரணமாய்
இயம்பியகா ரணமுதலாய்க் காரணத்தின் முடிவாய்
நேருறும்அம் முடிவனைத்தும் நிகழ்ந்திடுபூ ரணமாய்
நித்தியமாய்ச் சத்தியமாய் நிற்குணசிற் குணமாய்
ஓர்தருசன் மாத்திரமாம் திருச்சிற்றம் பலத்தே
ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவருண்டே கண்டீர். 8

21 இரவிமதி உடுக்கள்முதல் கலைகள்எலாம் தம்மோர்
இலேசமதாய் எண்கடந்தே இலங்கியபிண் டாண்டம்
பரவுமற்றைப் பொருள்கள்உயிர்த் திரள்கள்முதல் எல்லாம்
பகர்அகத்தும் புறத்தும்அகப் புறத்துடன்அப் புறத்தும்

விரவிளங்கும் நீக்கமற விளங்கிஅந்த மாதி
விளம்பரிய பேரொளியாய் அவ்வொளிப்பே ரொளியாய்
உரவுறுசின் மாத்திரமாம் திருச்சிற்றம் பலத்தே
ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவருண்டே கண்டீர். 9

22 ஆற்றுவிட யானந்தம் தத்துவஆ னந்தம்
அணியோகா னந்தம்மதிப் பருஞானா னந்தம்
பேற்றுறும்ஆன் மானந்தம் பரமானந் தஞ்சேர்
பிரமானந் தம்சாந்தப் பேரானந் தத்தோடு
ஏற்றிடும்ஏ கானந்தம் அத்துவிதா னந்தம்
இயன்றசச்சி தானந்தம் சுத்தசிவா னந்த
ஊற்றமதாம் சமரசஆ னந்தசபை தனிலே
ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவருண்டே கண்டீர். 10

23 வகுத்தஉயிர் முதற்பலவாம் பொருள்களுக்கும் வடிவம்
வண்ணநல முதற்பலவாங் குணங்களுக்கும் புகுதல்
புகுத்தலுறல் முதற்பலவாம் செயல்களுக்கும் தாமே
புகல்கரணம் உபகரணம் கருவிஉப கருவி
மிகுத்தஉறுப் பதிகரணம் காரணம்பல் காலம்
விதித்திடுமற் றவைமுழுதும் ஆகிஅல்லார் ஆகி
உகப்புறும்ஓர் சுத்தசிவா னந்தசபை தனிலே
ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவருண்டே கண்டீர். 11

24 இயற்கையிலே பாசங்கள் ஒன்றும்இலார் குணங்கள்
ஏதுமிலார் தத்துவங்கள் ஏதுமிலார் மற்றோர்
செயற்கைஇல்லார் பிறப்பில்லார் இறப்பில்லார் யாதும்
திரிபில்லார் களங்கம்இல்லார் தீமைஒன்றும் இல்லார்
வியப்புறவேண் டுதல்இல்லார் வேண்டாமை இல்லார்
மெய்யேமெய் ஆகிளங்கும் விளங்கிஇன்ப மயமாய்
உயத்தரும்ஓர் சுத்தசிவா னந்தசபை தனிலே
ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவருண்டே கண்டீர். 12

25 ஒன்றும்அலார் இரண்டும்அலார் ஒன்றிரண்டும் ஆனார்
உருவும்அலார் அருவும்அலார் உருஅருவும் ஆனார்
அன்றும்உளார் இன்றும்உளார் என்றும்உளார் தமக்கோர்
ஆதியிலார் அந்தமிலார் அரும்பெருஞ்சோ தியினார்
என்றுகனல் மதிஅகத்தும் புறத்தும்விளங் கிடுவார்
யாவும்இலார் யாவும்உளார் யாவும்அலார் யாவும்
ஒன்றுறுதாம் ஆகிநின்றார் திருச்சிற்றம் பலத்தே
ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவருண்டே கண்டீர். 13

திருச்சிற்றம்பலம்

# 5. சிவ பதிவிளக்கம்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

26 உரைவளர் கலையே கலைவளர் உரையே உரைகலை வளர்தரு பொருளே
விரைவளர் மலரே மலர்வளர் விரையே விரைமலர் வளர்தரு நறவே
கரைவளர் தருவே தருவளர் கரையே கரைதரு வளர்கிளர் கனியே
பரைவளர் ஒளியே ஒளிவளர் பரையே பரையொளி வளர்சிவ பதியே. 1

27 ஒளிவளர் உயிரே உயிர்வளர் ஒளியே ஒளியுயிர் வளர்தரும் உணர்வே
வெளிவளர் நிறைவே நிறைவளர் வெளியே வெளிநிறை வளர்தரு விளைவே
வளிவளர் அசைவே அசைவளர் வளியே வளியசை வளர்தரு செயலே
அளிவளர் அனலே அனல்வளர் அளியே அளியனல் வளர்சிவ பதியே. 2

28 அடிவளர் இயலே இயல்வளர் அடியே அடியியல் வளர்தரு கதியே
முடிவளர் பொருளே பொருள்வளர் முடியே முடிபொருள் வளர்சுக நிதியே
படிவளர் விதையே விதைவளர் படியே படிவிதை வளர்பல நிகழ்வே
தடிவளர் முகிலே முகில்வளர் தடியே தடிமுகில் வளர்சிவ பதியே. 3

29 சிரம்வளர் முதலே முதல்வளர் சிரமே சிரமுதல் வளர்தரு செறிவே
தரம்வளர் நிலையே நிலைவளர் தரமே தரநிலை வளர் தரு தகவே
வரம்வளர் நிறையே நிறைவளர் வரமே வரநிலை வளர்தரு வயமே
பரம்வளர் பதமே பதம்வளர் பரமே பரபதம் வளர்சிவ பதியே. 4

30 திருவளர் வளமே வளம்வளர் திருவே திருவளம் வளர்தரு திகழ்வே
உருவளர் வடிவே வடிவளர் உருவே உருவடி வளர்தரு முறைவே
கருவளர் அருவே அருவளர் கருவே கருவரு வளர்நவ கதியே
குருவளர் நெறியே நெறிவளர் குருவே குருநெறி வளர்சிவ பதியே. 5

31 நிறைவளர் முறையே முறைவளர் நிறையே நிறைமுறை வளர்பெரு நெறியே
பொறைவளர் புவியே புவிவளர் பொறையே புவிபொறை வளர்தரு புனலே
துறைவளர் கடலே கடல்வளர் துறையே துறைகடல் வளர்தரு சுதையே
மறைவளர் பொருளே பொருள்வளர் மறையே மறைபொருள் வளர்சிவ பதியே. 6

32 தவம்வளர் தயையே தயைவளர் தவமே தவநிறை தயைவளர் சதுரே
நவம்வளர் புரமே புரம்வளர் நவமே நவபுரம் வளர்தரும் இறையே
துவம்வளர் குணமே குணம்வளர் துவமே துவகுணம் வளர்தரு திகழ்வே
சிவம்வளர் பதமே பதம்வளர் சிவமே சிவபதம் வளர்சிவ பதியே. 7

33 நடம்வளர் நலமே நலம்வளர் நடமே நடநலம் வளர்தரும் ஒளியே
இடம்வளர் வலமே வலம்வளர் இடமே இடம்வலம் வளர்தரும் இசைவே
திடம்வளர் உளமே உளம்வளர் திடமே திடவுளம் வளர்தரு திருவே
கடம்வளர் உயிரே உயிர்வளர் கடமே கடமுயிர் வளர்சிவ பதியே 8

34 அதுவளர் அணுவே அணுவளர் அதுவே அதுவணு வளர்தரும் உறவே
விதுவளர் ஒளியே ஒளிவளர் விதுவே விதுஒளி வளர்தரு செயலே
மதுவளர் சுவையே சுவைவளர் மதுவே மதுவுறு சுவைவளர் இயலே
பொதுவளர் வெளியே வெளிவளர் பொதுவே பொதுவெளி வளர்சிவ பதியே 9

35 நிதிவளர் நிலமே நிலம்வளர் நிதியே நிதிநிலம் வளர்தரு நிறைவே
மதிவளர் நலமே நலம்வளர் மதியே மதிநலம் வளர்தரு பரமே
கதிவளர் நிலையே நிலைவளர் கதியே கதிநிலை வளர்தரு பொருளே
பதிவளர் பதமே பதம்வளர் பதியே பதிபதம் வளர்சிவ பதியே. 10

திருச்சிற்றம்பலம்

## 6. ஆற்றாமை

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

36 எழுவினும் வலிய மனத்தினேன் மலஞ்சார் ஈயினும் நாயினும் இழிந்தேன்
புழுவினும் சிறியேன்பொய்விழைந் துழல்வேன்புன்மையேன் புலைத்தொழிற்கடையேன்
வழுவினும் பெரியேன் மடத்தினும் பெரியேன் மாண்பிலா வஞ்சக நெஞ்சக்
குழுவினும் பெரியேன்அம்பலக் கூத்தன் குறிப்பினுக் கென்கட வேனே. 1

37 கற்றமே லவர்தம் உறவினைக் கருதேன் கலகர்தம் உறவினிற் களித்தேன்
உற்றமே தகவோர் உவட்டுற இருந்தேன் உலகியற் போகமே உவந்தேன்
செற்றமே விழையும் சிறுநெறி பிடித்தேன் தெய்வம்ஒன் றெனும்அறி வறியேன்
குற்றமே உடையேன் அம்பலக் கூத்தன் குறிப்பினுக் கென்கட வேனே. 2

38 கடுமையேன் வஞ்சக் கருத்தினேன் பொல்லாக் கன்மனக் குரங்கனேன் கடையேன்
நெடுமைஆண் பனைபோல் நின்றவெற் றுடம்பேன் நீசனேன் பாசமே உடையேன்
நடுமைஒன் றறியேன் கெடுமையிற் கிளைத்த நச்சுமா மரம்எனக்கிளைத்தேன்
கொடுமையே குறித்தேன் அம்பலக் கூத்தன் குறிப்பினுக் கென்கட வேனே. 3

39 நிலத்திலும் பணத்தும் நீள்விழி மடவார் நெருக்கிலும் பெருக்கிய நினைப்பேன்
புலத்திலும் புரைசேர் பொறியிலும் மனத்தைப் போக்கிவீண் போதுபோக் குறுவேன்
நலத்தில்ஓர் அணுவும் நண்ணிலேன் கடைய நாயினுங் கடையனேன் நவையேன்
குலத்திலும் கொடியேன் அம்பலக் கூத்தன் குறிப்பினுக் கென்கட வேனே. 4

40 செடிமுடிந் தலையும் மனத்தினேன் துன்பச் செல்லினால் அரிப்புண்ட சிறியேன்
அடிமுடி அறியும் ஆசைசற் றறியேன் அறிந்தவர் தங்களை அடையேன்
படிமுடி வழித்துக் கடிகொளும் கடையர் பணத்திலும் கொடியனேன் வஞ்சக்
கொடிமுடிந் திடுவேன் அம்பலக் கூத்தன் குறிப்பினுக் கென்கட வேனே.
5

41 அரங்கினிற் படைகொண் டுயிர்க்கொலை புரியும் அறக்கடை யவரினுங் கடையேன்
இரங்கில்ஓர் சிறிதும் இரக்கம்உற் றறியேன் இயலுறு நாசியுட் கிளைத்த
சிரங்கினிற் கொடியேன் சிவநெறி பிடியேன் சிறுநெறிச் சழக்கையே சிலுகுக்
குரங்கெனப் பிடித்தேன் அம்பலக் கூத்தன் குறிப்பினுக் கென்கட வேனே.
6

42 வாட்டமே உடையார் தங்களைக் காணின் மனஞ்சிறி திரக்கமுற் றறியேன்
கோட்டமே உடையேன் கொலையனேன் புலையேன் கூற்றினும் கொடியனேன் மாயை
ஆட்டமே புரிந்தேன் அறத்தொழில் புரியேன் அச்சமும் அவலமும் இயற்றும்
கூட்டமே விழைந்தேன் அம்பலக் கூத்தன் குறிப்பினுக் கென்கட வேனே.
7

43 கலைத்தொழில் அறியேன் கள்உணுங் கொடியேன் கறிக்குழல் நாயினும் கடையேன்
விலைத்தொழில் உடையேன் மெய்எலாம் வாயாய் விளம்புறும் வீணனேன் அசுத்தப்
புலைத்தொழில் புரிவேன் பொய்யனேன் சீற்றம் பொங்கிய மனத்தினேன் பொல்லாக்
கொலைத்தொழில் புரிவேன் அம்பலக் கூத்தன் குறிப்பினுக் கென்கட வேனே.
8

44 பணமிலார்க் கிடுக்கண் புரிந்துணுஞ் சோற்றுப் பணம்பறித் துழல்கின்ற படிறேன்
எணமிலா தடுத்தார்க் குறுபெருந்தீமை இயற்றுவேன் எட்டியே அனையேன்
மணமிலா மலரிற் பூத்தனன் இருகால் மாடெனத் திரிந்திழல் கின்றேன்
குணமிலாக் கொடியேன் அம்பலக் கூத்தன் குறிப்பினுக் கென்கட வேனே.
9

45 கடியரில் கடியேன் கடையரில் கடையேன் கள்வரில் கள்வனேன் காமப்
பொடியரில் பொடியேன் புலையரில் புலையேன் பொய்யரில் பொய்யனேன் பொல்லாச்
செடியரில் செடியேன் சினத்தரில் சினத்தேன் தீயரில் தீயனேன் பாபக்
கொடியரில் கொடியேன் அம்பலக் கூத்தன் குறிப்பினுக் கென்கட வேனே.
10

திருச்சிற்றம்பலம்



# 7. நான் ஏன் பிறந்தேன்

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

46 குலத்திடையும் கொடியன்ஒரு குடித்தனத்தும் கொடியேன்
குறிகளிலும் கொடியன்அன்றிக் குணங்களிலும் கொடியேன்
மலத்திடையே புழுத்தசிறு புழுக்களிலும் கடையேன்
வன்மனத்துப் பெரும்பாவி வஞ்சநெஞ்சப் புலையேன்
நலத்திடைஓர் அணுஅளவும் நண்ணுகிலேன் பொல்லா
நாய்க்குநகை தோன்றநின்றேன் பேய்க்கும்மிக இழிந்தேன்
நிலத்திடைநான் ஏன்பிறந்தேன் நின்கருத்தை அறியேன்
நிர்க்குணனே நடராஜ நிபுணமணி விளக்கே. 1

47 விளக்கறியா இருட்டறையில் கவிழ்ந்துகிடந் தழுது
விம்முகின்ற குழவியினும் மிகப்பெரிதும் சிறியேன்
அளக்கறியாத் துயர்க்கடலில் விழுந்துநெடுங் காலம்
அலைந்தலைந்து மெலிந்ததுரும் பதனின்மிகத் துரும்பேன்
கிளக்கறியாக் கொடுமைஎலாம் கிளைத்தபழு மரத்தேன்
கெடுமதியேன் கடுமையினேன் கிறிபேசும் வெறியேன்
களக்கறியாப் புவியிடைநான் ஏன்பிறந்தேன் அந்தோ
கருணைநடத் தரசேநின் கருத்தைஅறி யேனே. 2

48 அறியாத பொறியவர்க்கும் இழிந்ததொழி லவர்க்கும்
அதிகரித்துத் துன்மார்க்கத் தரசுசெயுங் கொடியேன்
குறியாத கொடும்பாவச் சுமைசுமக்கும் திறத்தேன்
கொல்லாமை என்பதைஓர் குறிப்பாலும் குறியேன்
செறியாத மனக்கடையேன் தீமையெலாம் உடையேன்
சினத்தாலும் மதத்தாலும் செறிந்தபுதல் அனையேன்
எறியாத புவியிடைநான் ஏன்பிறந்தேன் உன்றன்
இதயமறி யேன்மன்றில் இனித்தநடத் திறையே. 3

49 இனித்தபழச் சாறுவிடுத் திழிந்தமலங் கொளும்ஓர்
இழிவிலங்கில் இழிந்துநின்றேன் இரக்கம்ஒன்றும் இல்லேன்
அனித்தநெறி யிடைத்தொடர்ந்து மனித்தஉடம் பெடுத்த
அறக்கடையர் தமக்கெல்லாம் அறக்கடையன் ஆனேன்
பனித்தமனக் குரங்காட்டிப் பலிக்குழலும் கொடியேன்
பாதகமும் சூதகமும் பயின்றபெரும் படிறேன்
தனித்தகடுங் குணத்தேன்நான் ஏன்பிறந்தேன் நினது
தனிக்கருத்தை அறிந்திலேன் சபைக்கேற்றும் ஒளியே. 4

50 ஏறுகின்றேம் எனமதித்தே இறங்குகின்ற கடையேன்
ஏதமெலாம் நிறைமனத்தேன் இரக்கமிலாப் புலையேன்
சீறுகின்ற புலியனையேன் சிறுதொழிலே புரிவேன்
செய்வகைஒன் றறியாத சிறியரினும் சிறியேன்
மாறுகின்ற குணப்பேதை மதியதனால் இழிந்தேன்
வஞ்சம்எலாம் குடிகொண்ட வாழ்க்கைமிக உடையேன்
வீறுகின்ற உலகிடைநான் ஏன்பிறந்தேன் நினது
மெய்க்கருத்தை அறிந்திலேன் விளங்குநடத் தரசே. 5

51 அரசர்எலாம் மதித்திடப்பே ராசையிலே அரசோ
டால்எனவே மிகக்கிளைத்தேன் அருளறியாக் கடையேன்
புரசமரம் போற்பருத்தேன் எட்டிஎனத் தழைத்தேன்
புங்கெனவும் புளிஎனவும் மங்கிஉதிர் கின்றேன்
பரசும்வகை தெரிந்துகொளேன் தெரிந்தாரைப் பணியேன்
பசைஅறியாக் கருங்கல்மனப் பாவிகளிற் சிறந்தேன்
விரசுநிலத் தேன்பிறந்தேன் நின்கருத்தை அறியேன்
வியக்குமணி மன்றோங்கி விளங்குபரம் பொருளே. 6

52 பொருளறியேன் பொருளறிந்தார் போன்றுநடித் திங்கே
பொங்கிவழிந் துடைகின்றேன் பொய்யகத்தேன் புலையேன்
மருளறியாத் திருவாளர் உளங்கயக்கத் திரிவேன்
வையுண்டும் உழவுதவா மாடெனவே தடித்தேன்
வெருளறியாக் கொடுமனத்தேன் விழற்கிறைத்துக் களிப்பேன்
வீணர்களில் தலைநின்றேன் விலக்கனைத்தும் புரிவேன்
தெருளறியேன் உலகிடைநான் ஏன்பிறந்தேன் நினது
திருவுளத்தை அறிந்திலேன் தெய்வநடத் தவனே. 7

53 தவம்புரியேன் தவம்புரிந்தார் தமைப்போல நடித்துத்
தருக்குகின்றேன் உணர்ச்சியிலாச் சடம்போல இருந்தேன்
பவம்புரிவேன் கமரினிடைப் பால்கவிழ்க்கும் கடையேன்
பயனறியா வஞ்சமனப் பாறைசுமந் துழல்வேன்
அவம்புரிவேன் அறிவறியேன் அன்பறியேன் அன்பால்
ஐயாநின் அடியடைந்தார்க் கணுத்துணையும் உதவேன்
நவம்புரியும் உலகிடைநான் ஏன்பிறந்தேன் நினது
நல்லதிரு வுளம்அறியேன் ஞானநடத் திறையே. 8

54 இறைஅளவும் அறிவொழுக்கத் திச்சையிலேன் நரகில்
இருந்துழன்று வாடுகின்றோர் எல்லோர்க்கும் இழிந்தேன்
பொறைஅளவோ நன்மைஎலாம் போக்கில்விட்டுத் தீமை
புரிகின்றேன் எரிகின்ற புதுநெருப்பிற் கொடியேன்

நிறைஅளவோ முறைஅளவோ நிலைஅளவுந் தவிர்ந்த
நெடுஞ்சால நெஞ்சகத்தேன் நீலவிடம் போல்வேன்
கறையளவா உலகிடைநான் ஏன்பிறந்தேன் நினது
கருத்தறியேன் கருணைநடங் காட்டுகின்ற குருவே. 9

55 காட்டுகின்ற உவர்க்கடல்போல் கலைகளிலும் செல்வக்
களிப்பினிலும் சிறந்துமிகக் களித்துநிறை கின்றேன்
நீட்டுகின்ற ஆபத்தில் ஒருசிறிதும் உதவேன்
நெடுந்தூரம் ஆழந்துதவாப் படுங்கிணறு போல்வேன்
ஆட்டுகின்ற அருட்பெருமை ஒருசிறிதும் தெரியேன்
அச்சமிலேன் நாணமிலேன் அடக்கம்ஒன்றும் இல்லேன்
கூட்டுகின்ற உலகிடைநான் ஏன்பிறந்தேன் நினது
குறிப்பறியேன் மன்றில்நடங் குலவுகுல மணியே. 10

திருச்சிற்றம்பலம்

## 8. மாயை வலிக்கழுங்கல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

56 தாவு மான்எனக் குதித்துக்கொண் டோடித்
தைய லார்முலைத் தடம்படுங் கடையேன்
கூவு காக்கைக்குச் சோற்றில்ஓர் பொருக்கும்
கொடுக்க நேர்ந்திடாக் கொடியரில் கொடியேன்
ஓவு றாதுழல் ஈஎனப் பலகால்
ஓடி ஓடியே தேடுறும் தொழிலேன்
சாவு றாவகைக் கென்செயக் கடவேன்
தந்தை யேஎனைத் தாங்கிக்கொண் டருளே. 1

57 போக மாதியை விழைந்தனன் வீணில்
பொழுது போக்கிடும் இழுதையேன் அழியாத்
தேக மாதியைப் பெறமுயன் றறியேன்
சிரங்கு நெஞ்சகக் குரங்கொடும் உழல்வேன்
காக மாதிகள் அருந்தஓர் பொருக்கும்
காட்ட நேர்ந்திடாக் கடையரில் கடையேன்
ஆக மாதிசொல் அறிவறி வேனோ
அப்ப னேஎனை ஆண்டுகொண் டருளே. 2

58 விழியைத் தூர்க்கின்ற வஞ்சரை விழைந்தேன்
விருந்தி லேஉண வருந்திஓர் வயிற்றுக்
குழியைத் தூர்க்கின்ற கொடியரில் கொடியேன்
கோப வெய்யனேன் பாபமே பயின்றேன்

வழியைத் தூர்ப்பவர்க் குளவுரைத் திடுவேன்
மாய மேபுரி பேயரில் பெரியேன்
பழியைத் தூர்ப்பதற் கென்செயக் கடவேன்
பரம னேஎனைப் பரிந்துகொண் டருளே. 3

59 மதத்தி லேஅபி மானங்கொண் டுழல்வேன்
வாட்ட மேசெயும் கூட்டத்தில் பயில்வேன்
இதத்தி லேஒரு வார்த்தையும் புகலேன்
ஈயும் மொய்த்திடற் கிசைவுறா துண்பேன்
குதத்தி லேஇழி மலத்தினுங் கடையேன்
கோடை வெய்யலின் கொடுமையிற் கொடியேன்
சிதத்தி லேஉறற் கென்செயக் கடவேன்
தெய்வ மேஎனைச் சேர்த்துக் கொண் டருளே. 4

60 கொடிய வெம்புலிக் குணத்தினேன் உதவாக்
கூவம் நேர்ந்துளேன் பாவமே பயின்றேன்
கடிய நெஞ்சினேன் குங்குமம் சுமந்த
கழுதை யேன்அவப் பொழுதையே கழிப்பேன்
விடியு முன்னரே எழுந்திடா துறங்கும்
வேட னேன்முழு மூடரில் பெரியேன்
அடிய னாவதற் கென்செயக் கடவேன்
அப்ப னேஎனை ஆண்டுகொண் டருளே. 5

61 தூங்கு கின்றதே சுகம்என அறிந்தேன்
சோற தேபெறும் பேறதென் றுணர்ந்தேன்
ஏங்கு கின்றதே தொழிலெனப் பிடித்தேன்
இரக்கின் றோர்களே என்னினும் அவர்பால்
வாங்கு கின்றதே பொருள்என வலித்தேன்
வஞ்ச நெஞ்சினால் பஞ்செனப் பறந்தேன்
ஓங்கு கின்றதற் கென்செயக் கடவேன்
உடைய வாஎனை உவந்துகொண் டருளே. 6

62 வருத்த நேர்பெரும் பாரமே சுமந்து
வாடும் ஓர்பொதி மாடென உழன்றேன்
பருத்த ஊனோடு மலம் உணத் திரியும்
பன்றி போன்றுளேன் நன்றியொன் றறியேன்
கருத்தி லாதயல் குரைத்தலுப் படைந்த
கடைய நாயினிற் கடையனேன் அருட்குப்
பொருத்தன் ஆவதற் கென்செயக் கடவேன்
புண்ணிமையாஎனைப் புரிந்துகொண் டருளே. 7

63 துருக்க லோகொடுங் கருங்கலோ வயிரச்
சூழ்க லோஎனக் காழ்கொளும் மனத்தேன்
தருக்கல் ஆணவக் கருக்கலோ டுழல்வேன்
சந்தை நாயெனப் பந்தமுற் றலைவேன்
திருக்கெ லாம்பெறு வெருக்கெனப் புகுவேன்
தீய னென்பெரும் பேயனேன் உளந்தான்
உருக்கல் ஆகுதற் கென்செயக் கடவேன்
உடைய வாஎனை உவந்துகொண் டருளே. 8

64 கான மேஉழல் விலங்கினிற் கடையேன்
காம மாதிகள் களைகணிற் பிடித்தேன்
மான மேலிடச் சாதியே மதமே
வாழ்க்கை யேஎன வாரிக்கொண் டலைந்தேன்
ஈன மேபொருள் எனக்களித் திருந்தேன்
இரக்கம் என்பதோர் எட்டுணை அறியேன்
ஞான மேவுதற் கென்செயக் கடவேன்
நாய காஎனை நயந்துகொண் டருளே. 9

65 இருளை யேஒளி எனமதித் திருந்தேன்
இச்சை யேபெரு விச்சைஎன் றலந்தேன்
மருளை யேதரு மனக்குரங் கோடும்
வனமெ லாஞ்சுழன் றினம்எனத் திரிந்தேன்
பொருளை நாடுநற் புந்திசெய் தறியேன்
பொதுவி லேநடம் புரிகின்றோய் உன்றன்
அருளை மேவுதற் கென்செயக் கடவேன்
அப்ப னேஎனை ஆண்டுகொண் டருளே. 10

திருச்சிற்றம்பலம்

## 9. முறையீடு

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

66 மருந்தறியேன் மணிஅறியேன் மந்திரம்ஒன் றறியேன்
மதிஅறியேன் விதிஅறியேன் வாழ்க்கைநிலை அறியேன்
திருந்தறியேன் திருவருளின் செயலறியேன் அறந்தான்
செய்தறியேன் மனமடங்கும் திறத்தினில்ஓர் இடத்தே
இருந்தறியேன் அறிந்தோரை ஏத்திடவும் அறியேன்
எந்தைபிரான் மணிமன்றம் எய்தஅறி வேனோ
இருந்ததிசை சொலஅறியேன் எங்ஙனம்நான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே. 1

67 அகங்காரக் கொடுங்கிழங்கை அகழ்ந்தெறிய அறியேன்
அறிவறிந்த அந்தணர்பால் செறியும்நெறி அறியேன்
நகங்கானம் உறுதவர்போல் நலம்புரிந்தும் அறியேன்
நச்சுமரக் கனிபோலே இச்சைகனிந் துழன்றேன்
மகங்காணும் புலவரெலாம் வந்துதொழ நடிக்கும்
மணிமன்றந் தனைஅடையும் வழியும்அறி வேனோ
இகங்காணத் திரிகின்றேன் எங்ஙனம்நான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே. 2

68 கற்குமுறை கற்றறியேன் கற்பனகற் றறிந்த
கருத்தர்திருக் கூட்டத்தில் களித்திருக்க அறியேன்
நிற்குநிலை நின்றறியேன் நின்றாரின் நடித்தேன்
நெடுங்காமப் பெருங்கடலை நீந்தும்வகை அறியேன்
சிற்குணமா மணிமன்றில் திருநடனம் புரியும்
திருவடிஎன் சென்னிமிசைச் சேர்க்கஅறி வேனோ
இற்குணஞ்செய் துழல்கின்றேன் எங்ஙனம்நான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே. 3

69 தேகமுறு பூதநிலைத் திறம்சிறிதும் அறியேன்
சித்தாந்த நிலைஅறியேன் சித்தநிலை அறியேன்
யோகமுறு நிலைசிறிதும் உணர்ந்தறியேன் சிறியேன்
உலகநடை யிடைக்கிடந்தே உழைப்பாரில் கடையேன்
ஆகமுறு திருநீற்றின் ஒளிவிளங்க அசைந்தே
அம்பலத்தில் ஆடுகின்ற அடியைஅறி வேனோ
ஏகஅனு பவம்அறியேன் எங்ஙனம்நான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே. 4

70 வேதாந்த நிலைநாடி விரைந்துமுயன் றறியேன்
மெய்வகையும் கைவகையும் செய்வகையும் அறியேன்
நாதாந்தத் திருவீதி நடந்திடுதற் கறியேன்
நான்ஆர்என் றறியேன்எங் கோன் ஆர்என் றறியேன்
போதாந்தத் திருநாடு புகஅறியேன் ஞான
பூரணா காயம்எனும் பொதுவைஅறி வேனோ
ஏதாந்தீ யேன்சரிதம் எங்ஙனம்நான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே. 5

71 கலைமுடிவு கண்டறியேன் கரணமெலாம் அடக்கும்
கதிஅறியேன் கதிஅறிந்த கருத்தர்களை அறியேன்
கொலைபுலைகள் விடுத்தறியேன் கோபமறுத் தறியேன்
கொடுங்காமக் கடல்கடக்கும் குறிப்பறியேன் குணமாம்

மைந்தன் என்றன்னை ஆண்டவன் எல்லாம்
வல்ல நாயகன் நல்லசீர் உடையான்
அந்த ணாளன்மெய் அறிவுடை யவன்என்
அப்பன் தன்மைஎன் தன்மைஎன் றறிமின். 149

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1727 என்உடலும் என்உயிரும் என்பொருளும்
நின்னஎன இசைந்தஞ் ஞான்றே
உன்னிடைநான் கொடுத்தனன்மற் றென்னிடைவே
றொன்றும்இலை உடையாய் இங்கே
புன்னிகரேன் குற்றமெலாம் பொறுத்ததுவும்
போதாமல் புணர்ந்து கொண்டே
தன்னிகர்என் றென வைத்தாய் இஞ்ஞான்றென்
கொடுப்பேன்நின் தன்மைக் கந்தோ. 150

1728 என்னுரைக்கேன் என்னுரைக்கேன் இந்தஅதி
சயந்தன்னை எம்மா னோர்காள்
பொன்னுரைக்கும் மணிமன்றில் திருநடனம்
புரிகின்ற புனிதன் என்னுள்
மின்உரைக்கும் படிகலந்தான் பிரியாமல்
விளங்குகின்றான் மெய்ம்மை யான
தன்னுரைக்கும் என்னுரைக்கும் சமரசம்செய்ப்
தருள்கின்றான் சகத்தின் மீதே. 151

1729 ஆடுகின்ற சேவடிக்கே ஆளானேன்
மாளாத ஆக்கைப் பெற்றேன்
கூடுகின்ற சன்மார்க்க சங்கத்தே
நடுவிருந்து குலாவு கின்றேன்
பாடுகின்றேன் எந்தைபிரான் பதப்புகழை
அன்பினொடும் பாடிப் பாடி
நீடுகின்றேன் இன்பக்கூத் தாடுகின்றேன்
எண்ணமெலாம் நிரம்பி னேனே. 152

கட்டளைக் கலிப்பா

1730 நாய்க்கும் ஓர்தவி சிட்டுப்பொன் மாமுடி
நன்று சூட்டினை என்றுநின் அன்பர்கள்
வாய்க்கு வந்த படிபல பேசவே
மதியி லேனையும் மன்னருட் சத்தியாம்
தாய்க்குக் காட்டிநல் தண்ணமு தூட்டிஓர்
தவள மாடப்பொன் மண்டபத் தேற்றியே
சேய்க்கு நேரஎன் கையில்பொற் கங்கணம்
திகழக் கட்டினை என்னைநின் செய்கையே. 153

எண்சீர்க் கழிநெடிலடி வேறு ஆசிரிய விருத்தம்

1731 தன்னைவிடத் தலைமைஒரு தகவினும்இங் கியலாத்
தனித்தலைமை பெரும்பதியே தருணதயா நிதியே
பொன்னடிஎன் சிரத்திருக்கப் புரிந்தபரம் பொருளே
புத்தமுதம் எனக்களித்த புண்ணியனே நீதான்
என்னைவிட மாட்டாய்நான் உன்னைவிட மாட்டேன்
இருவரும்ஒன் றாகிஇங்கே இருக்கின்றோம் இதுதான்
நின்னருளே அறிந்ததெனில் செயுஞ்செய்கை அனைத்தும்
நின்செயலோ என்செயலோ நிகழ்த்திடுக நீயே. 154

1732 கடல்கடந்தேன் கரையடைந்தேன் கண்டுகொண்டேன் கோயில்
கதவுதிறந் திடப்பெற்றேன் காட்சியெலாம் கண்டேன்
அடர்கடந்த திருஅமுதுண் டருள்ஒளியால் அனைத்தும்
அறிந்துதெளிந் தறிவுருவாய் அழியாமை அடைந்தேன்
உடல்குளிர்ந்தேன் உயிர்கிளர்ந்தேன் உள்ளமெலாம் தழைத்தேன்
உள்ளபடி உள்ளபொருள் உள்ளவனாய் நிறைந்தேன்
இடர்தவிர்க்கும் சித்திஎலாம் என்வசம்ஓங் கினவே
இத்தனையும் பொதுநடஞ்செய் இறைவன்அருட் செயலே. 155

1733 காற்றாலே புவியாலே ககனமத னாலே
கனலாலே புனலாலே கதிராதி யாலே
கூற்றாலே பிணியாலே கொலைக்கருவி யாலே
கோளாலே பிறவியற்றும் கொடுஞ்செயல்க ளாலே
வேற்றாலே எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும்
மெய்அளிக்க வேண்டுமென்றேன் விரைந்தளித்தான் எனக்கே
ஏற்றாலே இழிவெனநீர் நினையாதீர் உலகீர்
எந்தைஅருட் பெருஞ்ஜோதி இறைவனைச்சார் வீரே. 156

1734 சன்மார்க்க சங்கத்தீர் சிற்றடியேன் உமது
தாள்வணங்கிச் சாற்றுகின்றேன் தயவினொடும் கேட்பீர்
என்மார்க்கத் தெனைநுமக்குள் ஒருவனெனக் கொள்வீர்
எல்லாம்செய் வல்லநம திறைவனையே தொழுவீர்
புன்மார்க்கத் தவர்போலே வேறுசில புகன்றே
புந்திமயக் கடையாதீர் பூரணமெய்ச் சுகமாய்த்
தன்மார்க்க மாய்விளங்கும் சுத்தசிவம் ஒன்றே
தன்ஆணை என்ஆணை சார்ந்தறிமின் ஈண்டே. 157

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1735 ஆதியும்நடுவும் அந்தமும் இல்லா
அருட்பெருஞ் ஜோதிஎன் உளத்தே
நீதியில் கலந்து நிறைந்தது நானும்
நித்தியன் ஆயினேன் உலகீர்
சாதியும் மதமும் சமயமும் தவிர்த்தே
சத்தியச் சுத்தசன் மார்க்க
வீதியில் உமைத்தான் நிறுவுவல் உண்மை
விளம்பினேன் வம்மினோ விரைந்தே. 158

1736 வாது பேசிய மனிதர் காள்ஒரு
வார்த்தை கேண்மின்கள் வந்துநும்
போது போவதன் முன்ன ரேஅருட்
பொதுவி லேநடம் போற்றுவீர்
தீது பேசினீர் என்றி டாதுமைத்
திருவு ளங்கொளும் காண்மினோ
சூது பேசிலேன் நன்மை சொல்கின்றேன்
சுற்றம் என்பது பற்றியே. 159

1737 தூக்கமும் துயரும் அச்சமும் இடரும்
தொலைந்தன தொலைந்தன எனைவிட்
டேக்கமும் வினையும் மாயையும் இருளும்
இரிந்தன ஒழிந்தன முழுதும்
ஆக்கமும் அருளும் அறிவும்மெய் அன்பும்
அழிவுறா உடம்பும்மெய் இன்ப
ஊக்கமும் எனையே உற்றன உலகீர்
உண்மைஇவ் வாசகம் உணர்மின். 160

சிற்சபை

1738 அருட்சபை நடம்புரி அருட்பெருஞ் ஜோதி
தெருட்பெருஞ் சீர்சொலத் திகழ்வ சித்தியே. 161

பந்து

1739 பூவாம லேநிதம் காய்த்த இடத்தே
பூவார் மலர்கொண்டு பந்தாடா நின்றேன்
சாவா வரம்தந்து வாழ்வாயோ பந்தே
சாவாமல் என்னொடு வீழ்வாயோ பந்தே. 162

திருச்சிற்றம்பலம்

# கண்ணிகள்

## 111. நெஞ்சொடு கிளத்தல்

கலித்தாழிசை

இராகம்–புன்னாகவராளி–ஆதிதாளம்

திருச்சிற்றம்பலம்

1740 அடங்குநாள் இல்லா தமர்ந்தானைக் காணற்கே
தொடங்குநாள் நல்லதன் றோ – நெஞ்சே
தொடங்குநாள் நல்லதன் றோ. 1

1741 வல்லவா றெல்லாமும் வல்லானைக் காணற்கே
நல்லநாள் எண்ணிய நாள் – நெஞ்சே
நல்லநாள் எண்ணிய நாள். 2

1742 காலங் கடந்த கடவுளைக் காணற்குக்
காலங் கருதுவ தேன் – நெஞ்சே
காலங் கருதுவ தேன். 3

1743 ஆலம் அமுதாக்கும் அண்ணலைக் காணற்குக்
காலம் கருதுவ தேன் – நெஞ்சே
காலம் கருதுவ தேன். 4

1744 தடையாதும் இல்லாத் தலைவனைக் காணற்கே
தடையாதும் இல்லைகண் டாய் – நெஞ்சே
தடையாதும் இல்லைகண் டாய். 5

1745 கையுள் அமுதத்தை வாயுள் அமுதாக்கப்
பையுள் உனக்கென்னை யோ – நெஞ்சே
பையுள் உனக்கென்னை யோ. 6

1746 என்னுயிர் நாதனை யான்கண் டணைதற்கே
உன்னுவ தென்னை கண்டாய் – நெஞ்சே
உன்னுவ தென்னை கண்டாய் 7

1747 நான்பெற்ற செல்வத்தை நான்பற்றிக் கொள்ளற்கே
ஏன்பற்று வாயென்ப தார் – நெஞ்சே
ஏன்பற்று வாயென்ப தார். 8

1748 தத்துவா தீதத் தலைவனைக் காணற்குத்
தத்துவ முன்னுவ தேன் — நெஞ்சே
தத்துவ முன்னுவ தேன். 9

1749 ஒக்க அமுதத்தை உண்டோம் இனிச்சற்றும்
விக்கல் வராதுகண் டாய் — நெஞ்சே
விக்கல் வராதுகண் டாய். 10

திருச்சிற்றம்பலம்

## 112. மெய்யருள் வியப்பு

இராகம் – செஞ்சுருட்டி – ரூபகதாளம்

திருச்சிற்றம்பலம்

பல்லவி

1750 எனக்கும் உனக்கும் இசைந்த பொருத்தம் என்ன பொருத்த மோ
இந்தப் பொருத்தம் உலகில் பிறருக் கெய்தும் பொருத்த மோ. 1

சரணங்கள்

1751 தனக்கு நிகரிங் கில்லா துயர்ந்த தம்பம் ஒன்ற தே
தாவிப் போகப் போக நூலின் தரத்தில் நின்ற தே
கனக்கத் திகைப்புற் றங்கே நானும் கலங்கி வருந்த வே
கலக்கம் நீக்கித் தூக்கி வைத்தாய் நிலைபொ ருந்த வே. 1
எனக்கும் உனக்கும்

1752 இங்கோர் மலையின் நடுவில் உயர்ந்த தம்பம் நணுக வே
ஏறிப் போகப் போக நூலின் இழைபோல் நுணுக வே
அங்கே திகைத்து நடுங்கும் போதென் நடுக்கம் நீக்கி யே
அதன்மேல் உயர்ந்த நிலையில் வைத்தாய் அடிமை ஆக்கி யே. 2
எனக்கும் உனக்கும்

1753 இரவில் பெரிய வெள்ளம் பரவி எங்கும் தயங்க வே
யானும் சிலரும் படகில் ஏறி யேம யங்க வே
விரவில் தனித்தங் கென்னை ஒருகன் மேட்டில் ஏற்றி யே
விண்ணில் உயர்ந்த மாடத் திருக்க விதித்தாய் போற்றி யே. 3
எனக்கும் உனக்கும்

1754 மேலைப் பாற்சிவ கங்கை என்னுமோர் தீர்த்தந் தன்னை யே
மேவிப் படியில் தவறி நீரில் விழுந்த என்னை யே
ஏலத் துகிலும் உடம்பும் நினையா தெடுத்த தேஒன் றோ
எடுத்தென் கரத்தில் பொற்பூண் அணிந்த இறைவன் நீயன் றோ.4
எனக்கும் உனக்கும்

1755 என்ன துடலும் உயிரும் பொருளும் நின்ன தல்ல வோ
எந்தாய் இதனைப் பெருக எனநான் இன்று சொல்ல வோ
சின்ன வயதில் என்னை ஆண்ட திறத்தை நினைக்கு தே
சிந்தை நினைக்கக் கண்ணீர் பெருக்கி உடம்பை நனைக்கு தே.5
எனக்கும் உனக்கும்

1756 அப்பா நின்னை அன்றி எங்கும் அணைப்பார் இல்லை யே
அந்தோ நின்னை அன்றி எங்கும் அருள்வார் இல்லை யே
எப்பா லவர்க்கும் நின்னை அன்றி இறைமைஇல்லை யே
எனக்கு நின்மே லன்றி உலகில் இச்சை இல்லை யே. 6
எனக்கும் உனக்கும்

1757 அரசே உன்னை அணைக்க எனக்குள் ஆசை பொங்கு தே
அணைப்போம் என்னும் உண்மை யால்என் ஆவி தங்கு தே
விரைசேர் பாதம் பிடிக்க என்கை விரைந்து நீளு தே
மேவிப் பிடித்துக் கொள்ளுந் தோறும் உவகை ஆளு தே. 7
எனக்கும் உனக்கும்

1758 தனியன் மேல்நீ வைத்த தயவு தாய்க்கும் இல்லை யே
தகும்ஐந் தொழிலும் வேண்டுந் தோறும் தருதல் வல்லை யே
வினவும் எனக்கென் உயிரைப் பார்க்க மிகவும் நல்லை யே
மிகவும் நான்செய் குற்றம் குறித்து விடுவாய் அல்லை யே. 8
எனக்கும் உனக்கும்

1759 என்னை ஆண்ட வண்ணம் எண்ணில் உள்ளம் உருகு தே
என்னை விழுங்கி எங்கும் இன்ப வெள்ளம் பெருகு தே
உன்ன உன்ன மனமும் உயிரும் உடம்பும் இனிக்கு தே
உன்னோ டென்னை வேறென் றெண்ணில் மிகவும் பனிக்கு தே.9
எனக்கும் உனக்கும்

1760 உன்பே ரருளை நினைக்குந் தோறும் உடம்பு பொடிக்கு தே
உண்டு பசிதீர்ந் தாற்போல் காதல் மிகவும் தடிக்கு தே
அன்பே அமையும் என்ற பெரியர் வார்த்தை போயிற்றே
அன்போர் அணுவும் இல்லா எனக்கிங் கருளல் ஆயிற்றே. 10
எனக்கும் உனக்கும்

1761 நினைக்க நினைக்கத் தித்திப் பெனது நினைவில் கொடுக்கு தே
நின்பால் அன்றிப் பிறர்பால் செல்ல நெஞ்சம் நடுக்கு தே
எனைத்துன் பொழித்தாட் கொண்ட நின்னை அன்னை என்ப னோ
எந்தாய் அன்பி லேன்நின் னடிக்கு முன்னை அன்ப னோ. 11
எனக்கும் உனக்கும்

1762 உன்னை மறக்கில் எந்தாய் உயிர்என் உடம்பில் வாழு மோ
உன்பால் அன்றிப் பிறர்பால் என்தன் உள்ளம் சூழு மோ
என்னைக் கொடுக்க வாங்கிக் கொண்ட தென்ன கருதி யோ
எந்தாய் நின்னைக் கொடுக்க என்பால் இன்று வருதி யோ. 12
எனக்கும் உனக்கும்

1763 நெடுநாள் முயன்றும் காண்டற் கரிய நிலையைக் காட்டி யே
நிறைந்தென் அகத்தும் புறத்தும் சூழ்ந்தாய் ஒளியை நாட்டியே
நடுநா டியநின் அருளுக் கென்மேல் என்ன நாட்ட மோ
நாய்க்குத் தவிசிட் டனைநின் தனக்கிங் கிதுவோர் ஆட்ட மோ. 13
எனக்கும் உனக்கும்

1764 நாகா திபனும் அயனும் மாலும் நறுமு றென்ன வே
ஞான அமுதம் அளித்தாய் நானும் உண்டு துன்ன வே
சாகாக் கலையை எனக்குப் பயிற்றித் தந்த தயவை யே
சாற்றற் கரிது நினக்கென் கொடுப்ப தேதும் வியவை யே. 14
எனக்கும் உனக்கும்

1765 யாது கருதி என்னை ஆண்ட தைய வைய வோ
யானுன் அடிப்பொற் றுணைகட்குவந்து தொழும்பு செய்ய வோ
ஓது கடவுட் கூட்டம் அனைத்தும் அடிமை அல்ல வோ
உடையாய் அவர்க்குள் எனையும் ஒருவன் என்று சொல்ல வோ. 15
எனக்கும் உனக்கும்

1766 தலையும் காலும் திரித்து நோக்கித் தருக்கி னேனையே
தாங்கித் தெரிந்த தயவை நினைக்கில் உருக்கு தூனையே
புலையும் கொலையும் தவிர்ந்த நெறியில் புனிதர் மதிக்க வே
புகுவித் தாயை என்வாய் துடிப்ப தேத்தித் துதிக்க வே. 16
எனக்கும் உனக்கும்

1767 தாயே எனக்குந் தயவு புரிந்த தருணத் தந்தை யே
தனியே நின்னை நினைக்கக் கிளர்வ தெனது சிந்தை யே
நாயேன் எண்ணம் அனைத்தும் முடித்துக் கொடுத்த பண்ப னே
நான்செய் தவத்தால் எனக்குக் கிடைத்த நல்ல நண்ப னே. 17
எனக்கும் உனக்கும்

1768 ஏறா நிலையில் விரைந்து விரைந்திங் கென்னை ஏற்றி யே
இறங்கா திறங்கும் படிகள் முழுதும் எடுத்தாய் போற்றி யே
மாறாக் கருணை என்மேல் வைக்க வந்த தென்னை யோ
மதியி லேன்நின் அருட்குச் செய்த தவந்தான் முன்னை யோ. 18
எனக்கும் உனக்கும்

1769 இடமும் வலமும் இதுவென் றறியா திருந்த என்னை யே
எல்லாம் அறிவித் தருள்செய் கருணை என்னை என்னை யே
நடமும் நடஞ்செய் இடமும் எனக்கு நன்று காட்டி யே
நாயி னேனை வளர்க்கின் றாய்நல் லமுதம் ஊட்டியே. 19
எனக்கும் உனக்கும்

1770 விதுவும் கதிரும் இதுவென் றறியும் விளக்கம் இன்றி யே
விழித்து மயங்கி னேன்பால் பெரிய கருணை ஒன்றி யே
அதுவும் அதுவும் இதுவென் றெனக்குள் அறியக் காட்டி யே
அடிய னேனை வளர்க்கின் றாய்நல் லமுதம் ஊட்டி யே. 20
எனக்கும் உனக்கும்

1771 இருளும் ஒளியும் வந்த வகையை எண்ணி எண்ணி யே
இரவும் பகலும் மயங்கி னேனை இனிது நண்ணி யே
அருளும் பொருளும் கொடுத்து மயக்கம் நீக்கிக் காட்டி யே
அன்பால் என்னை வளர்க்கின் றாய்நல் லமுதம் ஊட்டி யே. 21
எனக்கும் உனக்கும்

1772 அண்டத் தகத்தும் புறத்தும் உன்றன் ஆணை செல்லு தே
அவனே எல்லாம் வல்லான் என்று மறைகள் சொல்லு தே
பிண்டத் தகத்தும் புறத்தும் நிறைந்த பெரிய ஜோதி யே
பேயேன் அளவில் விளங்கு கின்ற தென்ன நீதி யே. 22
எனக்கும் உனக்கும்

1773 கருணா நிதிநின் தன்னைக் காணக் கண்கள் துடிக்கு தே
காண்போம் என்று நினைக்குந் தோறும் உடம்பு பொடிக்கு தே
அருள்நா டகஞ்செய் பதங்கள் பாடிஆட விரைவ தே
ஆடும் பொதுவை நினைக்க நினைக்க நெஞ்சம் கரைவ தே. 23
எனக்கும் உனக்கும்

1774 அருளார் ஜோதி என்னுள் விளங்க அளித்த காலத் தே
அடியேன் குறைகள் யாவும் தவிர்ந்த திந்த ஞாலத் தே
பொருளாய் எனையு நினைக்க வந்த புதுமை என்னை யோ
பொன்னென் றைய மதிப்ப துதவாத் துரும்பு தன்னை யோ. 24
எனக்கும் உனக்கும்

1775 எனக்குள் நீயும் உனக்குள் நானும் இருக்கும் தன்மை யே
இன்று காட்டிக் கலக்கம் தவிர்த்துக் கொடுத்தாய் நன்மை யே
தனக்குள் ஏதுதன் தலைவர்க் குளதென் றறிஞர் சொல்வ தே
சரியென் றெண்ணி எனது மனது களித்து வெல்வ தே. 25
எனக்கும் உனக்கும்

1776 கருணைப் பொதுவில் பெரிய சோதித் தருவில் கனித்த தே
கனித்த பெரிய தனித்த கனிஎன் கருத்துள் இனித்த தே
தருணத் துண்டு மகிழ்வுற் றேன்அம் மகிழ்ச்சி சொல்ல வே
தனித்துக் கரைந்த எனது கருத்தின் தரத்த தல்ல வே. 26
எனக்கும் உனக்கும்

1777 என்னா ருயிர்க்குத் துணைவ நின்னை நான்து திக்க வே
என்ன தவஞ்செய் தேன்முன் உலகு ளோர்ம திக்க வே
பொன்னார் புயனும் அயனும் பிறரும் பொருந்தல் அரிய தே
புலைய னேனுக் களித்த கருணை மிகவும் பெரிய தே. 27
எனக்கும் உனக்கும்

1778 என்கண் மணியுள் இருக்கும் தலைவ நின்னைக் காண வே
என்ன தவஞ்செய் தேன்முன் அயனும் அரியும் நாண வே
புன்கண் ஒழித்துத் தெள்ளா ரமுதம் புகட்டி என்னை யே
பொருளாய் எண்ணி வளர்க்கின் றாய்நீ எனக்கோர் அன்னை யே.
எனக்கும் உனக்கும்

1779 அறிவி லேன்டுசெய் குற்றம் அனைத்தும் பொறுத்த தன்றி யே
அமுதும் அளித்தாய் யார்செய்வார்கள் இந்த நன்றி யே
செறிவி லாத பொறியும் மனமும் செறிந்து நிற்க வே
செய்தாய் மேலும் தெரிந்தாய் சாகாக் கல்வி கற்க வே. 29
எனக்கும் உனக்கும்

1780 ஒருநா ழிகையில் யோக நிலையை உணர்த்தி மாலை யே
யோகப் பயனை முழுதும் அளித்தாய் மறுநாள் காலை யே
திருநாள் நிலையும் தீர்த்த நிலையும் தெய்வ நிலையு மே
சிறியேன் அறியக் காட்டித் தெரித்தாய் வேதக் கலையு மே. 30
எனக்கும் உனக்கும்

1781 அண்டப் பரப்பின் திறங்கள் அனைத்தும் அறிய வேண்டி யே
ஆசைப் பட்ட தறிந்து தெரித்தாய் அறிவைத் தூண்டி யே
பிண்டத் துயிர்கள் பொருத்தும் வகையும் பிண்டம் தன்னை யே
பிரியும் வகையும் பிரியா வகையும் தெரித்தாய் பின்னை யே. 31
எனக்கும் உனக்கும்

1782 வேதா கமங்கள் புகன்ற விரிவை ஒன்றொன் றாக வே
விளங்க விரைந்து தெரித்தாய் பயிலும் ஆசை போக வே
பூதா திகளைப் பொருத்தும் பகுதிப் பொருத்தம் முற்று மே
பொய்மை நீக்கிக் காணக் காட்டித் தெரித்தாய் மற்று மே. 32
எனக்கும் உனக்கும்

1783 வள்ளால் உன்னைப் பாடப் பாட வாய்ம ணக்கு தே
வஞ்ச வினைகள் எனைவிட் டோடித் தலைவ ணக்கு தே
எள்ளா துனது புகழைக் கேட்கச் செவிந யக்கு தே
எந்தாய் தயவை எண்ணுந் தோறும் உளம்வி யக்கு தே. 33
எனக்கும் உனக்கும்

1784 இறைவா நின்னைக் கனவி லேனும் யான்ம றப்ப னோ
எந்தாய் உலகத் தவர்கள் போல்நான் இனி இறப்ப னோ
மறைவா சகமும் பொருளும் பயனும் மதிக்கும் மதியி லே
வாய்க்கக் கருணை புரிந்து வைத்தாய் உயர்ந்த பதியி லே. 34
எனக்கும் உனக்கும்

1785 தலைவா எனக்குக் கருணை அமுதம் தரஇத் தலத்தி லே
தவம்செய் தேன்அத் தவமும் உன்தன் அருள்வ லத்தி லே
அலைவா ரிதியில் துரும்பு போல அயனும் மாலுமே
அலைய எனக்கே அளிக்கின் றாய்நீ மேலும் மேலு மே. 35
எனக்கும் உனக்கும்

1786 உடையாய் எனக்குப் புரிந்த தயவை உன்ன உன்ன வே
உடம்பு பூரிக் கின்ற தொளிர்பொன் மலைய தென்ன வே
தடையா தினிஉள் மூல மலத்தின் தடையும் போயிற் றே
சமய விகற்பம் எல்லாம் நீக்கிச் சமம தாயிற் றே. 36
எனக்கும் உனக்கும்

1787 மயங்குந் தோறும் உள்ளும் புறத்தும் மயக்கம் நீக்கி யே
மகிழ்விக் கின்றாய் ஒருகால் ஊன்றி ஒருகால் தூக்கி யே
உயங்கு மலங்கள் ஐந்தும் பசையற் றொழிந்து வெந்த தே
உன்பே ரருட்பொற் ஜோதி வாய்க்குந் தருணம் வந்த தே. 37
எனக்கும் உனக்கும்

1788 எனக்கும் நின்னைப் போல நுதற்கண் ஈந்து மதனை யே
எரிப்பித் தாய்பின் எழுப்பிக் கொடுத்தாய் அருவ மதனை யே
சினக்குங் கூற்றை உதைப்பித் தொழித்துச் சிதைவு மாற்றி யே
தேவர் கற்பம் பலவும் காணச் செய்தாய் போற்றி யே. 38
எனக்கும் உனக்கும்

1789 கள்ளம் அறியேன் நின்னால் கண்ட காட்சி ஒன்று மே
கருத்தில் உளது வேறோர் விடயம் காணேன் என்று மே
உள்ள துரைக்கின் றேன்நின் அடிமேல் ஆணை முன்னை யே
உள்ளே விளங்கிக் காண்கின் றாய்க்கிங் கொளிப்ப தென்னை யே.
எனக்கும் உனக்கும்

1790 என்னை அடிமை கொண்டாய் நானும் நினக்கு நல்ல னோ
எல்லாம் வல்ல தலைவ நினக்கு நல்லன் அல்ல னோ
முன்னை வினைகள் அனைத்தும் நீக்கி அமுதம் ஊட்டி யே
மூவர்க் கரிய நிலையில் வைத்தாய் என்னை நாட்டி யே. 40
எனக்கும் உனக்கும்

1791 ஜோதி மலையில் கண்டேன் நின்னைக் கண்க ளிக்க வே
துய்த்தேன் அமுதம் அகத்தும் புறத்தும் பரிம ளிக்க வே
ஓதி உணர்தற் கரிய பெரிய உணர்வை நண்ணி யே
ஓதா தனைத்தும் உணர்கின் றேன்நின் அருளை எண்ணி யே.41
எனக்கும் உனக்கும்

1792 ஏழு நிலைகள் ஓங்கும் தெய்வ மாடம் ஒன்றி லே
ஏற்றிக் களிக்க வைத்தாய் அதன்மேல் இலங்கு குன்றி லே
வாழும் பரிசும் கவிக்கும் குடையும் மதிக்கும் தூசு மே
மகிழ்ந்து கொடுத்துப் பின்னும் கொடுத்தாய் மணிப்பொற்கா சுமே.42
எனக்கும் உனக்கும்

1793 இந்த உலகில் உள்ளார் பலரும் மிகவும் நன்மை யே
என்பால் செய்ய வைத்தாய் இதுநின் அருளின் தன்மை யே
அந்த உலகில் உள்ளார் பலரும் என்னை நோக்கி யே
அப்பா வாழி எனவும் புரிந்தாய் அடிமை யாக்கி யே. 43
எனக்கும் உனக்கும்

1794 அழியாக் கருணை அமுத வடிவின் ஓங்கும் சோதி யே
அரசே எனக்குள் விளங்கும் ஆதி யாம்அனாதி யே
ஒழியாத் துயரை ஒழித்த பெரிய கருணை யாள னே
ஒன்றாய் ஒன்றில் உபய மாகி ஒளிரும் தாள னே. 44
எனக்கும் உனக்கும்

1795 பாலும் தேனும் கலந்த தென்ன என்னுள் இனிக்க வே
பரம ஞான அமுதம் அளிக்கின் றாய்த னிக்க வே
ஏலும் உயிர்கள் எல்லாம் நினக்குப் பொதுவ தென்ப ரே
இன்று நோக்கி ஓர வாரன் என்பர் அன்ப ரே. 45
எனக்கும் உனக்கும்

1796 ஐயா நான்செய் பிழைகள் ஏழு கடலில் பெரிய தே
அனைத்தும் பொறுத்த தயவு பிறருக் கரிய தரிய தே
மெய்யா நீசெய் உதவிக் கொருகைம் மாறு வேண்டு மே
வேண்டா தென்ன அறிந்தும் எனக்குள் ஆசை தூண்டு மே. 46
எனக்கும் உனக்கும்

1797 பூத வெளியி னடமும் பகுதி வெளியினா ட்டமும்
போக வெளியில் கூத்தும் யோக வெளியுள் ஆட்ட மும்
நாத வெளியில் குனிப்பும் பரம நாத நடமுமே
நன்று காட்டிக் கொடுத்தாய் என்றும் நலியாத் திடமு மே. 47
எனக்கும் உனக்கும்

1798 எட்டும் இரண்டும் இதுஎன் றெனக்குச் சுட்டிக் காட்டி யே
எட்டா நிலையில் இருக்கப் புரிந்தாய் இட்டுக் கூட்டி யே
துட்ட வினையைத் தீர்த்து ஞானச் சுடருள் ளேற்றி யே
தூண்டா தென்றும் விளங்க வைத்தாய் உண்மை சாற்றி யே. 48
எனக்கும் உனக்கும்

1799 அருளாம் பெரிய வெளிக்குள் ஜோதி வடிவ னாகி யே
அரசு செலுத்தும் தனித்த தலைமைப் பரம யோகி யே
பொருளாய் எனையும் உளங்கொண் டளித்த புனித நாத னே
போற்று நாத முடிவில் நடஞ்செய் கமல பாதனே. 49
எனக்கும் உனக்கும்

1800 உருவும் அருவும் உபய நிலையும் உடைய நித்த னே
உயிருள் நிறைந்த தலைவ எல்லாம் வல்ல சித்த னே
மருவும் துரிய வரையுள் நிறைந்து வயங்கும் பரம மே
மன்றில் பரமா னந்த நடஞ்செய் கின்ற பிரம மே. 50
எனக்கும் உனக்கும்

1801 அன்னே என்னை ஆண்ட தலைவ அடியேன் உள்ள மே
அமர்ந்த துணைவ எனக்குக் கிடைத்த அமுத வெள்ள மே
பொன்னே பொன்னில் பொலிந்து நிறைந்த புனித வான மே
புனித வானத் துள்ளே விளங்கும் புரண ஞான மே. 51
எனக்கும் உனக்கும்

1802 சமயத் தெய்வம் பலவும் சிறிய துரும்ப தென்ன வே
சாற்றப் புகினும் சாலா அருளின் பெருமை உன்ன வே
அமையும் அண்டப் பகுதி பலவும் அணுவின் பொடியி லே
அனந்தத் தொன்றென் றுரைத்துஞ் சாலா நின்பொன் னடியி லே.
எனக்கும் உனக்கும்

1803 அப்பா நின்னை அடைந்த என்னை ஒப்பார் யாவ ரே
ஆறா றகன்ற நிலையை அடைந்தான் என்பர் தேவ ரே
இப்பா ராதி பூதம் அடங்குங் காலும் நின்னை யே
ஏத்திக் களித்து வாழ்வேன் இதற்கும் ஐய மென்னை யே. 53
எனக்கும் உனக்கும்

1804 என்னை மறைத்த மறைப்பை நீக்கி என்னைக் காட்டி யே
இறைவ நினையும் காட்டி வளர்த்தாய் அமுதம் ஊட்டி யே
முன்னை மறைக்கும் எட்டா நினது பெருமை தன்னை யே
முன்னி மகிழ்ந்து பாடப் புரிந்தாய் அடிமை என்னை யே. 54
எனக்கும் உனக்கும்

1805 எண்ணுந் தோறும் எண்ணுந் தோறும் என்னுள் இனிக்கு தே
இறைவ நின்னைப் பாட நாவில் அமுதம் சனிக்கு தே
கண்ணும் கருத்தும் நின்பால் அன்றிப் பிறர்பால் செல்லு மோ
கண்டேன் உன்னை இனிமேல் என்னை மாயை வெல்லு மோ. 55
எனக்கும் உனக்கும்

1806 விந்தோ நாத வெளியும் கடந்து மேலும் நீளு தே
மேலை வெளியும் கடந்துன் அடியார் ஆணை ஆளு தே
அந்தோ உனது பெருமை சிறிதும் அறிவார் இல்லை யே
அறிந்தா லருகி லின்ப வடிவம் ஆவர் ஒல்லை யே. 56
எனக்கும் உனக்கும்

1807 இறுகப் பிடித்துக் கொண்டேன் பதத்தை இனிநான் விடுவ னோ
எந்தாய் பாதம் பிடித்த கையால் வேறு தொடுவ னோ
குறுகப் பயந்து கூற்றும் ஓடிக் குலைந்து போயிற் றே
கோவே உன்தன் அருட்சிற் ஜோதி என்ன தாயிற் றே. 57
எனக்கும் உனக்கும்

1808 காய்க்கும் பருவம் தன்னைப் பழுத்த பருவம் ஆக்கி யே
கனக சபையில் நடிக்கின் றாய்ஓர் காலைத் தூக்கி யே
நாய்க்குத் தவிசிட் டொருபொன் முடியும் நன்று சூட்டி யே
நட்ட நடுவே வைத்தாய் கருணை அமுதம் ஊட்டி யே. 58
எனக்கும் உனக்கும்

1809 கல்லை நோக்கிக் கனிந்து பழுத்த கனிய தாக்கி யே
கனக சபையில் நடிக்கின் றாய்ஓர் காலைத் தூக்கி யே
புல்லை முடிக்கும் அணிகின் றாய்என் புன்சொல் மாலை யே
புனைந்தென் உளத்தில் இருக்கப் புரிந்தாய் நின்பொற் காலையே.
எனக்கும் உனக்கும்

1810 சாதல் பிறத்தல் என்னும் அவத்தைத் தவிர்த்துக் காலை யே
தனித்துன் அருளின் அமுதம் புகட்டிக் கொடுத்தாய் மேலை யே
ஓதல் உணர்தல் உவத்தல் எனக்கு நின்பொற் பாத மே
உலக விடயக் காட்டில் செல்லா தெனது போத மே. 60
எனக்கும் உனக்கும்

1811 அருளும் பொருளும் பெற்றேன் அடிய னாகி நானு மே
அஞ்சேன் மாயை வினைகட் கொருசிற் றளவ தேனு மே
இருளும் நிறத்துக் கூற்றைத் துரத்தி அருள்சிற் ஜோதி யே
என்தன் அகத்தும் புறத்தும் விளங்கு கின்ற வாதி யே. 61
எனக்கும் உனக்கும்

1812 காமக் கடலைக் கடந்து வெகுளிக் கடலை நீந்தி னேன்
கடிய மயக்கக் கடலைத் தாண்டி அடியை ஏந்தி னேன்
சேமப் பொதுவில் நடங்கண் டெனது சிறுமை நீங்கி னேன்
சிற்றம் பலத்து நடங்கண் டுவந்து மிகவும் ஓங்கி னேன். 62
எனக்கும் உனக்கும்

1813 தாங்கல் விடுதல் இரண்டும் எனக்குச் சமம தாயிற் றே
சகத்தில் வழங்கும் மாயை வழக்குத் தவிர்ந்து போயிற்றே
ஏங்கல் சலித்தல் இரண்டும் இன்றி இளைப்பு நீங்கி னேன்
எந்தாய் கருணை அமுதுண் டின்பப் பொருப்பில் ஓங்கி னேன். 63
எனக்கும் உனக்கும்

1814 உறவு பகைஎன் றிரண்டும் எனக்கிங் கொன்ற தாயிற்றே
ஒன்றென் றிரண்டென் றுளறும் பேதம் ஓடிப் போயிற்றே
மறவு நினைவென் றென்னை வலித்த வலிப்பு நீங்கி னேன்
மன்றில் பரமா னந்த நடங்கண் டின்பம் ஓங்கி னேன். 64
எனக்கும் உனக்கும்

1815 உன்னைக் கண்டு கொண்டேன் கண்ட வுடன்இங் கென்னையே
உலக மெல்லாம் கண்டு கொண்ட உவப்பிதென்னை யே
என்னைக் கண்டு கொண்ட காலத் திறைவ நின்னை யே
யாரும் கண்டு கொண்டார் இல்லை யாங்க தென்னை யே. 65
எனக்கும் உனக்கும்

1816 மலத்தில் புழுத்த புழுவும் நிகர மாட்டா நாயி னேன்
வள்ளல் கருணை அமுதுண் டின்ப நாட்டான் ஆயி னேன்
குலத்தில் குறியில் குணத்தில் பெருமை கொள்ளா நாயி னேன்
கோதில் அமுதுண் டெல்லா நலமும் உள்ளான் ஆயி னேன். 66
எனக்கும் உனக்கும்

1817 கடைய நாயில் கடைய நாய்க்கும் கடையன் ஆயி னேன்
கருணை அமுதுண் டின்ப நாட்டுக் குடையன் ஆயி னேன்
விடயக் காட்டில் ஓடித் திரிந்த வெள்ளை நாயி னேன்
விமலா நினக்கு மிகவும் சொந்தப் பிள்ளை ஆயி னேன். 67
எனக்கும் உனக்கும்

1818 அயனும் மாலும் தேடித் தேடி அலர்ந்து போயி னார்
அந்தோ இவன்முன் செய்த தவம்யா தென்ப ராயி னார்
மயனும் கருத மாட்டாத் தவள மாடத் துச்சி யே
வயங்கும் அணைமேல் வைத்தாய் சிறிய நாயை மெச்சி யே. 68
எனக்கும் உனக்கும்

1819 வல்லாய் உனது கருணை அமுதென் வாய்க்கு வந்த தே
மலமும் மாயைக் குலமும் வினையும் முழுதும் வெந்த தே
எல்லா நலமும் ஆன அதனை உண்டு வந்த தே
இறவா தென்றும் ஓங்கும் வடிவம் எனக்கு வந்த தே. 69
எனக்கும் உனக்கும்

1820 சிற்றம் பலத்தில் நடங்கண் டவர்காற் பொடிகள் புல்ல தே
சிருட்டி முதல்ஓர் ஐந்து தொழிலும் செய்ய வல்ல தே
பற்றம் பலத்தில் வைத்தார் தம்மைப் பணியும் பத்த ரே
பரம பதத்தர் என்று பகர்வர் பரம முத்த ரே. 70
எனக்கும் உனக்கும்

1821 சிருட்டி முதல்ஓர் ஐந்து தொழிலும் செய்யென் றென்னை யே
செல்வப் பிள்ளை யாக்கி வளர்க்கின் றாய்இ தென்னை யே
தெருட்டித் திருப்பொற் பதத்தைக் காட்டி அமுதம் ஊட்டி யே
திகழ நடுவைத் தாய்சன் மார்க்க சங்கம் கூட்டியே. 71
எனக்கும் உனக்கும்

1822 அடியன் ஆக்கிப் பிள்ளை ஆக்கி நேயன் ஆக்கி யே
அடிகள் ஆக்கிக் கொண்டாய் என்னை அவலம் நீக்கி யே
படியு ளோரும் வானு ளோரும் இதனை நோக்கி யே
பதியும் ஓர வாரன் என்பர் பரிவு தேக்கி யே. 72
எனக்கும் உனக்கும்

1823 அண்ணா எனையும் பொருளென் றெண்ணி இரவும் பகலு மே
அகத்தும் புறத்தும் திரிகின் றாய்இவ் வுலகென் புகலு மே
தண்ணா ரமுதம் மிகவும் எனக்குத் தந்த தன்றி யே
தனியே இன்னும் தருகின் றாய்என் னறிவின் ஒன்றியே. 73
எனக்கும் உனக்கும்

1824 வேதா கமத்தின் அடியும் நடுவும் முடியு மற்று மே
வெட்ட வெளிய தாகி விளங்கக் கண்டேன் முற்று மே
நாதா சிறிய நாய்க்கும் கடையேன் முற்றும் கண்ட தே
நானோ கண்டேன் எந்தாய் கருணை நாட்டம் கண்ட தே. 74
எனக்கும் உனக்கும்

1825 புழுவில் புழுத்த புழுவும் நிகரப் போதா நாயி னேன்
பொதுவில் நடிக்கும் தலைவ நினக்கே அடிமைஆயி னேன்
தழுவற் கரிய பெரிய துரியத் தம்பத் தேறி னேன்
தனித்தப் பாலோர் தவள மாடத் திருந்து தேறி னேன். 75
எனக்கும் உனக்கும்

1826 கடையன் எனது கொடிய கடின நெஞ்சக் கல்லை யே
கனிய தாக்கித் தூக்கிக் கொண்டாய் துரியத் தெல்லை யே
உடையாய் துரியத் தலத்தின் மேல்நின் றோங்குந் தலத்தி லே
உன்பால் இருக்க வைத்தாய் என்னை உவந்து வலத்தி லே. 76
எனக்கும் உனக்கும்

1827 அறிந்த நாள்கள் தொடங்கி இற்றைப் பகலின் வரையு மே
அடியேன் பட்ட பாட்டை நினைக்கில் கல்லும் கரையுமே
எறிந்தப் பாடு முழுதும் பெரிய இன்ப மாயிற்றே
எந்தாய் கருணை எனக்கு மிகவும் சொந்த மாயிற்றே. 77
எனக்கும் உனக்கும்

1828 பனிரண் டாண்டு தொடங்கி இற்றைப் பகலின் வரையுமே
படியில் பட்ட பாட்டை நினைக்கில் மலையும் கரையு மே
துனியா தந்தப் பாடு முழுதும் சுகம தாயிற் றே
துரையே நின்மெய் அருளிங் கெனக்குச் சொந்த மாயிற் றே. 78
எனக்கும் உனக்கும்

1829 ஈரா றாண்டு தொடங்கி இற்றைப் பகலின் வரையுமே
எளியேன் பட்ட பாட்டை நினைக்கில் இரும்பும் கரையு மே
ஏராய் அந்தப் பாடு முழுதும் இன்ப மாயிற் றே
இறைவா நின்மெய் அருளிங் கெனக்குச் சொந்த மாயிற் றே. 79
எனக்கும் உனக்கும்

1830 பாட்டால் உனது பதத்தை நாடிப் பாடும் வாய ரே
பதியே இந்த உலகில் எனக்கு மிகவும் நேய ரே
நாட்டார் எனினும் நின்னை உளத்து நாட்டார் ஆயி லோ
நயவேன் சிறிதும் நயத்தல் கயக்கும் எட்டிக் காயி லோ. 80
எனக்கும் உனக்கும்

1831 சின்ன வயது தொடங்கி என்னைக் காக்கும் தெய்வ மே
சிறியேன் மயங்கும் தோறும் மயக்கம் தீர்க்கும் தெய்வ மே
என்னை அவத்தைக் கடல்நின் றிங்ஙன் எடுத்த தெய்வ மே
எல்லா நலமும் தரும்இன் னமுதம் கொடுத்த தெய்வமே. 81
எனக்கும் உனக்கும்

1832 அச்சம் தீர்த்திங் கென்னை ஆட்கொண் டருளும் அமுத னே
அடியேன் பிழைகள் அனைத்தும் பொறுத்துள் அமர்ந்த அமுத னே
இச்சை யாவும் முடித்துக் கொடுத்துள் இலங்கும் குரவ னே
என்றும் இறவாக் கல்வி அடியேற் கீந்த குரவ னே. 82
எனக்கும் உனக்கும்

1833 உள்ளும் புறத்தும் கருணை அமுதம் ஊட்டும் அன்னை யே
ஓதா துணர உணரும் உணர்வை உதவும் அன்னை யே
தெள்ளும் கருணைச் செங்கோல் செலுத்தச் செய்த அப்ப னே
செல்வப் பிள்ளை யாக்கி என்னுள் சேர்ந்த அப்ப னே. 83
எனக்கும் உனக்கும்

1834 இரவும்பகலும் என்னைக் காத்துள் இருக்கும் இறைவ னே
எல்லா உலகும் புகழ எனைமேல் ஏற்றும் இறைவ னே
கரவு நினையா தெனக்கு மெய்ம்மை காட்டும் துணைவ னே
களித்தேன் தனையும் சன்மார்க் கத்தில் நாட்டும் துணைவ னே.
எனக்கும் உனக்கும்

1835 சற்றும் வருந்தப் பாரா தென்னைத் தாங்கு நேய னே
தான்நான் என்று பிரித்தற் கரிய தரத்து நேய னே
முற்றும் தனதை எனக்குக் கொடுத்து முயங்கும் நேய னே
முன்னே நான்செய் தவத்தால் எனக்குள் முளைத்த நேய னே. 85
எனக்கும் உனக்கும்

1836 நேயா நின்னை நினைக்க நினைக்க நெஞ்சம் களிக்கு தே
நெடிய விழிகள் இரண்டும் இன்ப நீர்து ளிக்கு தே
ஓயா துனது பெருமை நினைக்க உவகை நீடு தே
உரைப்பார் எவர்என் றுலகில் பலரை ஓடித் தேடு தே. 86
எனக்கும் உனக்கும்

1837 பொன்னே நின்னை உன்ன உடம்பு புளகம் மூடு தே
பொதுவைக் காண உள்ளே ஆசை பொங்கி ஆடு தே
என்னே பிறர்தம் வரவு நோக்கக் கண்கள் வெதும்பு தே
எந்தாய் வரவை நினைக்கக் களிப்புப் பொங்கித் ததும்புதே. 87
எனக்கும் உனக்கும்

1838 மணியே நின்னைப் பொதுவில் கண்ட மனிதர் தேவ ரே
மனிதர் கண்ணிற் பட்ட புல்லும் மரமும் தேவ ரே
அணியே நின்னைப் பாடும் அடியர் தாமோ மூவ ரே
அவரைக் கண்டார் அவரைக் கண்டார் அவர்கள் மூவ ரே. 88
எனக்கும் உனக்கும்

1839 வாழ்வே நினது நடங்கண் டவரைச் சுத்தர் என்ப னோ
மலங்கள் மூன்றும் தவிர்த்த சுத்த முத்தர் என்ப னோ
ஏழ்வே தனையும் நீக்கி வாழும் நித்தர் என்ப னோ
எல்லாம் செய்ய வல்ல ஞான சித்தர் என்ப னோ. 89
எனக்கும் உனக்கும்

1840 சிவமே நின்னைப் பொதுவில் கண்ட செல்வர் தம்மை யே
தேவர் கண்டு கொண்டு வணங்கு கின்றார் இம்மை யே
தவமே புரிந்து நின்னை உணர்ந்த சாந்த சித்த ரே
தகும்ஐந் தொழிலும் தாமே இயற்ற வாய்ந்த சித்த ரே. 90
எனக்கும் உனக்கும்

1841 ஐவ ராலும் நின்னை அறிதற் கருமை அருமை யே
ஆரே அறிவர் மறையும் அறியா நினது பெருமை யே
பொய்வ ராத வாய்கொண் டுன்னைப் போற்றும் அன்ப ரே
பொருளே நின்னை அறிவர் அவரே அழியா இன்ப ரே. 91
என்க்கும் உனக்கும்

1842 என்னைக் காட்டி என்னுள் இலங்கும் நின்னைக் காட்டி யே
இறங்கா நிலையில் ஏற்றி ஞான அமுதம் ஊட்டி யே
பொன்னைக் காட்டிப் பொன்னே நினது புகழைப் பாடி யே
புந்தி களிக்க வைத்தாய் அழியா தென்னை நாடி யே. 92
எனக்கும் உனக்கும்

1843 அண்ட கோடி அனைத்தும் காணும் கண்கள் எய்தி யே
அறிந்தேன் அங்கைக் கனிபோல் அவற்றில் உள்ள செய்தி யே
பிண்ட கோடி முழுதும் காணப் பெற்று நின்னை யே
பேசிப் பேசி வியக்கின் றேன்இப் பிறவி தன்னை யே. 93
எனக்கும் உனக்கும்

1844 சிற்றம் பலத்தின் நடனம் காட்டிச் சிவத்தைக் காட்டி யே
சிறப்பாய் எல்லாம் வல்ல சித்தித் திறத்தைக் காட்டி யே
குற்றம் பலவும் தீர்த்தென் தனக்கோர் முடியும் சூட்டியே
கோவே நீயும் என்னுள் கலந்து கொண்டாய் நாட்டி யே. 94
எனக்கும் உனக்கும்

1845 சுத்த நிலையின் நடுநின் றெங்கும் தோன்றும் ஜோதி யே
துரிய வெளியைக் கடந்தப் பாலும் துலங்கும் ஜோதியே
சித்தர் உளத்தில் சுடர்செய் தோங்கும் தெய்வச் ஜோதி யே
சிற்றம் பலத்தில் நடஞ்செய் தெனக்குள் சிறந்த ஜோதி யே. 95
எனக்கும் உனக்கும்

1846 அன்றே என்னை அடியன் ஆக்கி ஆண்ட ஜோதி யே
அதன்பின் பிள்ளை ஆக்கி அருள்இங் களித்த ஜோதி யே
நன்றே மீட்டும் நேயன் ஆக்கி நயந்த ஜோதி யே
நானும் நீயும் ஒன்றென் றுரைத்து நல்கு ஜோதி யே. 96
எனக்கும் உனக்கும்

1847 நீயே வலிந்திங் கென்னை ஆண்ட நீதிச் ஜோதி யே
நின்னைப் பாட என்னை வளர்க்கும் நிமலச் ஜோதி யே
தாயே எனவந் தென்னைக் காத்த தருமச் ஜோதி யே
தன்மை பிறரால் அறிதற் கரிய தலைமைச் ஜோதி யே. 97
எனக்கும் உனக்கும்

1848 சாகாக் கல்வி எனக்குப் பயிற்றித் தந்த ஜோதி யே
தன்னேர் முடிஒன் றெனது முடியில் தரித்த ஜோதி யே
ஏகாக் கரப்பொற் பீடத் தென்னை ஏற்று ஜோதி யே
எல்லாம் வல்ல சித்தி ஆட்சி ஈய்ந்த ஜோதி யே. 98
எனக்கும் உனக்கும்

1849 ஜோதி எவையும் விளங்க விளங்கும் ஜோதி வாழி யே
துரிய வெளியின் நடுநின் றோங்கும் ஜோதி வாழி யே
சூதி லாமெய்ச் சிற்றம் பலத்து ஜோதி வெல்க வே
துலங்கப் பொன்னம் பலத்தில் ஆடும் ஜோதி வெல்க வே. 99
எனக்கும் உனக்கும்

1850 சுத்த சிவசன் மார்க்க நீதி ஜோதி போற்றி யே
சுகவாழ் வளித்த சிற்றம் பலத்து ஜோதி போற்றி யே
சுத்த சுடர்ப்பொற் சபையில் ஆடும் ஜோதி போற்றி யே
ஜோதி முழுதும் விளங்க விளங்கும் ஜோதி போற்றி யே. 100

எனக்கும் உனக்கும் இசைந்த பொருத்தம் என்ன பொருத்த மோ
இந்தப் பொருத்தம் உலகில் பிறருக் கெய்தும் பொருத்த மோ

திருச்சிற்றம்பலம்

# 113. அம்பலவாணர் வருகை

## வருகைக் கண்ணி

வர்க்கமாலை என்னும் காலைப்பாட்டு

இராகம்—காம்போதி—அடதாளம்

திருச்சிற்றம்பலம்

### பல்லவி

1851 வாரீர் சிதம்பர வல்லி சிவகாம
வல்லி மணாளரே வாரீர்
மணிமன்ற வாணரே வாரீர் 1

### சரணங்கள்

1852 அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவ ரேதிரு
அம்பல வாணரே வாரீர்
அன்புடை யாளரே வாரீர். வாரீர் 1

1853 அச்சம் தவிர்த்தென்னை ஆட்கொண் டருளிய
அந்தண ரேஇங்கு வாரீர்
அம்பலத் தையரே வாரீர். வாரீர் 2

1854 அன்புரு வானவர் இன்புற உள்ளே
அறிவுரு வாயினீர் வாரீர்
அருட்பெருஞ் ஜோதியீர் வாரீர். வாரீர் 3

1855 அண்டங்கள் எல்லாம் அணுவில் அடக்கும்
அரும்பெருஞ் சித்தரே வாரீர்
அற்புத ரேஇங்கு வாரீர். வாரீர் 4

1856 அம்மையு மாய்எனக் கப்பனு மாகிஎன்
அன்பனு மாயினீர் வாரீர்
அங்கண ரேஇங்கு வாரீர். வாரீர் 5

1857 அல்லல் அறுத்தென் அறிவை விளக்கிய
அம்பல வாணரே வாரீர்
செம்பொரு ளாயினீர் வாரீர். வாரீர் 6

1858 அப்பணி பொன்முடி அப்பனென் றேத்துமெய்
அன்பருக் கன்பரே வாரீர்
இன்பம் தரஇங்கு வாரீர். வாரீர் 7

1859 அச்சுதர் நான்முகர் உச்சியில் மெச்சும்
அடிக்கம லத்தீரே வாரீர்
நடிக்கவல் லீர்இங்கு வாரீர். வாரீர் 8

1860 அண்டர்க் கரும்பதந் தொண்டர்க் கெளிதில்
அளித்திட வல்லீரே வாரீர்
களித்தென்னை ஆண்டீரே வாரீர் வாரீர் 9

1861 அம்பர மானசி தம்பர நாடகம்
ஆடவல் லீர்இங்கு வாரீர்
பாடல்உ வந்தீரே வாரீர் வாரீர் 10

1862 ஆதிஅ னாதிஎன் றாரணம் போற்றும்
அரும்பெருஞ் ஜோதியீர் வாரீர்
ஆனந்த நாடரே வாரீர் வாரீர் 11

1863 ஆகம வேதம் அனேக முகங்கொண்
டருச்சிக்கும் பாதரே வாரீர்
ஆருயிர் நாதரே வாரீர். வாரீர் 12

1864 ஆசறும் அந்தங்கள் ஆறும் புகன்றநல்
ஆரிய ரேஇங்கு வாரீர்
ஆனந்தக் கூத்தரே வாரீர். வாரீர் 13

1865 ஆல நிழற்கண் அமர்ந்தறஞ் சொன்னநல்
ஆரிய ரேஇங்கு வாரீர்
ஆனந்தக் கூத்தரே வாரீர் வாரீர் 14

1866 ஆரமு தாகிஎன் ஆவியைக் காக்கின்ற
ஆனந்த ரேஇங்கு வாரீர்
ஆடல்வல் லீர்இங்கு வாரீர் வாரீர் 15

1867 ஆதர வாய்என் அறிவைத் தெளிவித்
தமுதம் அளித்தீரே வாரீர்
ஆடிய பாதரே வாரீர். வாரீர் 16

1868 ஆதார மீதானத் தப்பாலும் காண்டற்
கரும்பெருஞ் ஜோதியீர் வாரீர்
கரும்பினில் இனிக்கின்றீர் வாரீர். வாரீர் 17

1869 ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்
ஜோதிய ரேஇங்கு வாரீர்
வேதிய ரே இங்கு வாரீர் வாரீர் 18

1870 ஆடல்கொண் டீர்திரு வம்பலத் தேஎன்றன்
பாடல்கொண் டீர்இங்கு வாரீர்
கூடவல் லீர்இங்கு வாரீர். வாரீர் 19

1871 ஆக்கம் கொடுத்தென்றன் தூக்கம் தடுத்தஎன்
ஆண்டவ ரேஇங்கு வாரீர்
தாண்டவ ரேஇங்கு வாரீர். வாரீர் 20

1872 ஆபத்தை நீக்கிஓர் தீபத்தை ஏற்றிஎன்
ஆணவம் போக்கினீர் வாரீர்
காணவந் தேன்இங்கு வாரீர் வாரீர் 21

1873 இதுதரு ணம்தரு ணம்தரு ணம்என்
இறையவ ரேஇங்கு வாரீர்
இடர்தவிர்த் தாட்கொண்டீர் வாரீர். வாரீர் 22

1874 இச்சையின் வண்ணம் எனக்கருள் செய்ய
இதுதரு ணம்இங்கு வாரீர்
இன்னமு தாயினீர் வாரீர் வாரீர் 23

1875 இன்பம் கொடுத்தேஎன் துன்பம் கெடுத்துள்
இருக்கின்ற நாதரே வாரீர்
இருக்கின் பொருளானீர் வாரீர். வாரீர் 24

1876 இரவும் பகலும் இதயத்தி லூறி
இனிக்கும் அமுதரே வாரீர்
இனித்தரி யேன்இங்கு வாரீர். வாரீர் 25

1877 இன்னும்தாழ்த் தங்கே இருப்ப தழகன்று
இதுதரு ணம்இங்கு வாரீர்
இருமையும் ஆயினீர் வாரீர். வாரீர் 26

1878 இடர்தவிர்த் தின்பம் எனக்களித் தாளற்
கிதுதரு ணம்இங்கு வாரீர்
இனியவ ரேஇங்கு வாரீர். வாரீர் 27

1879 இறையும் பொறுப்பரி தென்னுயிர் நாதரே
இத்தரு ணம்இங்கு வாரீர்
இதுநடஞ் செய்கின்றீர் வாரீர். வாரீர் 28

1880 இம்மையி லேஎனக் கம்மையின் இன்பம்
இதுஎன் றளித்தீரே வாரீர்
இதயத் திருந்தீரே வாரீர். வாரீர் 29

1881 இங்கங்கென் னாமலே எள்ளுக்குள் எண்ணெய்போல்
எங்கும் நிறைந்தீரே வாரீர்
இந்தெழில் வண்ணரே வாரீர் வாரீர் 30

1882 இணைஒன்றும் இல்லா இணையடி என்தலை
ஏறவைத் தீர்இங்கு வாரீர்
இறுதியி லீர்இங்கு வாரீர். வாரீர் 31

1883 ஈன்றாளும் எந்தையும் என்குரு வும்எனக்
கின்பமும் ஆயினீர் வாரீர்
அன்பருக் கன்பரே வாரீர். வாரீர் 32

1884 ஈனம் அறுத்துமெய்ஞ் ஞான விளக்கென்
இதயத்தில் ஏற்றினீர் வாரீர்
உதயச் சுடரினீர் வாரீர். வாரீர் 33

1885 ஈடறி யாதமெய் வீடுதந் தன்பரை
இன்புறச் செய்கின்றீர் வாரீர்
வன்பர்க் கரியீரே வாரீர். வாரீர் 34

1886 ஈதியல் என்றுநின் றோதிய வேதத்திற்
கெட்டா திருந்தீரே வாரீர்
நட்டார்க் கெளியீரே வாரீர். வாரீர் 35

1887 ஈசர் எனும்பல தேசர்கள் போற்றும்ந
டேசரே நீர்இங்கு வாரீர்
நேசரே நீர்இங்கு வாரீர். வாரீர் 36

1888 ஈசர் பலிக்குழல் நேசர்என் றன்பர்கள்
ஏசநின் றீர்இங்கு வாரீர்
நாசமில் லீர்இங்கு வாரீர். வாரீர் 37

1889 ஈறறி யாமறை யோன்என் றறிஞர்
இயம்பநின் றீர்இங்கு வாரீர்
வயந்தரு வீர்இங்கு வாரீர். வாரீர் 38

1890 ஈதல்கண் டேமிகக் காதல்கொண் டேன்எனக்
கீதல்செய் வீர்இங்கு வாரீர்
ஓதரி யீர்இங்கு வாரீர். வாரீர் 39

1891 ஈடணை அற்றநெஞ் சூடணை உற்றுமற்
றீடணை யீர்இங்கு வாரீர்
ஆடல்வல் லீர்இங்கு வாரீர். வாரீர் 40

1892 ஈண்டறி வோங்கிடத் தூண்டறி வாகிஉள்
ஈண்டுகின் றீர்இங்கு வாரீர்
ஆண்டவ ரேஇங்கு வாரீர். வாரீர் 41

1893 உள்ளதே உள்ளது விள்ளது வென்றெனக்
குள்ள துரைசெய்தீர் வாரீர்
வள்ளல் விரைந்திங்கு வாரீர். வாரீர் 42

1894 உருவாய் அருவாய் உருவரு வாய்அவை
ஒன்றுமல் லீர்இங்கு வாரீர்
என்றும்நல் லீர்இங்கு வாரீர். வாரீர் 43

1895 உறவும் பகையும் உடைய நடையில்
உறவும்எண் ணேன்இங்கு வாரீர்
பிறவுநண் ணேன்இங்கு வாரீர். வாரீர் 44

1896 உள்ளக் கருத்தைநான் வள்ளற் குரைப்பதென்
உள்ளத் திருந்தீரே வாரீர்
விள்ளற் கரியீரே வாரீர். வாரீர் 45

1897 உய்யவல் லார்க்கருள் செய்யவல் லீர்நானும்
உய்யவல் லேன்இங்கு வாரீர்
செய்யவல் லீர்இங்கு வாரீர். வாரீர் 46

1898 உடையவ ரார்இக் கடையவ னேனுக்
குடையவ ரேஇங்கு வாரீர்
சடையவ ரே இங்கு வாரீர் வாரீர் 47

1899 உறங்கி இறங்கும் உலகவர் போலநான்
உறங்கமாட்டேன்இங்கு வாரீர்
இறங்கமாட் டேன்இங்கு வாரீர். வாரீர் 48

1900 உண்டுடுத் தின்னும் உழலமாட் டேன்அமு
துண்டி விரும்பினேன் வாரீர்
உண்டி தரஇங்கு வாரீர் வாரீர் 49

1901 உன்னுதோ றுன்னுதோ றுள்ளே இனிக்கின்ற
உத்தம ரேஇங்கு வாரீர்
உற்ற துணையானீர் வாரீர். வாரீர் 50

1902 உம்மாணை உம்மாணை உம்மைஅல் லால்எனக்
குற்றவர் மற்றிலை வாரீர்
உற்றறிந் தீர்இங்கு வாரீர். வாரீர் 51

1903 ஊன நடந்தவிர்த் தான நடங்காட்டு
மோன நடேசரே வாரீர்
ஞான நடேசரே வாரீர். வாரீர் 52

1904 ஊருமில் லீர்ஒரு பேருமில் லீர்அறி
வோருமில் லீர்இங்கு வாரீர்
யாருமில் லீர்இங்கு வாரீர். வாரீர் 53

1905 ஊறு சிவானந்தப் பேறு தருகின்ற
வீறுடை யீர்இங்கு வாரீர்
நீறுடை யீர்இங்கு வாரீர். வாரீர் 54

1906 ஊன்றும் சேவடி சான்று தரிக்கிலேன்
ஏன்றுகொள் வீர்இங்கு வாரீர்
ஆன்றவ ரேஇங்கு வாரீர். வாரீர் 55

1907 ஊற்றை உடம்பிது மாற்றுயர் பொன்னென
ஏற்றம் அருள்செய்வீர் வாரீர்
தேற்றம் அருள்செய்வீர் வாரீர் வாரீர் 56

1908 ஊடல்இல் லீர்எனைக் கூடல்வல் லீர்என்னுள்
பாடல்சொல் வீர்இங்கு வாரீர்
ஆடல்நல் லீர்இங்கு வாரீர். வாரீர் 57

1909 ஊக்கம் கொடுத்தென்றன் ஏக்கம் கெடுத்தருள்
ஆக்க மடுத்தீரே வாரீர்
தூக்கம் தவிர்த்தீரே வாரீர். வாரீர் 58

1910 ஊமை எழுத்தினுள் ஆமை எழுத்துண்டென்
றோமை அறிவித்தீர் வாரீர்
சேமஞ் செறிவித்தீர் வாரீர். வாரீர் 59

1911 ஊக மிலேன்பெற்ற தேகம் அழியாத
யோகம் கொடுத்தீரே வாரீர்
போகம் கொடுத்தீரே வாரீர் வாரீர் 60

1912 ஊதியம் தந்தநல் வேதிய ரேஉண்மை
ஓதிய நாதரே வாரீர்
ஆதிஅ னாதியீர் வாரீர் வாரீர் 61

1913 என்குறை தீர்த்தென்னுள் நன்குறை வீர்இனி
என்குறை என்முன்னீர் வாரீர்
தன்குறை இல்லீரே வாரீர். வாரீர் 62

1914 என்னுயிர் ஆகிஎன் றன்உயிர்க் குள்ளேஓர்
இன்னுயிர் ஆயினீர் வாரீர்
என்னுயிர் நாதரே வாரீர். வாரீர் 63

1915 என்கண் அருள்செய்தென் புன்கண் விலக்கிய
என்கண் ணனையீரே வாரீர்
மின்கண் ணுதலீரே வாரீர். வாரீர் 64

1916 எல்லா உயிர்களும் நல்லார் எனத்தொழும்
எல்லாம்வல் லீர்இங்கு வாரீர்
சொல்லா நிலையினீர் வாரீர். வாரீர் 65

1917 எட்டும் இரண்டுமென் றிட்டு வழங்குதல்
எட்டும் படிசெய்தீர் வாரீர்
எட்டுரு வாயினீர் வாரீர். வாரீர் 66

1918 என்று கண்டாம்இது நன்றுகொண் டாளுக
என்றுதந் தீர்இங்கு வாரீர்
அன்றுவந் தீர்இன்று வாரீர். வாரீர் 67

1919 எச்சம யங்களும் பொய்ச்சம யமென்றீர்
இச்சம யம்இங்கு வாரீர்
மெய்ச்சம யந்தந்தீர் வாரீர். வாரீர் 68

1920 என்பாற் களிப்பொடும் அன்பால்ஒன் றீந்திதை
இன்பால் பெறுகென்றீர் வாரீர்
தென்பால் முகங்கொண்டீர் வாரீர். வாரீர் 69

1921 எச்ச உரையன்றென் இச்சைஎல் லாம்உம
திச்சைகண் டீர்இங்கு வாரீர்
அச்சம்த விர்த்தீரே வாரீர். வாரீர் 70

1922 எண்ணமெல் லாம்உம தெண்ணமல் லால்வேறோர்
எண்ணம் எனக்கில்லை வாரீர்
வண்ணம் அளிக்கின்றீர் வாரீர். வாரீர் 71

1923 ஏராய நான்முகர் நாராய ணர்மற்றும்
பாராய ணம்செய்வீர் வாரீர்
பூராயம் ஆயினீர் வாரீர். வாரீர் 72

1924 ஏம மிகுந்திரு வாம சுகந்தரும்
ஏம சபேசரே வாரீர்
சோம சிகாமணி வாரீர். வாரீர் 73

1925 ஏத மிலாப்பர நாத முடிப்பொருள்
ஏதது சொல்லுவீர் வாரீர்
ஈதல் உடையீரே வாரீர். வாரீர் 74

1926 ஏக பராபர 'யோக வெளிக்கப்பால்
ஏக வெளிநின்றீர் வாரீர்
ஏகர் அனேகரே வாரீர். வாரீர் 75

1927 ஏறி இறங்கி இருந்தேன் இறங்காமல்
ஏறவைத் தீர்இங்கு வாரீர்
தேறவைத் தீர்இங்கு வாரீர். வாரீர் 76

1928 ஏகாந்த நன்னிலை யோகாந்தத் துள்ளதென்
றேகாந்தம் சொல்லினீர் வாரீர்
தேகாந்தம் இல்லீரே வாரீர். வாரீர் 77

1929 ஏகாத கல்விதான் சாகாத கல்வியென்
றேகாத லாற்சொன்னீர் வாரீர்
வேகாத காலினீர் வாரீர். வாரீர் 78

1930 ஏடா யிரமென்னை கோடா மொழிஒன்றே
ஏடாஎன் றீர்இங்கு வாரீர்
ஈடாவர் இல்லீரே வாரீர். வாரீர் 79

1931 ஏசாத தந்திரம் பேசாத மந்திரம்
ஈசான மேலென்றீர் வாரீர்
ஆசாதி இல்லீரே வாரீர். வாரீர் 80

1932 ஏனென்பார் வேறிலை நான்அன்பாற் கூவுகின்
றேன்என்பால் ஏனென்பீர் வாரீர்
ஆனின்பால் ஆடுவீர் வாரீர். வாரீர் 81

1933 ஐந்து மலங்களும் வெந்து விழஎழுத்
தைந்துஞ் செயும்என்றீர் வாரீர்
இந்து சிகாமணி வாரீர். வாரீர் 82

1934 ஐயமுற் றேனைஇவ் வையங் கரியாக
ஐயம் தவிர்த்தீரே வாரீர்
மெய்யம் பலத்தீரே வாரீர். வாரீர் 83

1935 ஐயர் நடம்புரி மெய்யர்என் றேஉணர்ந்
தையர் தொழநின்றீர் வாரீர்
துய்யர் உளநின்றீர் வாரீர். வாரீர் 84

1936 ஐவணங் காட்டுநும் மெய்வணம் வேட்டுநின்
றைவணர் ஏத்துவீர் வாரீர்
பொய்வணம் போக்குவீர் வாரீர். வாரீர் 85

1937 ஒன்றே சிவம்அதை ஒன்றுசன் மார்க்கமும்
ஒன்றேஎன் றீர்இங்கு வாரீர்
நன்றேநின் றீர்இங்கு வாரீர். வாரீர் 86

1938 ஒப்பாரில் லீர்உமக் கிப்பாரில் பிள்ளைநான்
ஒப்பாரி அல்லகாண் வாரீர்
முப்பாழ் கடந்தீரே வாரீர். வாரீர் 87

1939 ஒத்த இடந்தன்னில் நித்திரை செய்என்றீர்
ஒத்த இடங்காட்ட வாரீர்
சித்த சிகாமணி வாரீர். வாரீர் 88

1940 ஒட்டுமேற் றில்லைநான் விட்டுப் பிரிகலேன்
ஒட்டுவைத் தேனும்மேல் வாரீர்
எட்டுக் குணத்தீரே வாரீர். வாரீர் 89

1941 ஒருமை நிலையில் இருமையும் தந்த
ஒரிமையி னீர்இங்கு வாரீர்
பெருமையி னீர்இங்கு வாரீர். வாரீர் 90

1942 ஒண்மை விரும்பினேன் அண்மையில் ஈகுவீர்
உண்மைசொன் னேன்இங்கு வாரீர்
வண்மை இடங்கொண்டீர் வாரீர். வாரீர் 91

1943 ஓங்கார நாடகம் பாங்காகச் செய்கின்ற
ஓங்கார நாடரே வாரீர்
ஆங்கார நீக்கினீர் வாரீர். வாரீர் 92

1944 ஓங்கும்பிண் டாண்டங்கள் தாங்கும் பெருவெளி
ஓங்கு நடேசரே வாரீர்
பாங்குசெய் வீர்இங்கு வாரீர். வாரீர் 93

1945 ஓசையின் உள்ளேஓர் ஆசை உதிக்கமேல்
ஓசைசெய் வித்தீரே வாரீர்
பாசம் அறுத்தீரே வாரீர். வாரீர் 94

1946 ஓரா துலகினைப் பாரா திருநினக்
கோரா வகைஎன்றீர் வாரீர்
பேரா நிலைதந்தீர் வாரீர். வாரீர் 95

1947 ஓடாது மாயையை நாடாது நன்னெறி
ஊடா திருஎன்றீர் வாரீர்
வாடா திருஎன்றீர் வாரீர். வாரீர் 96

1948 ஓலக் கபாடத்தைச் சாலத் திறந்தருள்
ஓலக்கங் காட்டினீர் வாரீர்
காலக் கணக்கில்லீர் வாரீர். வாரீர் 97

1949 ஓடத்தின் நின்றொரு மாடத்தில் ஏற்றிமெய்
யூடத்தைக் காட்டினீர் வாரீர்
வேடத்தைப் பூட்டினீர் வாரீர். வாரீர் 98

1950 ஓமத்தி லேநடுச் சாமத்தி லேஎனை
ஓமத்தன் ஆக்கினீர் வாரீர்
சாமத்த நீக்கினீர் வாரீர். வாரீர் 99

1951 ஓமென்ப தற்குமுன் ஆமென் றுரைத்துடன்
ஊமென்று காட்டினீர் வாரீர்
நாமென்று நாட்டினீர் வாரீர். வாரீர் 100

1952 ஔவிய மார்க்கத்தின் வெவ்வியல் நீக்கியே
செவ்வியன் ஆக்கினீர் வாரீர்
ஒவ்விஒன் றாக்கினீர் வாரீர். வாரீர் 101

1953 கண்ணனை யீர்உம்மைக் காணஎன் ஆசைக்
கடல்பொங்கு கின்றது வாரீர்
உடல்தங்கு கின்றது வாரீர். வாரீர் 102

1954 கண்டணைந் தால்அன்றிக் காதல் அடங்காதென்
கண்மணி யீர்இங்கு வாரீர்
உண்மணி யீர்இங்கு வாரீர். வாரீர் 103

1955 கட்டிக்கொண் டும்மைக் கலந்து கொளல்வேண்டும்
காரண ரேஇங்கு வாரீர்
பூரண ரேஇங்கு வாரீர். வாரீர் 104

வாரீர் சிதம்பர வல்லி சிவகாம
வல்லி மணாளரே வாரீர்
மணிமன்ற வாணரே வாரீர்
திருச்சிற்றம்பலம்

## 114. அம்பலவாணர் அணைய வருகை

### வேட்கைக் கண்ணி

இராகம் – ஆனந்தபைரவி – ஆதிதாளம்

திருச்சிற்றம்பலம்

பல்லவி

1956 அணையவா ரீர் என்னை அணையவா ரீர்
அணிவளர் சிற் றம்பலத்தீர் அணையவா ரீர். 1

சரணங்கள்

1957 இயற்கைஉண்மை வடிவினரே அணையவா ரீர்
எல்லாம்செய் வல்லவரே அணையவா ரீர்
இயற்கைவிளக் கத்தவரே அணையவா ரீர்
எல்லார்க்கும் நல்லவரே அணையவா ரீர்
இயற்கைஇன்ப மானவரே அணையவா ரீர்
இறைமையெலாம் உடையவரே அணையவா ரீர்
இயற்கைநிறை வானவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர் 1

1958 உலகமெலாம் உடையவரே அணையவா ரீர்
உண்மைஉரைக் கின்றவரே அணையவா ரீர்
கலகம்அறுத் தாண்டவரே அணையவா ரீர்
கண்ணனைய காதலரே அணையவா ரீர்
அலகறியாப் பெருமையரே அணையவா ரீர்
அற்புதப்பொற் ஜோதியரே அணையவா ரீர்
இலகுசபா பதியவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர் 2

1959 பொதுவில்நடிக் கின்றவரே அணையவா ரீர்
பொற்புடைய புண்ணியரே அணையவா ரீர்
மதுவில் இனிக் கின்றவரே அணையவா ரீர்
மன்னியஎன் மன்னவரே அணையவா ரீர்

விதுவின்அமு தானவரே அணையவா ரீர்
மெய்யுரைத்த வித்தகரே அணையவா ரீர்
இதுதருணம் இறையவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர் 3

1960 வினைமாலை நீத்தவரே அணையவா ரீர்
வேதமுடிப் பொருளவரே அணையவா ரீர்
அனைமாலைக் காத்தவரே அணையவா ரீர்
அருட்பெருஞ்ஜோ திப்பதியீர் அணையவா ரீர்
புனைமாலை வேய்ந்தவரே அணையவா ரீர்
பொதுவில்நிறை பூரணரே அணையவா ரீர்
எனைமாலை யிட்டவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர் 4

1961 சிறுவயதில் எனைவிழைந்தீர் அணையவா ரீர்
சித்தசிகா மணியேநீர் அணையவா ரீர்
உறுவயதிங் கிதுதருணம் அணையவா ரீர்
உண்மைசொன்ன உத்தமரே அணையவா ரீர்
பொறுமைமிக உடையவரே அணையவா ரீர்
பொய்யாத வாசகரே அணையவா ரீர்
இறுதிதவிர்த் தாண்டவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர் 5

1962 சாதிமதந் தவிர்த்தவரே அணையவா ரீர்
தனித்தலைமைப் பெரும்பதியீர் அணையவா ரீர்
ஆதியந்தம் இல்லவரே அணையவா ரீர்
ஆரணங்கள் போற்றநின்றீர் அணையவா ரீர்
ஓதியுணர் வரியவரே அணையவா ரீர்
உள்ளபடி உரைத்தவரே அணையவா ரீர்
ஈதிசைந்த தருணமிங்கே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர் 6

1963 அன்பாட்டை விழைந்தவரே அணையவா ரீர்
அருட்ஜோதி வடிவினரே அணையவா ரீர்
துன்பாட்டை ஒழித்தவரே அணையவா ரீர்
துரியநிறை பெரியவரே அணையவா ரீர்
பின்பாட்டுக் காலையிதே அணையவா ரீர்
பிச்சேற்று கின்றவரே அணையவா ரீர்
என்பாட்டை ஏற்றவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர் 7

1964 அரைக்கணமும் தரியேன்நான் அணையவா ரீர்
ஆணைஉம்மேல் ஆணைஎன்னை அணையவா ரீர்
புரைக்கணங்கண் டறியேன்நான் அணையவா ரீர்
பொன்மேனிப் புண்ணியரே அணையவா ரீர்
வரைக்கணஞ்செய் வித்தவரே அணையவா ரீர்
மன்றில்நடிக் கின்றவரே அணையவா ரீர்
இரைக்கணவு தருணமிதே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர் 8

1965 கருணைநடஞ் செய்பவரே அணையவா ரீர்
கண்மணியில் கலந்தவரே அணையவா ரீர்
அருள்நிறைசிற் சபையவரே அணையவா ரீர்
அன்பர்குறை தீர்த்தவரே அணையவா ரீர்
தருணமிது விரைந்தென்னை அணையவா ரீர்
சத்தியரே நித்தியரே அணையவா ரீர்
இருள்நிறைந்தார்க் கறிவரியீர் அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர் 9

1966 சேரஉம்மேல் ஆசைகொண்டேன் அணையவா ரீர்
திருவுளமே அறிந்ததெல்லாம் அணையவா ரீர்
ஆரெனக்கிங் கும்மையல்லால் அணையவா ரீர்
அயலறியேன் ஆணைஉம்மேல் அணையவா ரீர்
ஈரகத்தேன் அல்லஇங்கே அணையவா ரீர்
என்னாசை பொங்குகின்றது அணையவா ரீர்
ஏரகத்தே அமர்ந்தருள்வீர் அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர் 10

1967 கலந்துகொள வேண்டுகின்றேன் அணையவா ரீர்
காதல்பொங்கு கின்றதென்னை அணையவா ரீர்
புலந்தறியேன் விரைகின்றேன் அணையவா ரீர்
புணர்வதற்குத் தருணமிதே அணையவா ரீர்
அலந்தவிடத் தருள்கின்றீர் அணையவா ரீர்
அரைக்கணமும் இனித்தரியேன் அணையவா ரீர்
இலந்தைநறுங் கனியனையீர் அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். 11

அணையவா ரீர்என்னை அணையவா ரீர்
அணிவளர் சிற் றம்பலத்தீர் அணையவா ரீர்.

திருச்சிற்றம்பலம்

# 115. அம்பலவாணர் ஆட வருகை

## ஆடலமுதக் கண்ணி

இராகம்—மோகனம்—ஏகதாளசாப்பு

திருச்சிற்றம்பலம்

பல்லவி

1968 ஆடவா ரீர் என்னோடு ஆடவா ரீர்
அம்பலதில் ஆடுகின்றீர் ஆடவா ரீர். 1

சரணங்கள்

1969 தன்மைபிறர்க் கறிவரியீர் ஆடவா ரீர்
தனித்தலைமைப் பெரும்பதியீர் ஆடவா ரீர்
வன்மைமனத் தவர்க்கரியீர் ஆடவா ரீர்
வஞ்சமிலா நெஞ்சகத்தீர் ஆடவா ரீர்
தொன்மைமறை முடியமர்ந்தீர் ஆடவா ரீர்
துரியபதங் கடந்தவரே ஆடவா ரீர்
இன்மை தவிர்த் தெனைமணந்தீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர் 1

1970 திருவாளர் போற்ற என்னோடு ஆடவா ரீர்
திருவனையார் வாழ்த்தஇங்கே ஆடவா ரீர்
பெருவாய்மைப் பெருந்தகையீர் ஆடவா ரீர்
பேராசை பொங்குகின்றேன் ஆடவா ரீர்
உருவாகி ஓங்குகின்றீர் ஆடவா ரீர்
உத்தமரே இதுதருணம் ஆடவா ரீர்
இருவாணர் ஏத்தநின்றீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர் 2

1971 வேற்றுமுகம் பாரேன்என்னோடு ஆடவா ரீர்
வெட்கமெல்லாம் விட்டுவிட்டேன் ஆடவா ரீர்
மாற்றுதற்கெண் ணாதீர்என்னோடு ஆடவா ரீர்
மாற்றில்உயிர் மாய்ப்பேன்கண்டீர் ஆடவா ரீர்
கூற்றுதைத்த சேவடியீர் ஆடவா ரீர்
கொண்டுகுலங் குறியாதீர் ஆடவா ரீர்
ஏற்றதனித் தருணமீதே ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர் . ஆடவா ரீர் 3

1972 இல்லாமை நீக்கிநின்றீர் ஆடவா ரீர்
என்னைமண மாலையிட்டீர் ஆடவா ரீர்
கொல்லாமை நெறிஎன்றீர் ஆடவா ரீர்
குற்றமெலாங் குணங்கொண்டீர் ஆடவா ரீர்

நல்லார்சொல் நல்லவரே ஆடவா ரீர்
நற்றாயில் இனியவரே ஆடவா ரீர்
எல்லாம்செய் வல்லவரே ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர் 4

1973 ஆசைகொண்டேன் ஆடஎன்னோடு ஆடவா ரீர்
ஆசைவெட்கம் அறியாதால் ஆடவா ரீர்
ஓசைகொண்ட தெங்குமிங்கே ஆடவா ரீர்
உம்ஆணை உம்மைவிடேன் ஆடவா ரீர்
காசுபணத் தாசையிலேன் ஆடவா ரீர்
கைபிடித்தாற் போதும்என்னோடு ஆடவா ரீர்
ஏசறநீத் தெனைஆண்டீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர் 5

1974 சன்மார்க்க நெறிவைத்தீர் ஆடவா ரீர்
சாகாத வரந்தந்தீர் ஆடவா ரீர்
கன்மார்க்க மனங்கரைத்தீர் ஆடவா ரீர்
கண்ணிசைந்த கணவரேநீர் ஆடவா ரீர்
சொன்மார்க்கப் பொருளானீர் ஆடவா ரீர்
சுத்தஅருட் ஜோதியரே ஆடவா ரீர்
என்மார்க்கம் உளத்துகந்தீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர் 6

1975 அண்டமெலாம் கண்டவரே ஆடவா ரீர்
அகண்டபரி பூரணரே ஆடவா ரீர்
பண்டமெலாம் படைத்தவரே ஆடவா ரீர்
பற்றொடுவீ டில்லவரே ஆடவா ரீர்
கொண்டெனைவந் தாண்டவரே ஆடவா ரீர்
கூத்தாட வல்லவரே ஆடவா ரீர்
எண்தகுபொற் சபையுடையீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர் 7

1976 பேதநினை யாதுவிரைந்து ஆடவா ரீர்
பின்பாட்டுக் காலையிதே ஆடவா ரீர்
ஓதஉல வாதவரே ஆடவா ரீர்
உள்ளாசை பொங்குகின்றது ஆடவா ரீர்
சாதல்அறுத் தெனைஆண்டீர் ஆடவா ரீர்
தனித்தலைமைப் பெரும்பதியீர் ஆடவா ரீர்
ஏதமறுத் தவர்க்கினியீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர் 8

1977 கள்ளமொன்றும் அறியேன்நான் ஆடவா ரீர்
கைகலந்து கொண்டீர்என்னோடு ஆடவா ரீர்
உள்ளபடி உரைக்கின்றேன் ஆடவா ரீர்
உம்மாசை பொங்குகின்றது ஆடவா ரீர்
தள்ளரியேன் என்னோடிங்கே ஆடவா ரீர்
தாழ்க்கில்இறை யும்தரியேன் ஆடவா ரீர்
எள்ளல்அறுத் தாண்டுகொண்டீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர் . ஆடவா ரீர் 9

1978 நச்சுகின்றேன் நிச்சலிங்கே ஆடவா ரீர்
நாணமச்சம் விட்டேனென்னோடு ஆடவா ரீர்
விச்சையெலாம் தந்துகளித்து ஆடவா ரீர்
வியந்துரைத்த தருணமிதே ஆடவா ரீர்
எச்சுகமும் ஆகிநின்றீர் ஆடவா ரீர்
எல்லாம்செய் வல்லவரே ஆடவா ரீர்
இச்சைமய மாய்இருந்தேன் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர் . ஆடவா ரீர் 10

1979 என்உயிருக் குயிரானீர் ஆடவா ரீர்
என்அறிவுக் கறிவானீர் ஆடவா ரீர்
என்னுடைஅன் பிற் கலந்தீர் ஆடவா ரீர்
என்னுடைஉள் ளத்திருந்தீர் ஆடவா ரீர்
என்உரிமைத் தாயனையீர் ஆடவா ரீர்
எனதுதனித் தந்தையரே ஆடவா ரீர்
என்ஒருமைச் சற்குருவே ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர் 11

ஆடவா ரீர் என்னோடு ஆடவா ரீர்
அம்பலத்தில் ஆடுகின்றீர் ஆடவா ரீர்.

திருச்சிற்றம்பலம்



# 116. ஆடேடி பந்து

## ஆனந்த மேலீடு

இராகம்–பியாகடை–அடதாள சாப்பு

திருச்சிற்றம்பலம்

பல்லவி

1980 ஆடேடி பந்து ஆடேடி பந்து
ஆடேடி பந்து ஆடேடி பந்து 1

சரணங்கள்

1981 வாழிஎன் தோழிஎன் வார்த்தைகேள் என்றும்
மரணமில் லாவரம் நான்பெற்றுக் கொண்டேன்
சூழியற் செஞ்சுடர்த் தோற்றுறு கீழ்பால்
தூய்த்திசை நோக்கினேன் சீர்த்திகழ் சித்தி
ஊழிதோ றூழிநின் றாடுவன் நீயும்
உன்னுதி யேல் இங்கே மன்னரு ளாணை
ஆழி கரத்தணிந் தாடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 1

1982 இசையாமல் போனவர் எல்லாரும் நாண
இறவாப் பெருவரம் யான்பெற்றுக் கொண்டேன்
வசையாதும் இல்லாத மேற்றிசை நோக்கி
வந்தேன்என் தோழிநீ வாழிகாண் வேறு
நசையாதே என்னுடை நண்பது வேண்டில்
நன்மார்க்க மாம்சுத்த சன்மார்க்கம் தன்னில்
அசையாமல் நின்றிங்கே ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 2

1983 இன்பாலே உலகத்தார் எல்லாரும் காண
இறவாப் பெருவரம் யான்பெற்றுக் கொண்டேன்
தென்பாலே நோக்கினேன் சித்தாடு கின்ற
திருநாள் இதுதொட்டுச் சேர்ந்தது தோழி
துன்பாலே அசைந்தது நீக்கிஎன் னோடே
சுத்தசன் மார்க்கத்தில் ஒத்தவ ளாகி
அன்பாலே அறிவாலே ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 3

1984 சதுமறை ஆகம சாத்திரம் எல்லாம்
சந்தைப் படிப்புநம் சொந்தப் படிப்போ
விதுநெறி சுத்தசன் மார்க்கத்தில் சாகா
வித்தையைக் கற்றனன் உத்தரம் எனுமோர்
பொதுவளர் திசைநோக்கி வந்தனன் என்றும்
பொன்றாமை வேண்டிடில் என்தோழி நீதான்
அதுஇது என்னாமல் ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 4

1985 தப்பாலே சகத்தவர் சாவே துணிந்தார்
தாமுள நாணநான் சாதலைத் தவிர்த்தே
எப்பாலும் எக்காலும் இருத்தலே பெற்றேன்
என்தோழி வாழிநீ என்னோடு கூடி
துப்பாலே விளங்கிய சுத்தசன் மார்க்க
ஜோதிஎன் றோதிய வீதியை விட்டே
அப்பாலே போகாமல் ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 5

1986 வெங்கேத மரணத்தை விடுவித்து விட்டேன்
விச்சைஎ லாம்கற்றென் இச்சையின் வண்ணம்
எங்கேயும் ஆடுதற் கெய்தினேன் தோழி
என்மொழி சத்தியம் என்னோடும் கூடி
இங்கே களிப்பது நன்றிந்த உலகோ
ஏதக் குழியில் இழுக்கும் அதனால்
அங்கேபா ராதேநீ ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 6

1987 சிவமே பொருள்என் றறிவால் அறிந்தேன்
செத்தாரை மீட்கின்ற திண்மையைப் பெற்றேன்
உவமேயம் இல்லாத ஒருநிலை தன்னில்
ஒன்றிரண் டென்னாத உண்மையில் நின்றேன்
தவமே புரிகின்றார் எல்லாரும் காணத்
தயவால் அழைக்கின்றேன் கயவாதே தோழி
அவமேபோ காதென்னோ டாடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 7

1988 துஞ்சாத நிலைஒன்று சுத்தசன் மார்க்கச்
சூழலில் உண்டது சொல்லள வன்றே
எஞ்சாத அருளாலே யான்பெற்றுக் கொண்டேன்
இரங்காரை எல்லாம் எழுப்புதல் வல்லேன்

விஞ்சாத அறிவாலே தோழிநீ இங்கே
வேதுசெய் மரணத்துக் கெதுசெய்வோ மென்றே
அஞ்சாமல் என்னோடே ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 8

1989 ஈரமும் அன்பும்கொண் டின்னருள் பெற்றேன்
என்மார்க்கம் இறவாத சன்மார்க்கம் தோழி
காரமும் மிகுபுளிச் சாரமும் துவர்ப்பும்
கைப்போடே உப்போடே கசப்போடே கூட்டி
ஊரமு துண்டுநீ ஒழியாதே அந்தோ
ஊழிதோறூழியும் உலவாமை நல்கும்
ஆரமு துண்டென்னோ டாடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 9

1990 துதிசெயும் முத்தரும் சித்தரும் காணச்
சுத்தசன் மார்க்கத்தில் உத்தம ஞானப்
பதிசெயும் சித்திகள் பற்பல வாகப்
பாரிடை வானிடைப் பற்பல காலம்
விதிசெயப் பெற்றனன் இன்றுதொட் டென்றும்
மெய்யருட் ஜோதியால் விளைவிப்பன் நீஅவ்
அதிசயம் பார்க்கலாம் ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 10

ஆடேடி பந்து ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து.
திருச்சிற்றம்பலம்

## 117. ஞான மருந்து

### ஆனந்தகளிப்பு-1

இராகம்-இந்துஸ்தானி - அனுஷிக தாளம்

திருச்சிற்றம்பலம்

பல்லவி

1991 ஞான மருந்திம் மருந்து – சுகம்
நல்கிய சிற்சபா நாத மருந்து 1

சரணங்கள்

1992 அருட்பெருஞ் ஜோதி மருந்து – என்னை
ஐந்தொழில் செய்தற் களித்த மருந்து
பொருட்பெரும் போக மருந்து – என்னைப்
புறத்தும் அகத்தும் புணர்ந்த மருந்து. ஞான 1

1993 எல்லாம்செய் வல்ல மருந்து — என்னுள்
என்றும் விடாமல் இனிக்கு மருந்து
சொல்லால் அளவா மருந்து — சுயஞ்
ஜோதி அருட்பெருஞ் ஜோதி மருந்து. ஞான 2

1994 காணாது காட்டு மருந்து — என்றன்
கையிற்பொற் கங்கணம் கட்டு மருந்து
ஆணாகிப் பெண்ணாம் மருந்து — அது
வாகி மணிமன்றில் ஆடு மருந்து. ஞான 3

1995 சுத்தசன் மார்க்க மருந்து — அருட்
ஜோதி மலையில் துலங்கு மருந்து
சித்துரு வான மருந்து — என்னைச்
சித்தெலாம் செய்யச்செய் வித்த மருந்து. ஞான 4

1996 அன்பர்க் கெளிய மருந்து — மற்றை
ஐவர்க்கும் காண்டற் கரிய மருந்து
என்பற்றில் ஓங்கு மருந்து — என்னை
இன்ப நிலையில் இருத்து மருந்து ஞான 5

1997 நாதாந்த நாட்டு மருந்து — பர
ஞான வெளியில் நடிக்கு மருந்து
போதாந்தற் கெய்து மருந்து — என்னுள்
பொன்னடி காட்டிப் புணர்ந்த மருந்து ஞான 6

1998 ஆதி அனாதி மருந்து — திரு
அம்பலத் தேநட மாடு மருந்து
ஜோதி மயமா மருந்து — எனக்
சோதியா தாண்ட துரிய மருந்து. ஞான 7

1999 ஆறந்தத் தோங்கு மருந்து —அதற்
கப்பாலுக் கப்பாலும் ஆன மருந்து
ஊறந்த மில்லா மருந்து — எனக்
குள்ளே கலந்த உறவா மருந்து. ஞான 8

2000 என்னுயிர்க் கன்பா மருந்து — கலந்
தென்னுயிர்க் குள்ளே இருந்த மருந்து
என்னுயிர் காக்கு மருந்து — என்றும்
என்னுயி ராகிய இன்ப மருந்து. ஞான 9

2001 என்னறி வுட்கொள்மருந்து – என்றும்
என்னறி வாகி இலங்கு மருந்து
என்னறி வின்ப மருந்து – என்னுள்
என்னறி வுக்கறி வென்னு மருந்து. ஞான 10

2002 என்குரு வான மருந்து – என்றும்
என்தெய்வம் ஆகி இருக்கு மருந்து
என்அன்னை யென்னு மருந்து – என்றும்
என்தந்தை யாகியஇன்ப மருந்து. ஞான 11

2003 என்பெரு வாழ்வா மருந்து – என்றும்
என்செல்வ மாகி இருக்கு மருந்து
என்னுயிர் நட்பா மருந்து – எனக்
கெட்டெட்டுச் சித்தியும் ஈந்த மருந்து. ஞான 12

2004 என்னிறை யான மருந்து – மகிழ்ந்
தெனக்குத்தன் பொன்மேனி ஈந்த மருந்து
தன்னறி வாகு மருந்து – என்னைத்
தந்த மருந்தென்றன் சொந்த மருந்து. ஞான 13

2005 உள்ளத்தி னுள்ளா மருந்து – என்றன்
உயிருக் கனாதி உறவா மருந்து
தெள்ளத் தெளிக்கு மருந்து – என்னைச்
சிவமாக்கிக் கொண்ட சிவாய மருந்து. ஞான 14

2006 மெய்ப்பொரு ளென்னு மருந்து – எல்லா
வேதா கமத்தும் விளங்கு மருந்து
கைப்பொரு ளான மருந்து – மூன்று
கண்கொண்ட என்னிரு கண்ணுள் மருந்து. ஞான 15

2007 மதியில் விளைந்த மருந்து – யார்க்கும்
மதிக்கப்ப டாதபொன் வண்ண மருந்து
கதிதரும் இன்ப மருந்து – அருட்
கண்ணால்என் றன்னைக் கலந்த மருந்து. ஞான 16

2008 கற்பூர ஜோதி மருந்து – பசுங்
கற்பூர நன்மணங் காட்டு மருந்து
பொற்பூவின் ஓங்கு மருந்து – என்தற்
போதம் தவிர்த்தசிற் போத மருந்து. ஞான 17

2009 மேலை வெளியா மருந்து – நான்
வேண்டுந்தோ றெல்லாம் விளையு மருந்து
சாலை விளக்கு மருந்து – சுத்த
சமரச சன்மார்க்க சங்க மருந்து. ஞான 18

2010 என்னைத்தா னாக்கு மருந்து – இங்கே
இறந்தாரை எல்லாம் எழுப்பு மருந்து
துன்னுமெய்ச் ஜோதி மருந்து – அருட்
ஜோதியால் என்னைத் துலக்கு மருந்து. ஞான 19

2011 பொய்யர்க் கரிதா மருந்து – என்னைப்
புறத்தும் அகத்தும் புணர்ந்த மருந்து
கையிற் கிடைத்த மருந்து – சிவ
காமக் கொடியைக் கலந்த மருந்து. ஞான 20

2012 ஆணவம் தீர்க்கு மருந்து –பர
மானந்தத் தாண்டவ மாடும் மருந்து
மாணவ வண்ண மருந்து – என்னை
வலிய அழைத்து வளர்க்கு மருந்து. ஞான 21

2013 வானடு வான மருந்து – என்னை
மாமணி மேடைமேல் வைத்த மருந்து
ஊனம் தவிர்த்த மருந்து – கலந்
துள்ளே இனிக்கின்ற உண்மை மருந்து. ஞான 22

2014 மலையிலக் கான மருந்து – என்றன்
மறப்பைத் தவிர்த்தமெய் வாழ்க்கை மருந்து
கலைநலம் காட்டு மருந்து – எங்கும்
கண்ணாகிக் காணும் கனத்த மருந்து. ஞான 23

2015 அற்புத ஜோதி மருந்து – எல்லாம்
ஆகியன் றாகி அமர்ந்த மருந்து
தற்பதம் தந்த மருந்து – எங்கும்
தானேதா னாகித் தனித்த மருந்து. ஞான 24

2016 தன்னை அளித்த மருந்து – என்றும்
சாகாத நல்வரம் தந்த மருந்து
பொன்னடி ஈந்த மருந்து – அருட்
போனகம் தந்த் புனித மருந்து. ஞான 25

2017 கண்ணுக் கினிய மருந்து – என்றன்
கைப்பொரு ளாந்தங்கக் கட்டி மருந்து
எண்ணுக் கடங்கா மருந்து – என்னை
ஏதக்குழிவிட் டெடுத்த மருந்து. ஞான 26

2018 சுட்டப் படாத மருந்து – என்றன்
தூக்கமும் சோர்வும் தொலைத்த மருந்து
எட்டுதற் கொண்ணா மருந்து – நான்
எட்டிப் பிடிக்க இசைந்த மருந்து. ஞான 27

2019 உன்னற் கரிதா மருந்து – எனக்
குள்ளும் புறத்தும் உலாவு மருந்து
தன்னந் தனித்த மருந்து – சுத்தச்
சாக்கிரா தீதச் சபேச மருந்து. ஞான 28

2020 ஒன்றில்ஒன் றான மருந்து – அந்த
ஒன்றில் இரண்டாகி ஓங்கு மருந்து
அன்றிமூன் றான மருந்து – நான்
காகிஐந் தாகி அமர்ந்த மருந்து. ஞான 29

2021 வெளிக்குள் வெளியா மருந்து – எல்லா
வெளியும் கடந்து விளங்கு மருந்து
ஒளிக்குள் ஒளியா மருந்து – எல்லா
ஒளியும்தா னாகிய உண்மை மருந்து. ஞான 30

2022 ஆறாறுக் கப்பால் மருந்து – அதற்
கப்புறத் தீராறுக் கப்பால் மருந்து
ஈறாதி இல்லா மருந்து – என்னை
எல்லாம் செயச்செய்த இன்ப மருந்து. ஞான 31

2023 ஆரணத் தோங்கு மருந்து – அருள்
ஆகம மாகிஅண் ணிக்கு மருந்து
காரணம் காட்டு மருந்து – எல்லாம்
கண்ட மருந்தென்னுள் கொண்ட மருந்து. ஞான 32

2024 மலமைந்து நீக்கு மருந்து – புவி
வானண்ட மெல்லாம் வளர்க்கு மருந்து
நலமிக் கருளு மருந்து – தானே
நானாகித் தானாகு நாட்டு மருந்து. ஞான 33

ஞான மருந்திம் மருந்து – சுகம்
நல்கிய சிற்சபா நாத மருந்து.

திருச்சிற்றம்பலம்

# 118. சிவசிவ ஜோதி

## ஆனந்தக் களிப்பு-2

இங்கிலிஷ் மெட்டு

இராகம்–சங்கராபரணம்–அடதாளம்

திருச்சிற்றம்பலம்

பல்லவி

2025 சிவசிவ சிவசிவ ஜோதி – சிவ
சிவசிவ சிவசிவ சிவசிவ ஜோதி
சிவசிவ சிவசிவ ஜோதி.

சரணங்கள்

2026 சிற்பர மாம்பரஞ் ஜோதி – அருட்
சித்தெல்லாம் வல்ல சிதம்பர ஜோதி
தற்பர தத்துவ ஜோதி – என்னைத்
தானாக்கிக் கொண்ட தயாநிதி ஜோதி. சிவசிவ 1

2027 சித்துரு வாம்சுயஞ் ஜோதி – எல்லாம்
செய்திட வல்ல சிதம்பர ஜோதி
அத்துவி தானந்த ஜோதி – என்னை
ஆட்கொண் டருளும்சிற் றம்பல ஜோதி. சிவசிவ 2

2028 சின்மய மாம்பெருஞ் ஜோதி – அருட்
செல்வ மளிக்கும் சிதம்பர ஜோதி
தன்மய மாய்நிறை ஜோதி – என்னைத்
தந்தமெய் ஜோதி சதானந்த ஜோதி. சிவசிவ 3

2029 ஆதிஈ றில்லாமுற் ஜோதி – அரன்
ஆதியர் தம்மை அளித்தபிற் ஜோதி
ஓதி உணர்வரும் ஜோதி – எல்லா
உயிர்களின் உள்ளும் ஒளிர்கின்ற ஜோதி. சிவசிவ 4

2030 மன்னிய பொன்வண்ண ஜோதி – சுக
வண்ணத்த தாம்பெரு மாணிக்க ஜோதி
துன்னிய வச்சிர ஜோதி – முத்து
ஜோதி மரகத ஜோதியுள் ஜோதி. சிவசிவ 5

2031 பார்முதல் ஐந்துமாம் ஜோதி – ஐந்தில்
பக்கமேல் கீழ்நடுப் பற்றிய ஜோதி
ஓர்ஐம் பொறியுரு ஜோதி – பொறிக்
குள்ளும் புறத்தும் ஒளிர்கின்ற ஜோதி. சிவசிவ 6

2032 ஐம்புல மும்தானாம் ஜோதி – புலத்
தகத்தும் புறத்து மலர்ந்தொளிர் ஜோதி
பொய்ம்மயல் போக்கும்உள் ஜோதி – மற்றைப்
பொறிபுலன் உள்ளும் புறத்துமாம் ஜோதி. சிவசிவ 7

2033 மனமாதி எல்லாமாம் ஜோதி – அவை
வாழ அகம்புறம் வாழ்கின்ற ஜோதி
இனமான உள்ளக ஜோதி – சற்றும்
ஏறா திறங்கா தியக்குமோர் ஜோதி. சிவசிவ 8

2034 முக்கணமு மூன்றாம் ஜோதி – அவை
முன்பின் இயங்க முடுக்கிய ஜோதி
எக்குணத் துள்ளுமாம் ஜோதி – குணம்
எல்லாம் கடந்தே இலங்கிய ஜோதி. சிவசிவ 9

2035 பகுதிமூன் றாகிய ஜோதி – மூலப்
பகுதிகள் மூன்றும் படைத்தருள் ஜோதி
விகுதி பலவாக்கும் ஜோதி – சற்றும்
விகுதிஒன் றின்றி விளக்கிய ஜோதி. சிவசிவ 10

2036 கால முதற்காட்டும் ஜோதி – கால
காரணத் தப்பால் கடந்தொளிர் ஜோதி
கோலம் பலவாகும் ஜோதி – ஒன்றும்
குறிக்கப் படாச்சிற் குணப்பெருஞ் ஜோதி. சிவசிவ 11

2037 தத்துவம் எல்லாம் ஜோதி – அந்தத்
தத்துவம் எல்லாம் தருவிக்கும் ஜோதி
அத்துவி தப்பெருஞ் ஜோதி – எல்லாம்
அருளில் விளங்க அமர்த்திய ஜோதி. சிவசிவ 12

2038 சத்தர்கள் எல்லாமாம் ஜோதி – அவர்
சத்திகள் எல்லாம் தழைப்பிக்கும் ஜோதி
முத்தர் அனுபவ ஜோதி – பர
முத்தியாம் ஜோதிமெய்ச் சித்தியாம் ஜோதி. சிவசிவ 13

2039 ஆறந்தத் தேநிறை ஜோதி – அவைக்
கப்புறத் தப்பாலும் ஆகிய ஜோதி
வீறும் பெருவெளி ஜோதி – மேலும்
வெட்ட வெளியில் விளங்கிய ஜோதி. சிவசிவ 14

2040 பேரருட் ஜோதியுள் ஜோதி – அண்ட
பிண்டங்கள் எல்லாம் பிறங்கிய ஜோதி
வாரமுற் றோங்கிய ஜோதி – மன
வாக்குக் கெட்டாததோர் மாமணி ஜோதி. சிவசிவ 15

2041 ஒன்றான பூரண ஜோதி – அன்பில்
ஒன்றாத உள்ளத்தில் ஒன்றாத ஜோதி
என்றா ஒளிர்கின்ற ஜோதி – என்னுள்
என்றும் விளங்கிய என்னுயிர் ஜோதி. சிவசிவ 16

2042 மெய்யேமெய் யாகிய ஜோதி – சுத்த
வேதாந்த வீட்டில் விளங்கிய ஜோதி
துய்ய சிவானந்த ஜோதி – குரு
தூரியத் தலத்தே துலங்கிய ஜோதி. சிவசிவ 17

2043 சிவமய மாம்சுத்த ஜோதி – சுத்த
சித்தாந்த வீட்டில் சிறந்தொளிர் ஜோதி
உவமையில் லாப்பெருஞ் ஜோதி – என
துள்ளே நிரம்பி ஒளிர்கின்ற ஜோதி. சிவசிவ 18

2044 என்னைத்தா னாக்கிய ஜோதி – இங்கே
இறந்தாரை எல்லாம் எழுப்புமோர் ஜோதி
அன்னைக்கு மிக்கருட் ஜோதி – என்னை
ஆண்டமு தம்தந்த ஆனந்த ஜோதி. சிவசிவ 19

2045 சித்தம் சிவமாக்கும் ஜோதி – நான்
செய்த தவத்தால் தெரிந்த உட் ஜோதி
புத்தமு தாகிய ஜோதி – சுக
பூரண மாய்ஒளிர் காரண ஜோதி. சிவசிவ 20

2046 தம்பத்தில் ஏற்றிய ஜோதி – அப்பால்
சார்மணி மேடைமேல் தான்வைத்த ஜோதி
விம்பப் பெருவெளி ஜோதி – அங்கே
வீதியும் வீடும் விளக்கிய ஜோதி. சிவசிவ 21

2047 சுகமய மாகிய ஜோதி – எல்லா
ஜோதியு மான சொரூபஉட் ஜோதி
அகமிதந் தீர்த்தருள் ஜோதி – சச்சி
தானந்த ஜோதி சதானந்த ஜோதி. சிவசிவ 22

2048 நித்த பரானந்த ஜோதி – சுத்த
நிரதிச யானந்த நித்திய ஜோதி
அத்துவி தானந்த ஜோதி – எல்லா
ஆனந்த வண்ணமும் ஆகிய ஜோதி. சிவசிவ 23

2049 பொய்யாத புண்ணிய ஜோதி – எல்லாப்
பொருளும் விளங்கப் புணர்த்திய ஜோதி
நையா தருள்செய்த ஜோதி – ஒரு
நானும்தா னும்ஒன்றாய் நண்ணிய ஜோதி. சிவசிவ 24

2050 கண்ணிற் கலந்தருள் ஜோதி – உளக்
கண்ணுயிர்க் கண்ணருட் கண்ணுமாம் ஜோதி
எண்ணிற்ப டாப்பெருஞ் ஜோதி – நான்
எண்ணிய வண்ணம் இயற்றிய ஜோதி. சிவசிவ 25

2051 விந்து ஒளிநடு ஜோதி – பர
விந்து ஒளிக்குள் விளங்கிய ஜோதி
நம்துயர் தீர்த்தருள் ஜோதி – பர
நாதாந்த நாட்டுக்கு நாயக ஜோதி. சிவசிவ 26

2052 தான்அன்றி ஒன்றிலா ஜோதி – என்னைத்
தன்மயம் ஆக்கிய சத்திய ஜோதி
நான்இன்று கண்டதோர் ஜோதி – தானே
நானாகி வாழ்ந்திட நல்கிய ஜோதி. சிவசிவ 27

2053 தன்னிகர் இல்லாதோர் ஜோதி – சுத்த
சன்மார்க்க சங்கம் தழுவிய ஜோதி
என்னுள் நிறைந்தமெய் ஜோதி – என்னை
ஈன்றைந் தொழில்செய்என் றேவிய ஜோதி. சிவசிவ 28

2054 அச்சம் தவிர்த்தமெய் ஜோதி – என்னை
ஆட்கொண் டருளிய அம்பல ஜோதி
இச்சை எலாம்தந்த ஜோதி – உயிர்க்
கிங்குமங் கென்னாமல் எங்குமாம் ஜோதி. சிவசிவ 29

2055 காலையில் நான்கண்ட ஜோதி – எல்லாக்
காட்சியும் நான்காணக் காட்டிய ஜோதி
ஞாலமும் வானுமாம் ஜோதி – என்னுள்
நானாகித் தானாகி நண்ணிய ஜோதி. சிவசிவ 30

2056 ஏகாந்த மாகிய ஜோதி – என்னுள்
என்றும் பிரியா திருக்கின்ற ஜோதி
சாகாத வரந்தந்த ஜோதி – என்னைத்
தானாக்கிக் கொண்டதோர் சத்திய ஜோதி. சிவசிவ 31

2057 சுத்த சிவமய ஜோதி – என்னை
ஜோதி மணிமுடி சூட்டிய ஜோதி
சத்திய மாம்பெருஞ் ஜோதி – நானே
தானாகி ஆளத் தயவுசெய் ஜோதி. சிவசிவ 32

சிவசிவ சிவசிவ ஜோதி – சிவ
சிவசிவ சிவசிவ சிவசிவ ஜோதி
சிவசிவ சிவசிவ ஜோதி.

திருச்சிற்றம்பலம்

## 119. ஜோதியுள் ஜோதி

### ஆனந்தக் களிப்பு - 3

இராகம் – கமாஸ் – ஆதிதாளம்

திருச்சிற்றம்பலம்

பல்லவி

2058 ஜோதியுள் ஜோதியுள் ஜோதி – சுத்த
ஜோதி சிவஜோதி ஜோதியுள் ஜோதி
ஜோதியுள் ஜோதியுள் ஜோதி. 1

சரணங்கள்

2059 சிவமே பொருளென்று தேற்றி – என்னைச்
சிவவெளிக் கேறும் சிகரத்தில் ஏற்றிச்
சிவமாக்கிக் கொண்டது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 1

2060 வித்தெல்லாம் ஒன்றென்று நாட்டி – அதில்
விளைவு பலபல வேறென்று காட்டிச்
சித்தெல்லாம் தந்தது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 2

2061 சொல்வந்த அந்தங்கள் ஆறும் – ஒரு
சொல்லாலே ஆமென்றச் சொல்லாலே வீறும்
செல்வம் கொடுத்தது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 3

2062 தங்கோல் அளவெனக் கோதிச் – சுத்த
சமரச சத்திய சன்மார்க்க நீதிச்
செங்கோல் அளித்தது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 4

2063 ஆபத்தை நீக்கி வளர்த்தே – சற்றும்
அசையாமல் அவியாமல் அடியேன் உளத்தே
தீபத்தை வைத்தது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 5

2064 மெய்யொன்று சன்மார்க்க மேதான் – என்றும்
விளங்கப் படைப்பாதி மெய்த்தொழில் நீதான்
செய்யென்று தந்தது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 6

2065 என்பால் வருபவர்க் கின்றே – அருள்
ஈகின்றேன் ஈகின்றேன் ஈகின்றேன் என்றே
தென்பால் இருந்தது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 7

2066 துரியத் தலமூன்றின் மேலே – சுத்த
துரியப் பதியில் அதுஅத னாலே
தெரியத் தெரிவது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 8

2067 பரைதூக்கிக் காட்டிய காலே – ஆதி
பரைஇவர்க் கப்பால்அப் பால்என்று மேலே
திரைதூக்கிக் காட்டுதல் பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 9

2068 தற்பர மேவடி வாகி – அது
தன்னைக் கடந்து தனிஉரு வாகிச்
சிற்பரத் துள்ளது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 10

2069 நவவெளி நால்வகை யாதி – ஒரு
நடுவெளிக் குள்ளே நடத்திய நீதிச்
சிவவெளி யாம்இது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 11

2070 மேருவெற் புச்சியின் பாலே – நின்று
விளங்குமோர் தம்பத்தின் மேலுக்கு மேலே
சேருமோர் மேடைமேல் பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 12

2071 ஆரண வீதிக் கடையும் – சுத்த
ஆகம வீதிகள் அந்தக் கடையும்
சேர நடுக்கடை பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 13

2072 பாடல் மறைகளோர் கோடி – அருட்
பாதஉருவ சொரூபங்கள் பாடி
தேட இருந்தது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 14

2073 நீடு சிவகாமங் கோடி – அருள்
நேருறப் பாடியும் ஆடியும் ஓடித்
தேட இருந்தது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 15

2074 பத்தி நெறியில் செழித்தே – அன்பில்
பாடுமெய் யன்பர் பதியில் பழுத்தே
தித்தித் திருப்பது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 16

2075 பித்தாடு மாயைக்கு மேலே – சுத்தப்
பிரம வெளியினில் பேரரு ளாலே
சித்தாடு கின்றது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 17

2076 தருநெறி எல்லாம்உள் வாங்கும் – சுத்த
சன்மார்க்கம் என்றோர் தனிப்பேர்கொண் டோங்கும்
திருநெறிக் கேசென்று பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 18

2077 எம்பொருள் எம்பொருள் என்றே – சொல்லும்
எல்லாச் சமயத்துள் எல்லார்க்கும் ஒன்றே
செம்பொருள் என்பது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 19

2078 சைவ முதலாக நாட்டும் – பல
சமயங்கள் எல்லாம் தனித்தனிக் காட்டும்
தெய்வம் இதுவந்து பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 20

2079 எள்ளலில் வான்முதல் மண்ணும் – அமு
தெல்லாம் இதிலோர் இறையள வென்னும்
தெள்ளமு தாம்இது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 21

2080 எத்தாலும் ஆகாதே அம்மா – என்றே
எல்லா உலகும் இயம்புதல் சும்மா
செத்தாரை மீட்பது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 22

2081 பிறந்து பிறந்துழன் றேனை – என்றும்
பிறவா திறவாப் பெருமைதந் தூனைச்
சிறந்தொளிர் வித்தது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 23

2082 வருவித்த வண்ணமும் நானே – இந்த
மாநிலத் தேசெயும் வண்ணமும் தானே
தெரிவித் தருளிற்றுப் பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 24

2083 பாரிடம் வானிட மற்றும் – இடம்
பற்றிய முத்தர்கள் சித்தர்கள் முற்றும்
சேரிட மாம்இது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 25

2084 உய்பிள்ளை பற்பலர்ஆவல் – கொண்டே
உலகத் திருப்பஇங் கென்னைத்தன் ஏவல்
செய்பிள்ளை ஆக்கிற்றுப் பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 26

2085 உருவும் உணர்வும்செய் நன்றி – அறி
உளமும் எனக்கே உதவிய தன்றித்
திருவும் கொடுத்தது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 27

2086 எண்ணிய எண்ணங்கள் எல்லாம் – நான்
எண்ணிய வாறேஇனிதுதந் தென்னைத்
திண்ணியன் ஆக்கிற்றுப் பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 28

2087 பேருல கெல்லாம் மதிக்கத் – தன்
பிள்ளைஎன் றென்னைப் பெயரிட் டழைத்தே
சீருறச் செய்தது பாரீர் – திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. 29
ஜோதியுள் ஜோதியுள் ஜோதி – சுத்த
ஜோதி சிவஜோதி ஜோதியுள் ஜோதி
ஜோதியுள் ஜோதியுள் ஜோதி.
திருச்சிற்றம்பலம்

## 120. அஞ்சாதே நெஞ்சே அஞ்சாதே

### நெஞ்சோடு கிளத்தல்

இராகம்–இந்துஸ்தான் காபி– சாப்பு தாளம்

திருச்சிற்றம்பலம்

பல்லவி

2088 அஞ்சா தே நெஞ்சே அஞ்சா தே
அஞ்சா தே நெஞ்சே அஞ்சா தே. 1

சரணங்கள்

2089 வஞ்சமி லாநாம் வருந்திடில் அப்போதே
அஞ்சலென் பார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 1

2090 துய்யர் அருட்பெருஞ் ஜோதியார் நம்முடை
அய்யர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 2

2091 மண்ணில் நமையாண்ட வள்ளலார் நம்முடை
அண்ணல்இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 3

2092 இப்புவி யில்நம்மை ஏன்றுகொண் டாண்டநம்
அப்பர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 4

2093 சித்தர் எலாம்வல்ல தேவர் நமையாண்ட
அத்தர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 5

2094 ஜோதி அருட்பெருஞ் ஜோதியார் நம்முடை
ஆதி இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 6

2095 தாண்டவ னார்எனைத் தான்தடுத் தாட்கொண்ட
ஆண்டவ னார் இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 7

2096 வன்பர் மனத்தை மதியா தவர்நம
தன்பர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 8

2097 தெருளுடை யார்எலாஞ் செய்யவல் லார்திரு
அருளுடை யார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 9

2098 நம்மை ஆட்கொள்ள நடம்புரி வார்நம
தம்மை யினோடிதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 10

2099 தன்னைஒப் பார்சிற் சபைநடஞ் செய்கின்றார்
அன்னைஒப் பார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 11

2100 பாடுகின் றார்க்கருட் பண்பினர் ஞானக்கூத்
தாடுகின் றார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 12

2101 காதரிப் பார்கட்குக் காட்டிக் கொடார்நம்மை
ஆதரிப் பார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 13

2102 நீளவல் லார்க்குமேல் நீளவல்லார் நம்மை
ஆளவல் லார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 14

2103 இன்புடை யார்நம் இதயத் தமர்ந்தபே
ரன்புடை யார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 15

2104 உபய பதத்தைநம் உச்சிமேற் சூட்டிய
அபயர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 16

2105 வேண்டுகொண் டார்என்னை மேல்நிலைக் கேற்றியே
ஆண்டுகொண் டார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 17

2106 எச்சம்பெ றேல்மக னேஎன்றென் னுள்உற்ற
அச்சம் தவிர்த்தவர் அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 18

2107 நமுதன் முதற்பல நன்மையு மாம்ஞான
அமுதர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 19

2108 செடிகள் தவிர்த்தருட் செல்வ மளிக்கின்ற
அடிகள் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 20

2109 விரசுல கெல்லாம் விரித்தைந் தொழில்தரும்
அரசுடை யார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 21

2110 செறிவுடை யார்உளத் தேநடஞ் செய்கின்ற
அறிவுரு வார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே 22

அஞ்சா தே நெஞ்சே அஞ்சா தே
அஞ்சா தே நெஞ்சே அஞ்சா தே.
திருச்சிற்றம்பலம்

## 121. இது நல்ல தருணம்

இராகம்–கல்யாணி–அடதாளம்

திருச்சிற்றம்பலம்

பல்லவி

2111 இதுநல்ல தருணம் – அருள்செய்ய
இதுநல்ல தருணம்.

அநு பல்லவி

2112 பொதுநல்ல நடம்வல்ல புண்ணிய ரேகேளும்
பொய்யேதும் சொல்கிலேன் மெய்யே புகல்கின்றேன். இதுநல்ல 1

சரணங்கள்

2113 மதித்த சமயமத வழக்கெல்லா மாய்ந்தது
வருணாச் சிரமம்எனு மயக்கமும் சாய்ந்தது
கொதித்த லோகாசாரக் கொதிப்பெல்லாம் ஒழிந்தது
கொலையும் களவுமற்றைப் புலையும் அழிந்தது. இதுநல்ல 1

2114 குறித்த வேதாகமக் கூச்சலும் அடங்கிற்று
குதித்த மனமுருட்டுக் குரங்கு முடங்கிற்று
வெறித்தவெவ் வினைகளும் வெந்து குலைந்தது
விந்தைசெய் கொடுமாயைச் சந்தையும் கலைந்தது.
இதுநல்ல 2

2115 கோபஒமும் காமமும் குடிகெட்டுப் போயிற்று
கொடியஓர் ஆங்காரம் பொடிப்பொடி ஆயிற்று
தாபமும் சோபமும் தான்தானே சென்றது
தத்துவம் எல்லாம்என் றன்வசம் நின்றது. இதுநல்ல 3

2116 கரையா எனது மனக் கல்லும் கரைந்தது
கலந்து கொளற்கென் கருத்தும் விரைந்தது
புரையா நிலையில்என் புந்தியும் தங்கிற்று
பொய்படாக் காதல் ததும்பிமேல் பொங்கிற்று. இதுநல்ல 4

இதுநல்ல தருணம் – அருள்செய்ய
இதுநல்ல தருணம்.
திருச்சிற்றம்பலம்

## 122. என்ன புண்ணியம் செய்தேனோ

இராகம்—உசேனி—அடதாளம்
திருச்சிற்றம்பலம்
பல்லவி

2117 என்ன புண்ணியம் செய்தே னோ – அம் மாநான்
என்ன புண்ணியம் செய்தே னோ. 1

அநு பல்லவி

2118 மன்னர்நாதர் அம்பலவர் வந்தார்வந்தார் என்றுதிருச்
சின்னநாதம் என்னிரண்டு செவிகளினுள் சொல்கின்றதே.
என்ன 1

சரணங்கள்

2119 பொருள்நான் முகனுமாலும் தெருள்நான்ம றையுநாளும்
போற்றும்சிற் றம்பலத்தே ஏற்றும ணிவிளக்காய்
அருள்நாட கம்புரியும் கருணாநி தியர்உன்னை
ஆளவந்தார் வந்தார்என்றெக் காளநாதம் சொல்கின்றதே.
என்ன 1

2120 பாடியநல் லோர் தமக்கே நாடியதெல் தலாம்அளிப்பார்
பத்திவலை யுட்படுவார் சத்தியர்நித் தியர்மன்றில்
ஆடியபொற் பாதர்வேதம் தேடியசிற் போதர்உன்னை
அணையவந்தார் வந்தார்என்றே இணையில்நாதம் சொல்கின்றதே.
என்ன 2

2121 எந்தரமுட் கொண்டஞான சுந்தரர்என் மணவாளர்
எல்லாம்செய் வல்லசித்தர் நல்லோர் உளத்தமர்ந்தார்
மந்திரமா மன்றில்இன்பம் தந்தநட ராசர் உன்னை
மருவவந்தார் வந்தார்என்று தெருவில்நாதம் சொல்கின்றதே.
என்ன 3

2122 ஓதிஎந்த விதத்தாலும் வேதியனும் தேர்வரியார்
ஓங்கார பஞ்சகத்தே பாங்காக நடிக்கின்றார்
ஆதியந்தம் காண்பரிய ஜோதிசுயஞ் ஜோதிஉன்னோடு
ஆடவந்தார் வந்தார்என்றே நாடிநாதம் சொல்கின்றதே. என்ன 4

2123 அற்புதப்பே ரழகாளர் சொற்பதம் கடந்துநின்றார்
அன்பரெலாம் தொழமன்றில் இன்பநடம் புரிகின்றார்
சிற்பரர்எல் லாமும்வல்ல தற்பரர் விரைந்திங்குன்னைச்
சேரவந்தார் வந்தார்என்றோங் காரநாதம் சொல்கின்றதே.
என்ன 5

2124 ஆரணர்நா ரணர்* எல்லாம் பூரணர்என் றேத்துகின்ற
ஐயர்திரு வம்பலவர் மெய்யர்எல்லாம் வல்லசித்தர்
காரணமும் காரியமும் தாரணிநீ யாகஉன்னைக்
காணவந்தார் வந்தார்என்றே வேணுநாதம் சொல்கின்றதே.
என்ன 6

2125 பாகார்மொழி யாள்சிவ மாகாம வல்லிநாளும்
பார்த்தாட மணிமன்றில் கூத்தாடு கின்றசித்தர்
வாகாஉனக்கே என்றும் சாகா வரங்கொடுக்க
வலியவந்தார் வந்தார்என்றே வலியநாதம் சொல்கின்றதே.
என்ன 7

என்ன புண்ணியம் செய்தே னோ —அம் மாநான்
என்ன புண்ணிம் செய்தே னோ.
திருச்சிற்றம்பலம்

## 123. வருவார் அழைத்து வாடி

சிந்து
இராகம் – பியாகடை – அடதாளசாப்பு
திருசிற்றம்பலம்

பல்லவி

2126 வருவார ழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே
வந்தார் பெறலாம்நல்ல வரமே. 1

அநுபல்லவி

2127 திருவார்பொன் னம்பலத்தே செழிக்குங்குஞ் சிதபாதர்
சிவசிதம் பரபோதர் தெய்வச் சபாநாதர் வருவார் 1

சரணங்கள்

2128 சிந்தை களிக்கக்கண்டு சிவானந்த மதுவுண்டு
தெளிந்தோர்எல் லாரும்தொண்டு செய்யப் பவுரிகொண்டு
இந்த வெளியில்நட மிடத்துணிந் தீரேஅங்கே
இதைவிடப் பெருவெளி இருக்குதென் றால்இங்கே. வருவார் 1

* காரணர் – வே.ப.மு. பதிப்பு

2129 இடுக்கி லாமல்இருக்க இடமுண்டு நடஞ்செய்ய
இங்கம் பலம்ஒன்றங்கே எட்டம் பலம்உண்டைய
ஒடுக்கில் இருப்பதென்ன உளவுகண்டு கொள்வீர் என்னால்
உண்மைஇது வஞ்சமல்ல உம்மேல் ஆணை என்றுசொன்னால்
வருவார் 2

2130 மெல்லியல் சிவகாம வல்லி யுடன்களித்து
விளையா டவும்எங்கள் வினைஓ டவும்ஒளித்து
எல்லையில் இன்பந்தரவும் நல்லசம யந்தானிது
இங்கும் அங்கும் நடமாடி இருக்கலாம் என்றபோது

வருவார ழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே
வந்தாற் பெறலாம்நல்ல வரமே.
திருச்சிற்றம்பலம்

## 124. பெருவழக்கு

சிந்து
இராகம்–பைரவி–ரூபக தாளம்
திருச்சிற்றம்பலம்

பல்லவி

2131 இவர்க்கும் எனக்கும்பெரு வழக்கிருக் கின்றது அது*
என்றும் தீரா வழக்குக் காண டி. 1

அநு பல்லவி

2132 எவர்க்கும் பெரியவர்பொன் னம்பலத் தேநடம்
இட்டார் எனக்குமாலை இட்டார் இதோவந்தார். இவர்க்கும் 1

சரணங்கள்

2133 அன்றிதோ வருகின்றேன் என்று போனவர்அங்கே
யார்செய்த தடையாலோ இருந்தார்என் கையிற்சங்கை
இன்றுதம் கையிற்கொண்டே வந்துநிற் கின்றார்இங்கே
இந்தக் கதவைமூடு இவர்போவ தினிஎங்கே. இவர்க்கும் 1

2134 அவரவர் உலகத்தே அறிந்தலர் தூற்றப்பட்டேன்
அன்றுபோ னவர்இன்று வந்துநிற் கின்றார்கெட்டேன்
இவர்சூதை அறியாதே முன்னம் ஏமாந்துவிட்டேன்
இந்தக் கதவைமூடு இனிஎங்கும் போகஒட்டேன். இவர்க்கும் 2

* இருக்கின்றது – வே.ப.மு. பதிப்பு

2135 சின்ன வயதில்என்னைச் சேர்ந்தார்புன் னகையோடு
சென்றார் தயவால்இன்று வந்தார் இவர்க்கார்ஈடு
என்னைவிட் டினிஇவர் எப்படிப் போவார்ஓடு
இந்தக் கதவைமுடு இரட்டைத்தாட் கோலைப்போடு. 3

இவர்க்கும் எனக்கும்பெரு வழக்கிருக் கின்றதது
என்றும் தீரா வழக்குக் காண டி.

திருச்சிற்றம்பலம்

## 125. ஆடிய பாதம்

சிந்து
இராகம் – தன்யாசி – ரூபக தாளம்
திருச்சிற்றம்பலம்

பல்லவி

2136 ஆடிய பாதமன் றாடிய பாதம்
ஆடிய பாதம்நின் றாடிய பாதம். 1

கண்ணிகள்

2137 பாடிய வேதங்கள் தேடிய பாதம்
பத்திசெய் பத்தர்க்குத் தித்திக்கும் பாதம்
நாடிய மாதவர்* நேடிய பாதம்
நாதாந்த நாட்டுக்கு நாயக பாதம். ஆடிய 1

2138 தீராத வல்வினை தீர்க்கின்ற பாதம்
தெய்வங்கள் எல்லாந் தெரிசிக்கும் பாதம்
வாரா வரவாகி வந்தபொற் பாதம்
வஞ்ச மனத்தில் வசியாத பாதம். ஆடிய 2

2139 ஆரா அமுதாகி அண்ணிக்கும் பாதம்
அன்பர் உளத்தே அமர்ந்தருள் பாதம்
நாரா யணன்விழி நண்ணிய பாதம்
நான்புனை பாடல் நயந்தபொற் பாதம். ஆடிய 3

2140 நல்லவர் எல்லாம் நயக்கின்ற பாதம்
நாத முடிவில் நடிக்கின்ற பாதம்
வல்லவர் சொல்லெல்லாம் வல்லபொற் பாதம்
மந்திர யந்திர தந்திர பாதம். ஆடிய 4

* மாதவன் – ஆ.பா.பதிப்பு

2141 எச்சம யத்தும் இலங்கிய பாதம்
எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்குமாம் பாதம்
அச்சம் தவிர்த்தென்னை ஆட்கொண்ட பாதம்
ஆனந்த நாட்டுக் கதிபதி பாதம். ஆடிய 5

2142 தேவர்கள் எல்லாரும் சிந்திக்கும் பாதம்
தெள்ளமு தாய்உளந் தித்திக்கும் பாதம்
மூவரும் காணா முழுமுதற் பாதம்
முப்பாழுக் கப்பால் முளைத்தபொற் பாதம். ஆடிய 6

2143 தூரிய வெளிக்கே உரியபொற் பாதம்
சுகமய மாகிய சுந்தரப் பாதம்
பெரிய பொருளென்று பேசும்பொற் பாதம்
பேறெல்லாந் தந்த பெரும்புகழ்ப் பாதம். ஆடிய 7

2144 சாகா வரந்தந்த தாரகப் பாதம்
சச்சிதா னந்த சதோதய பாதம்
தேகாதி எல்லாம் சிருட்டிக்கும் பாதம்
திதிமுதல் ஐந்தொழில் செய்கின்ற பாதம். ஆடிய 8

2145 ஓங்கார பீடத் தொளிர்கின்ற பாதம்
ஒன்றாய் இரண்டாகி ஓங்கிய பாதம்
தூங்காத தூக்கத்தில் தூக்கிய பாதம்
துரியத்தில் ஊன்றித் தலுங்கிய பாதம். ஆடிய 9

2146 ஐவண்ண முங்கொண்ட அற்புதப் பாதம்
அபயர் எல்லார்க்கும் அமுதான பாதம்
கைவண்ண நெல்லிக் கனியாகும் பாதம்
கண்ணும் கருத்தும் கலந்தபொற் பாதம். ஆடிய 10

2147 ஆருயிர்க் காதாரம் ஆகிய பாதம்
அண்ட பிண்டங்கள் அளிக்கின்ற பாதம்
சாருயிர்க் கின்பம் தருகின்ற பாதம்
சத்திய ஞான தயாநிதி பாதம். ஆடிய 11

2148 தாங்கி எனைப் பெற்ற தாயாகும் பாதம்
தந்தையு மாகித் தயவுசெய் பாதம்
ஓங்கிஎன் னுள்ளே உறைகின்ற பாதம்
உண்மை விளங்க உரைத்தபொற் பாதம். ஆடிய 12

* ஐயர் – ச.மு.க.

2149 எண்ணிய வாறே எனக்கருள் பாதம்
இறவா நிலையில் இருத்திய பாதம்
புண்ணியர் கையுள் பொருளாகும் பாதம்
பொய்யர் உளத்தில் பொருந்தாத பாதம். ஆடிய 13

2150 ஆறந்தத் துள்ளும் அமர்ந்தபொற் பாதம்
ஆதி அனாதியும் ஆகிய பாதம்
மாறந்தம் இல்லாஎன் வாழ்முதற் பாதம்
மண்முதல் ஐந்தாய் வயங்கிய பாதம். ஆடிய 14

2151 அருட்பெருஞ் ஜோதிய தாகிய பாதம்
அம்மையும் அப்பனும் ஆகிய பாதம்
பொருட்பெரும் போகம் புணர்த்திய பாதம்
பொன்வண்ண மாகிய புண்ணிய பாதம். ஆடிய 15

2152 நாரண னாதியர் நாடரும் பாதம்
நான்தவத் தாற்பெற்ற நற்றுணைப் பதம்
ஆரணம் ஆகமம் போற்றிய பாதம்
ஆசைவிட் டார்க்கே அணிமையாம் பாதம். ஆடிய 16

ஆடிய பாதமன் றாடிய பாதம்
ஆடிய பாதம்நின் றாடிய பாதம்
திருச்சிற்றம்பலம்

## 126. அபயம் அபயம் அபயம்

இராகம்–தோடி–ஆதிதாளம்

திருச்சிற்றம்பலம்

பல்லவி

2153 அபயம் அபயம் அபயம் அபயம் அபயம் 1

சரணங்கள்

2154 உபயம தாய்என் உறவாய்ச் சிதம்பரச்
சபையில் நடஞ்செயும் சாமி பதத்திற்கே அபயம் 1

2155 எம்பலத் தால்எம்மை ஏன்றுகொ ளத்தில்லை
அம்பலத் தாடும்எம் ஐயர் பதத்திற்கே அபயம் 2

2156 தவசிதம் பரமாகித் தன்மய மாய்ச்செயும்
சிவசிதம் பரமகா தேவர் பதத்திற்கே அபயம் 3

2157 ஒன்றும் பதத்திற் குயர்பொரு ளாகியே
என்றும்என் உள்ளத் தினிக்கும் பதத்திற்கே அபயம் 4

2158 வானந்த மாந்தில்லை மன்றிடை என்றுநின்று
ஆனந்தத் தாண்டவ மாடும் பதத்திற்கே அபயம் 5

2159 நாரா யணனொடு நான்முக னாதியர்
பாரா யணம்செயும் பதும பதத்திற்கே அபயம் 6

2160 அன்பர் செயும்பிழை ஆயிர மும்பொறுத்து
இன்ப மளிக்கும்நம் ஈசர் பதத்திற்கே அபயம் 7

2161 குற்றம் செயினும் குணமாகக் கொண்டுநம்
அற்றம் தவிர்க்கும்நம் அப்பர் பதத்திற்கே அபயம் 8

2162 செம்பொருள் ஆகிச் சிதம்பரத் தேஎன்றும்
நம்பொருள் ஆன நடேசர் பதத்திற்கே அபயம் 9

2163 வெச்சென்ற மாயை வினையாதி யால்வந்த
அச்சம் தவிர்க்குநம் ஐயர் பதத்திற்கே அபயம் 10

2164 எண்ணிய எண்ணங்கள் எல்லா முடிக்குநம்
புண்ணிய னார்தெய்வப் பொன்னடிப் போதுக்கே அபயம் 11

2165 மன்னம் பரத்தே வடிவில் வடிவாகிப்
பொன்னம் பலத்தாடும் பொன்னடிப் போதுக்கே அபயம் 12

2166 நாதமுடிவில் நடம்புரிந் தன்பர்க்குப்
போதம் அளிக்கின்ற பொன்னடிப் போதுக்கே அபயம் 13

2167 உச்சி தாழ்கின்ற உறவோர் உறவான
சச்சி தானந்தத் தனிநடப் போதுக்கே அபயம் 14

2168 சித்தமும் உள்ளமும் தித்தித் தினிக்கின்ற
புத்தமு தாகிய பொன்னடிப் போதுக்கே அபயம் 15

அபயம் அபயம் அபயம் அபயம்

திருச்சிற்றம்பலம்

## 127. அற்புதம் அற்புதமே

இராகம்--தர்பார் --ரூபக தாளம்

திருச்சிற்றம்பலம்

பல்லவி

2169 அற்புதம் அற்புத மே – அருள்
அற்புதம் அற்புத மே அற்புதம் 1

சரணங்கள்

2170 சிற்பதம் பொற்பதஞ் சீரே சிறந்தது
சித்தாடு கின்ற திருநாள் பிறந்தது
கற்பத நெஞ்சக் கரிசு துறந்தது
கற்றபொய்ந் நூல்கள் கணத்தே மறந்தது அற்புதம் 1

2171 செத்தார் எழுகின்ற திருநாள் அடுத்தது
சிவநெறி ஒன்றே எங்கும்தலை எடுத்தது
இத்தா ரணிமுதல் வானும் உடுத்தது
இறவா வரந்தான் எனக்குக் கொடுத்தது அற்புதம் 2

2172 ஆனந்த நாடகம்ஆடுதல் சார்ந்தது
அடுத்த தருணம் இதுவாக நேர்ந்தது
ஈனந்த மாயை இருள்வினை சோர்ந்தது
என்னருட் ஜோதிஎன் உள்ளத்தில் ஆர்ந்தது அற்புதம் 3

2173 சத்திய ஞான சபைஎன்னுள் கண்டனன்
சன்மார்க்க சித்தியை நான்பெற்றுக் கொண்டனன்
நித்திய ஞான நிறையமு துண்டனன்
நிந்தை உலகியற் சந்தையை விண்டனன் அற்புதம் 4

2174 வஞ்சகர் அஞ்சினர் வாய்மூடிச் சென்றனர்
வந்து திரும்பவும் வாயிலில் நின்றனர்
தஞ்சம் எமக்கருள் சாமிநீ என்றனர்
சன்மார்க்க சங்கத் தவர்களே வென்றனர் அற்புதம் 5

2175 புறங்கூறி னாரெல்லாம் புல்லெனப் போயினர்
பொற்படிக் கீழ்ப்புற மீளவு மேயினர்
மறங்கூறி னோம்என்செய் வோம்என்று – கூயினர்
வாழிய என்றசொல் வாயினர் ஆயினர் அற்புதம் 6

2176 வெவ்வினைக் காடெலாம் வேரோடு வெந்தது
வெய்ய மாமாயை விரிவற்று நொந்தது
செவ்விய ஞானம் சிறப்புற வந்தது
சித்திகள் யாவையும் செய்திடத் தந்தது அற்புதம் 7

2177 சாதி சமயச் சழக்கெலாம் அற்றது
சன்மார்க்க ஞான சபைநிலை பெற்றது
மேதினியிற் சாகா வித்தையைக் கற்றது
மெய்யருட் ஜோதிஎன் உள்ளத்தில் உற்றது அற்புதம் 8

அற்புதம் அற்புத மே – அருள்
அற்புதம் அற்புத மே.

திருச்சிற்றம்பலம்

## 128. ஆணிப்பொன்னம்பலக் காட்சி

### காட்சிக்கண்ணி

இராகம்–எதுகுலகாம்போதி–அடதாள உசி

திருச்சிற்றம்பலம்

பல்லவி

2178 ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சிய டி – அம்மா
அற்புதக் காட்சிய டி. 1

2179 ஜோதி மலைஒன்று தோன்றிற் றதில்ஒரு
வீதிஉண் டாச்சுத டி – அம்மா
வீதிஉண் டாச்சுத டி. ஆணி 1

2180 வீதியில் சென்றேன்அவ் வீதி நடுஒரு
மேடை இருந்தத டி – அம்மா
மேடை இருந்தத டி. ஆணி 2

2181 மேடைமேல் ஏறினேன் மேடைமேல் அங்கொரு
கூடம் இருந்தத டி – அம்மா
கூடம் இருந்தத டி. ஆணி 3

2182 கூடத்தை நாடஅக் கூடமேல் ஏழ்நிலை
மாடம் இருந்தத டி – அம்மா
மாடம் இருந்தத டி. ஆணி 4

2183 ஏழ்நிலைக் குள்ளும் இருந்த அதிசயம்
என்னென்று சொல்வன டி – அம்மா
என்னென்று சொல்வன டி. ஆணி 5

2184 ஓர்நிலை தன்னில் ஒளிர்முத்து வெண்மணி
சீர்நீலம் ஆச்சுத டி – அம்மா
சீர்நீலம் ஆச்சுத டி. ஆணி 6

2185 பாரோர் நிலையில் கருநீலம் செய்ய
பவளம தாச்சுத டி – அம்மா
பவளம தாச்சுத டி. ஆணி 7

2186 மற்றோர் நிலையில் மரகதப் பச்சைசெம்
மாணிக்கம் ஆச்சுத டி – அம்மா
மாணிக்கம் ஆச்சுத டி. ஆணி 8

2187 பின்னோர் நிலையில் பெருமுத்து வச்சிரப்
பேர்மணி ஆச்சுத டி – அம்மா
பேர்மணி ஆச்சுத டி. ஆணி 9

2188 வேறோர் நிலையில் மிகும்பவ ளத்திரள்
வெண்மணி ஆச்சுத டி – அம்மா
வெண்மணி ஆச்சுத டி. ஆணி 10

2189 புகலோர் நிலையில் பொருந்திய பன்மணி
பொன்மணி ஆச்சுத டி – அம்மா
பொன்மணி ஆச்சுத டி. ஆணி 11

2190 பதியோர் நிலையில் பகர்மணி எல்லாம்
படிகம தாச்சுத டி – அம்மா
படிகம தாச்சுத டி. ஆணி 12

2191 ஏழ்நிலை மேலே இருந்ததோர் தம்பம்
இசைந்தபொற் றம்பம டி – அம்மா
இசைந்தபொற் றம்பம டி. ஆணி 13

2192 பொற்றம்பம் கண்டேறும் போதுநான் கண்ட
புதுமைஎன் சொல்வன டி – அம்மா
புதுமைஎன் சொல்வன டி. ஆணி 14

2193 ஏறும்போ தங்கே எதிர்ந்த வகைசொல
என்னள வல்லவ டி – அம்மா
என்னள வல்லவ டி. ஆணி 15

2194 ஆங்காங்கே சத்திகள் ஆயிரம் ஆயிரம்
ஆகவந் தார்கள டி – அம்மா
ஆகவந் தார்கள டி. ஆணி 16

2195 வந்து மயக்க மயங்காமல் நான் அருள்
வல்லபம் பெற்றேன டி – அம்மா
வல்லபம் பெற்றேன டி. ஆணி 17

2196 வல்லபத் தால்அந்த மாதம்பத் தேறி
மணிமுடி கண்டேன டி – அம்மா
மணிமுடி கண்டேன டி. ஆணி 18

2197 மணிமுடி மேலோர் கொடுமுடி நின்றது
மற்றது கண்டேன டி – அம்மா
மற்றது கண்டேன டி. ஆணி 19

2198 கொடுமுடி மேல்ஆயி ரத்தெட்டு மாற்றுப்பொற்
கோயில் இருந்தத டி – அம்மா
கோயில் இருந்தத டி. ஆணி 20

2199 கோயிலைக் கண்டங்கே கோபுர வாயிலில்
கூசாது சென்றேன டி – அம்மா
கூசாது சென்றேன டி. ஆணி 21

2200 கோபுர வாயிலுள் சத்திகள் சத்தர்கள்
கோடிபல் கோடிய டி – அம்மா
கோடிபல் கோடிய டி. ஆணி 22

2201 ஆங்கவர் வண்ணம்வெள் வண்ணம்செவ் வண்ணமுன்
ஐவண்ணம் ஆகும டி – அம்மா
ஐவண்ணம் ஆகும டி. ஆணி 23

2202 அங்கவ ரெல்லாம்இங் கார்இவர் என்னவும்
அப்பாலே சென்றேன டி – அம்மா
அப்பாலே சென்றேன டி. ஆணி 24

2203 அப்பாலே சென்றேன்அங் கோர்திரு வாயிலில்
ஐவர் இருந்தார டி – அம்மா
ஐவர் இருந்தார டி. ஆணி 25

2204 மற்றவர் நின்று வழிகாட்ட மேலோர்
மணிவாயில் உற்றேன டி – அம்மா
மணிவாயில் உற்றேன டி. ஆணி 26

2205 எண்ணும்அவ் வாயிலில் பெண்ணோ டாணாக
இருவர் இருந்தார டி – அம்மா
இருவர் இருந்தார டி. ஆணி 27

2206 அங்கவர் காட்ட அணுக்கத் திருவாயில்
அன்பொடு கண்டேன டி – அம்மா
அன்பொடு கண்டேன டி. ஆணி 28

2207 அத்திரு வாயிலில் ஆனந்த வல்லிஎன்
அம்மை இருந்தாள டி – அம்மா
அம்மை இருந்தாள டி. ஆணி 29

2208 அம்மையைக் கண்டேன் அவளருள் கொண்டேன்
அமுதமும் உண்டேன டி – அம்மா
அமுதமும் உண்டேன டி. ஆணி 30

2209 தாங்கும் அவளரு ளாலே நடராஜர்
சந்நிதி கண்டேன டி – அம்மா
சந்நிதி கண்டேன டி. ஆணி 31

2210 சந்நிதி யில்சென்று நான்பெற்ற பேறது
சாமி அறிவார டி – அம்மா
சாமி அறிவார டி. ஆணி 32

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சிய டி – அம்மா
அற்புதக் காட்சிய டி.

திருச்சிற்றம்பலம்

## 129. அக்கச்சி

சிந்து

இராகம்–எதுகுலகாம்போதி–அடதாளம்

திருச்சிற்றம்பலம்

2211 வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்
மயில்குயில் ஆச்சுத டி – அக்கச்சி
மயில்குயில் ஆச்சுத டி. 1

2212 துள்ளலை விட்டுத் தொடங்கினேன் மன்றாடும்
வள்ளலைக் கண்டேன டி – அக்கச்சி
வள்ளலைக் கண்டேன டி. 2

2213 சாதி சமயச் சழக்கைவிட் டேன்அருட்
ஜோதியைக் கண்டேன டி – அக்கச்சி
ஜோதியைக் கண்டேன டி. 3

2214 பொய்யை ஒழித்துப் புறப்பட்டேன் மன்றாடும்
ஐயரைக் கண்டேன டி – அக்கச்சி
ஐயரைக் கண்டேன டி. 4

திருச்சிற்றம்பலம்

## 130. ஊதூது சங்கே

தாழிசை

இராகம்–சஹானா–அடதாளம்

திருச்சிற்றம்பலம்

பல்லவி

2215 ஊதூது சங்கே ஊதூது சங்கே
ஊதூது சங்கே ஊதூது சங்கே. ஊதூது

சரணங்கள்

2216 கைவிட மாட்டான்என்று ஊதூது சங்கே
கனக சபையான்என்று ஊதூது சங்கே
பொய்விடச் செய்தான்என்று ஊதூது சங்கே
பூசைப லித்ததென்று ஊதூது சங்கே 1

2217 தூக்கம் தொலைத்தான்என்று ஊதூது சங்கே
துன்பம் தவிர்த்தான் என்று ஊதூது சங்கே
ஏக்கம் கெடுத்தான்என்று ஊதூது சங்கே
ஏம சபையான்என்று ஊதூது சங்கே 2

2218 பொன்னடி தந்தான் என்று ஊதூது சங்கே
பொன்னம் பலத்தான் என்று ஊதூது சங்கே
இன்னல் அறுத்தான் என்று ஊதூது சங்கே
என்னுள் அமர்ந்தான் என்று ஊதூது சங்கே 3

2219 அச்சம் தவிர்த்தான்என்று ஊதூது சங்கே
அம்பல வாணன்என்று ஊதூது சங்கே
இச்சை அளித்தான்என்று ஊதூது சங்கே
இன்பம் கொடுத்தான் என்று ஊதூது சங்கே 4

2220 என்உயிர் காத்தான்என்று ஊதூது சங்கே
இன்பம் பலித்ததென்று ஊதூது சங்கே
பொன்உருத் தந்தான்என்று ஊதூது சங்கே
பொற்சபை அப்பன்என்று ஊதூது சங்கே 5

2221 சிவமாக்கிக் கொண்டான்என்று ஊதூது சங்கே
சிற்றம் பலத்தான்என்று ஊதூது சங்கே
நவநோக் களித்தான் என்று ஊதூது சங்கே
நான்அவன் ஆனேன்என்று ஊதூது சங்கே 6

2222 நாத முடியான்என்று ஊதூது சங்கே
ஞான சபையான்என்று ஊதூது சங்கே
பாத மளித்தான்என்று ஊதூது சங்கே
பலித்தது பூசைஎன்று ஊதூது சங்கே 7

2223 தெள்ளமு தானான்என்று ஊதூது சங்கே
சிற்சபை அப்பன்என்று ஊதூது சங்கே
பாத மளித்தான்என்று ஊதூது சங்கே
பலித்தது பூசைஎன்று ஊதூது சங்கே 8

2224 என்னறி வானான்என்று ஊதூது சங்கே
எல்லாம்செய் வல்லான்என்று ஊதூது சங்கே
செந்நிலை தந்தான்என்று ஊதூது சங்கே
சிற்சபை அப்பன்என்று ஊதூது சங்கே 9

2225 இறவாமை ஈந்தான் என்று ஊதூது சங்கே
எண்ணம் பலித்ததென்று ஊதூது சங்கே
திறமே அளித்தான்என்று ஊதூது சங்கே
சிற்றம் பலத்தான்என்று ஊதூது சங்கே 10

2226 கரவு தவிர்ந்ததென்று ஊதூது சங்கே
கருணை கிடைத்ததென்று ஊதூது சங்கே
இரவு விடிந்ததென்று ஊதூது சங்கே
எண்ணம் பலித்ததென்று ஊதூது சங்கே 11

2227 எல்லாம்செய் வல்லான்என்று ஊதூது சங்கே
எல்லார்க்கும் நல்லான்என்று ஊதூது சங்கே
எல்லாம் உடையான் என்று ஊதூது சங்கே
எல்லாமும் ஆனான் என்று ஊதூது சங்கே 12

2228 கருணா நிதியனெ ன்று ஊதூது சங்கே
கடவுள் அவனேஎன்று ஊதூது சங்கே
அருள்நா டகத்தான் என்று ஊதூது சங்கே
அம்பல ஜோதிஎன்று ஊதூது சங்கே 13

2229 தன்னிகர் இல்லான்என்று ஊதூது சங்கே
தலைவன் அவனேஎன்று ஊதூது சங்கே
பொன்னியல் வண்ணன்என்று ஊதூது சங்கே
பொதுநடம் செய்வான் என்று ஊதூது சங்கே 14

2230 ஆனந்த நாதன்என்று ஊதூது சங்கே
அருளுடை அப்பன்என்று ஊதூது சங்கே
தானந்தம் இல்லான்என்று ஊதூது சங்கே
தத்துவச் ஜோதிஎன்று ஊதூது சங்கே 15

2231 பொய்விட் டகன்றேன்என்று ஊதூது சங்கே
புண்ணியன் ஆனேன்என்று ஊதூது சங்கே
மெய்தொட்டு நின்றேன்என்று ஊதூது சங்கே
மேல்வெளி கண்டேன்என்று ஊதூது சங்கே 16

திருச்சிற்றம்பலம்



## 131. சின்னம்பிடி

தாழிசை
இராகம்–தன்யாசி–ஆதிதாளம்
திருச்சிற்றம்பலம்

2232 அம்பலவர் வந்தார்என்று சின்னம்பிடி
அற்புதம்செய் கின்றார்என்று சின்னம்பிடி
செம்பலன் அளித்தார்என்று சின்னம்பிடி
சித்திநிலை பெற்றதென்று சின்னம்பிடி 1

2233 சிற்சபையைக் கண்டோம்என்று சின்னம்பிடி
சித்திகள்செய் கின்றோம்என்று சின்னம்பிடி
பொற்சபை புகுந்தோம்என்று சின்னம்பிடி
புந்திமகிழ் கின்றோம்என்று சின்னம்பிடி 2

2234 ஞானசித்தி புரம்என்று சின்னம்பிடி
நாடகம்செய் இடம்என்று சின்னம்பிடி
ஆனசித்தி செய்வோம்என்று சின்னம்பிடி
அருட்ஜோதி பெற்றோம்என்று சின்னம்பிடி 3

2235 கொடிகட்டிக் கொண்டோம்என்று சின்னம்பிடி
கூத்தாடு கின்றோம்என்று சின்னம்பிடி
அடிமுடியைக் கண்டோம்என்று சின்னம்பிடி
அருளமுதம் உண்டோம்என்று சின்னம்பிடி 4

2236 அப்பர்வரு கின்றார்என்று சின்னம்பிடி
அற்புதம்செய் வதற்கென்று சின்னம்பிடி
செப்பநிலை பெற்றதென்று சின்னம்பிடி
சித்திபுரம் இடமென்று சின்னம்பிடி 5

2237 தானேநான் ஆனேன்என்று சின்னம்பிடி
சத்தியம்சத் தியம்என்று சின்னம்பிடி
ஊனே புகுந்ததென்று சின்னம்பிடி
ஒளிவண்ணம் ஆனதென்று சின்னம்பிடி 6

2238 வேகாத கால்உணர்ந்து சின்னம்பிடி
வேகா நடுத்தெரிந்து சின்னம்பிடி
சாகாத தலைஅறிந்து சின்னம்பிடி
சாகாத கல்விகற்றுச் சின்னம்பிடி 7

2239 மீதான நிலைஏறிச் சின்னம்பிடி
வெட்டவெளி நடுநின்று சின்னம்பிடி
வேதாக மம்கடந்து சின்னம்பிடி
வேதாந்தச் சித்தாந்த சின்னம்படி 8

2240 பன்மார்க்க மும்கடந்து சின்னம்பிடி
பன்னிரண்டின் மீதுநின்று சின்னம்பிடி
சன்மார்க்க மார்க்கம்என்று சின்னம்பிடி
சத்தியம்செய் கின்றோம்என்று சின்னம்பிடி 9

2241 சித்தாடு கின்றார்என்று சின்னம்பிடி
செத்தார் எழுவார்என்று சின்னம்பிடி
இத்தா ரணியில்என்று சின்னம்பிடி
இதுவே தருணம்என்று சின்னம்பிடி 10

திருச்சிற்றம்பலம்

## 132. கண்புருவப் பூட்டு

தாழிசை

இராகம்—சஹானா—ரூபகதாளம்

திருச்சிற்றம்பலம்

2242 கையறவி லாதுநடுக் கண்புருவப் பூட்டு
கண்டுகளி கொண்டுதிறந் துண்டுநடு நாட்டு
ஐயர்மிக உய்யும்வகை அப்பர்விளை யாட்டு
ஆடுவதென் றேமறைகள் பாடுவது பாட்டு. 1

2243 சிற்சபையும் பொற்சபையும் சொந்தமென தாச்சு
தேவர்களும் மூவர்களும் பேசுவதென் பேச்சு
இச்சமய வாழ்வில்எனக் கென்னைஇனி ஏச்சு
என்பிறவித் துன்பமெலாம் இன்றோடே போச்சு. 2

2244 ஐயர்அருட் ஜோதியர சாட்சிஎன தாச்சு
ஆரணமும் ஆகமமும் பேசுவதென் பேச்சு
எய்யுலக வாழ்வில்எனக் கென்னைஇனி ஏச்சு
என்பிறவித் துன்பமெலாம் இன்றோடே போச்சு. 3

2245 ஈசன்அரு ளால்கடலில் ஏற்றதொரு ஓடம்
ஏறிக்கரை ஏறினேன் இருந்ததொரு மாடம்
தேசுறும்அம் மாடநடுத் தெய்வமணி பீடம்
தீபஒளி கண்டவுடன் சேர்ந்ததுசந் தோடம். 4

2246 மேருமலை உச்சியில்வி ளங்குகம்ப நீட்சி
மேவும்அதன் மேல்உலகில் வீறுமர சாட்சி
சேரும்அதில் கண்டபல காட்சிகள்கண் காட்சி
செப்பல்அரி தாம்இதற்கென் அப்பன்அருள் சாட்சி. 5

2247 தூரியமலை மேல்உளதோர் ஜோதிவள நாடு
தோன்றும்அதில் ஐயர்நடம் செய்யுமணி வீடு
தெரியும்அது கண்டவர்கள் காணில்உயி ரோடு
செத்தவர் எழுவார்என்று கைத்தாளம் போடு. 6

2248 சொல்லால் அளப்பரிய ஜோதிவரை மீது
தூயதுரி யப்பதியில் நேயமறை ஓது
எல்லாம்செய் வல்லசித்தர் தம்மைஉறும் போது
இறந்தார் எழுவாரென்று புறந்தாரை ஊது. 7

2249 சிற்பொதுவும் பொற்பொதுவும் நான்அறிய லாச்சு
சித்தர்களும் முத்தர்களும் பேசுவதென் பேச்சு
இப்பெரிய இவ்வுலகில் என்னைஇனி ஏச்சு
என்பிறவித் துன்பமெலாம் இன்றோடே போச்சு. 8

2250 வலதுசொன்ன பேர்களுக்கு வந்ததுவாய்த் தாழ்வு
மற்றவரைச் சேர்ந்தவர்க்கும் வந்ததலைத் தாழ்வு
வலதுபுஜம் ஆடநம்பால் வந்ததருள் வாழ்வு
மற்றுநமைச் சூழ்ந்தவர்க்கும் வந்ததுநல் வாழ்வு. 9

2251 அம்பலத்தில் எங்கள்ஐயர் ஆடியநல் லாட்டம்
அன்பொடுது தித்தவருக் கானதுசொல் லாட்டம்
வம்புசொன்ன பேர்களுக்கு வந்ததுமல் லாட்டம்
வந்ததலை யாட்டமின்றி வந்ததுபல் லாட்டம். 10

2252 நாத்திகம்சொல் கின்றவர்தம் நாக்குமுடை நாக்கு
நாக்குருசி கொள்ளுவதும் நாறியபிண் ணாக்கு
சீர்த்திபெறும் அம்பலவர் சீர்புகன்ற வாக்கு
செல்வாக்கு நல்வாக்கு தேவர்திரு வாக்கு. 11

திருச்சிற்றம்பலம்

## 133. பிரபஞ்ச வெற்றி

இராகம்—பைரவி—ரூபக தாளம்

திருச்சிற்றம்பலம்

2253 அருட்ஜோதி ஆனேன்என்று அறையப்பா முரசு
அருளாட்சி பெற்றேன்என்று அறையப்பா முரசு
மருட்சார்பு தீர்ந்தேன்என்று அறையப்பா முரசு
மரணந்த விர்ந்தேன்என்று அறையப்பா முரசு. 1

திருச்சிற்றம்பலம்

# நாமாவளி

## 134. அம்பலத்தரசே

இராகம்—இந்துஸ்தான் பியாக்—ஆதி தாளம்

திருச்சிற்றம்பலம்

2254 சிவசிவ கஜமுக கணநாதா
சிவகண வந்தித குணநீதா 1

2255 சிவசிவ சிவசிவ தத்துவ போதா*
சிவகுரு பரசிவ சண்முக நாதா 2

2256 அம்பலத் தரசே அருமருந் தே
ஆனந்தத் தேனே அருள்விருந் தே. 1

2257 பொதுநடத் தரசே புண்ணிய னே
புலவரெ லாம்புகழ் கண்ணிய னே. 2

---

* ஆ.பா. பதிப்பைத் தவிர மற்றைப் பதிப்புகள் அனைத்திலும் அம்பலத்தரசே முதலாக நாமாவளி தொடங்குகிறது. ஆ.பா. பதிப்பில் மட்டும் இவ்விரண்டு நாமாவளிகளும் முன்வைக்கப் பெற்று அம்பலத்தரசே மூன்றாவதாக வைக்கப்பெற்றுள்ளது. இறுக்கம் இரத்தினமுதலியார். வேட்டவலம் ஜமீன்தார் அப்பாசாமி பண்டாரியார் இவ்விருவரின் படிகளில் மட்டுமே இவ்விரண்டு நாமாவளிகள் காணப்பெறுவதாயும். கிடைத்த மற்றைப் படிகளில் இவை இல்லை என்றும், அவற்றில் அம்பலத்தரசே என்பதே தொடக்கம் என்றும் ஆ.பா. குறிக்கிறார். இப்பதிப்பில் இவ்விரு நாமாவளிகளும் தனியாக எண்ணிடர் பெற்றுத் தனிப்படுத்திக் காட்டப் பெற்றுள்ளன.

2258 மலைதரு மகளே மடமயி லே
மதிமுக அமுதே இளங்குயி லே. 3

2259 ஆனந்தக் கொடியே இளம்பிடி யே
அற்புதத் தேனே மலைமா னே. 4

2260 சிவசிவ சிவசிவ சின்மய தேஜா
சிவசுந் தரகுஞ் சிதநட ராஜா. 5

2261 படன விவேக பரம்பர வேதா
நடன சபேச சிதம்பர நாதா. 6

2262 அரிபிர மாதியர் தேடிய நாதா
அரகர சிவசிவ ஆடிய பாதா. 7

2263 அந்தண வங்கண அம்பர போகா
அம்பல நம்பர அம்பிகை பாகா. 8

2264 அம்பர விம்ப சிதம்பர நாதா
அஞ்சித ரஞ்சித குஞ்சித பாதா. 9

2265 தந்திர மந்திர யந்திர பாதா
சங்கர சங்கர சங்கர நாதா. 10

2266 கனக சிதம்பர கங்கர புரஹர
அனக பரம்பர சங்கர ஹரஹர. 11

2267 சகல கலாண்ட சராசர காரண
சகுண சிவாண்ட பராபர பூரண. 12

2268 இக்கரை கடந்திடில் அக்கரை யே
இருப்பது சிதம்பர சர்க்கரை யே. 13

2269 என்னுயிர் உடம்பொடு சித்தம தே
இனிப்பது நடராஜ புத்தமு தே. 14

2270 ஐயர் திருச்சபை ஆடக மே
ஆடுதல் ஆனந்த நாடக மே. 15

2271 உத்தர ஞான சிதம்பர மே
சித்திஎ லாந்தரும் அம்பர மே. 16

2272 அம்பல வாசிவ மாதே வா
வம்பல வாவிங்கு வாவா வா. 17

2273 நடராஜன் எல்லார்க்கும் நல்லவனே
நல்லஎ லாம்செய வல்லவ னே. 18

2274 ஆனந்த நாடகம் கண்டோ மே – பர
மானந்த போனகம் கொண்டோ மே. 19

2275 சகள உபகள நிட்கள நாதா
உகள சததள மங்கள பாதா. 20

2276 சந்தத மும்சிவ சங்கர பஜனம்
சங்கிதம் என்பது சற்சன வசனம். 21

2277 சங்கர சிவசிவ மாதே வா
எங்களை ஆட்கொள வாவா வா. 22

2278 அரகர சிவசிவ மாதே வா
அருளமு தம்தர வாவா வா. 23

2279 நடனசி காமணி நவமணி யே
திடனக மாமணி சிவமணி யே. 24

2280 நடமிடும் அம்பல நன்மணி யே
புடமிடு செம்பல பொன்மணி யே. 25

2281 உவட்டாது சித்திக்கும் உள்ளமு தே
தெவிட்டாது தித்திக்கும் தெள்ளமு தே. 26

2282 நடராஜ வள்ளலை நாடுத லே
நம்தொழி லாம்விளை யாடுத லே. 27

2283 அருட்பொது நடமிடு தாண்டவ னே
அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவ னே. 28

2284 நடராஜ மாணிக்கம் ஒன்றது வே
நண்ணுதல் ஆணிப்பொன் மன்றது வே. 29

2285 நடராஜ பலமது நம்பல மே
நடமாடு வதுதிரு அம்பல மே. 30

2286 நடராஜர் பாட்டே நறும்பாட்டு
ஞாலத்தார் பாட்டெல்லாம் வெறும்பாட்டு. 31

2287 சிதம்பரப் பாட்டே திருப்பாட்டு
ஜீவர்கள் பாட்டெல்லாம் தெருப்பாட்டு. 32

2288 அம்பலப் பாட்டே அருட்பாட்டு
அல்லாத பாட்டெல்லாம் மருட்பாட்டு. 33

2289 அம்பல வாணனை நாடின னே
அவனடி யாரொடும் கூடின னே. 34

2290 தம்பத மாம்புகழ் பாடின னே
தந்தன என்றுகூத் தாடின னே. 35

2291 நான்சொன்ன பாடலும் கேட்டா ரே
ஞான சிதம்பர நாட்டா ரே. 36

2292 இனித்துயர் படமாட்டேன் விட்டே னே
என்குரு மேல்ஆணை இட்டே னே. 37

2293 இனிப்பாடு படமாட்டேன் விட்டே னே
என்னப்பன் மேல்ஆணை இட்டே னே. 38

2294 சன்மார்க்கம் நன்மார்க்கம் நன்மார்க்கம்
சகமார்க்கம் துன்மார்க்கம் துன்மார்க்கம். 39

2295 நாதாந்த நாட்டுக்கு நாயக ரே
நடராஜா ரேசபா நாயக ரே. 40

2296 நான்சொல்லும் இதுகேளீர் சத்திய மே
நடராஜா எனில்வரும் நித்திய மே. 41

2297 நல்லோர் எல்லார்க்கும் சபாபதி யே
நல்வரம் ஈயும் தயாநிதி யே. 42

2298 நடராஜர் தம்நடம் நன்னட மே
நடம்புரி கின்றதும் என்னிட மே. 43

2299 சிவகாம வல்லிக்கு மாப்பிள்ளை யே
திருவாளன் நான்அவன் சீர்ப்பிள்ளை யே. 44

2300 சிவகாம வல்லியைச் சேர்ந்தவ னே
சித்தெல்லாம் செய்திடத் தேர்ந்தவ னே. 45

2301 இறவா வரம்தரு நற்சபை யே
எனமறை புகழ்வது சிற்சபை யே. 46

2302 என்இரு கண்ணுள் இருந்தவ னே
இறவா தருளும் மருந்தவ னே. 47

2303 சிற்சபை அப்பனை உற்றே னே
சித்திஎ லாம்செயப் பெற்றே னே. 48

2304 அம்பல வாணர்தம் அடியவ ரே
அருளர சாள்மணி முடியவ ரே. 49

2305 அருட்பெருஞ் ஜோதியைக் கண்டே னே
ஆனந்தத் தெள்ளமு துண்டே னே. 50

2306 இருட்பெரு மாயையை விண்டேனே
எல்லாம்செய் சித்தியைக் கொண்டேனே. 51

2307 கருணா நிதியே குணநிதி யே
கதிமா நிதியே கலாநிதி யே. 52

2308 தருணா பதியே சிவபதி யே
தனிமா பதியே சபாபதி யே. 53

2309 கருணாம் நிதியே சபாபதியே
கதிமா நிதியே பசுபதியே. 54

2310 சபாபதி பாதம் தபோப்ர சாதம்
தயாநிதி போதம் சதோதய வேதம். 55

2311 கருணாம் பரவர கரசிர பவபவ
அருணாம் பரதர ஹரஹர சிவசிவ. 56

2312 கனகா கரபுர ஹரசிர கரதர
கருணா கரபர சுரவர ஹரஹர. 57

2313 கனக சபாபதி பசுபதி நவபதி
அனக உமாபதி அதிபதி சிவபதி. 58

2314 வேதாந்த பராம்பர சமோதம
நாதாந்த நடம்பர ஜயஜய. 59

2315 ஏகாந்த சர்வேச சமோதம
யோகாந்த நடேச நமோநம. 60

2316 ஆதாம்பர ஆடக அதிசய
பாதாம்புஜ நாடக ஜயஜய. 61

2317 போதாந்த புரேச சிவாகம
நாதாந்த நடேச நமோநம. 62

2318 ஜால கோலகன காம்பர சாயக
கால காலவன காம்பர நாயக 63

2319 சதபரி சதவுப சதமத விதபவ
சிதபா கதபத சிவசிவ சிவசிவ 64

2320 அரகர வரசுப கரகர பவபவ
சிரபுரி கரபர சிவசிவ சிவசிவ 65

2321 உபல சிரதல சுபகண வங்கண
சுபல கரதல கணபண கங்கண. 66

2322 அபயவ ரதகர தலபுரி காரண
உபயப ரதபத பரபரி பூரண. 67

2323 அகரஉ கரசுப கரவர சினகர
தகரவ கரநவ புரசிர தினகர. 68

2324 வகரசி கரதின கரசசி கரபுர
மகரஅ கரவர புரஹர ஹரஹர. 69

2325 பரமமந் திரசக ளாகன கரணா
படனதந் திரநிக மாகம சரணா. 70

2326 அனந்தகோ டிகுண கரகர ஜொலிதா
அகண்டவே தசிர கரதர பலிதா. 71

2327 பரிபூரண ஞானசி தம்பர
பதிகாரண நாதப ரம்பர. 72

2328 சிவஞானப தாடக நாடக
சிவபோதப ரோகள கூடக. 73

2329 சகல லோகபர காரக வாரக
சபள யோகசரபூரக தாரக. 74

2330 சத்வ போதக தாரண தன்மய
சத்ய வேதக பூரண சின்மய. 75

2331 வரகே சாந்த மகோதய காரிய
பரபா சாந்த சுகோதய சூரிய. 76

2332 பளித தீபக சோபித பாதா
வளித ரூபக ஸ்தாபித நாதா. 77

2333 அனுர்த கோபகரு ணாம்பக நா தா
அமிர்த ரூபதரு ணாம்புஜ பா தா. 78

2334 அம்போ ருகபத அரஹர கங்கர
சம்போ சிவசிவ சிவசிவ சங்கர. 79

2335 சிதம்பிர காசா பரம்பிர கா சா
சிதம்ப ரேசா சுயம்பிர கா சா. 80

2336 அருட்பிர காசம் பரப்பிர காசம்
அகப்பிர காசம் சிவப்பிர காசம். 81

2337 நடப்பிர காசம் தவப்பிர காசம்
நவப்பிர காசம் சிவப்பிர காசம். 82

2338 நாத பரம்பர னே பர – நாத சிதம்பர னே
நாத திகம்பர னே தச – நாத சுதந்தர னே. 83

2339 ஞான நடத்துவ னே பர – ஞானி இடத்தவ னே
ஞான வரத்தவனே சிவ ஞான புரத்தவ னே. 84

2340 ஞான சபாபதி யே மறை – நாடு சதாகதி யே
தீன தயாநிதி யே பர – தேவி உமாபதி யே. 85

2341 புத்தம்தரும் போதா வித்தம்தரும் தாதா
நித்தம்தரும் பாதா சித்தம்திரும் பாதா. 86

திருச்சிற்றம்பலம்

## 135. போகம் சுகபோகம்

இராகம்–சங்கராபரணம்–இங்கிலிஷ்மெட்டு–ஆதிதாளம்

2342 போகம் சுகபோகம் சிவபோகம் அதுநித்தியம்
ஏகம் சிவம்ஏகம் சிவம்ஏகம் இதுசத்தியம். 1

2343 நலமங்கலம் உறும்அம்பல நடனம்அது நடனம்
பலநன்கருள் சிவசங்கர படனம்அது படனம். 2

## 136. சூதுமன்னும் இந்தையே

இராகம்–சங்கராபரணம்–இங்கிலிஷ்மெட்டு–ஆதிதாளம்

திருச்சிற்றம்பலம்

2344 சூதுமன்னும் இந்தையே சூடல் என்ன விந்தையே
கோதுவிண்ட சிந்தையே கோயில்கொண்ட தந்தையே. 1

2345 அன்புமுந்து சிந்தையே அம்பலங்கொள் விந்தையே
இன்பமென்பன் எந்தையே எந்தைதந்தை தந்தையே. 2

2346 ஞானசித்தி புரத்தனே நாதசத்தி பரத்தனே
வானம்உத்த தரத்தனே வாதவித்தை வரத்தனே. 3

2347 நீஎன்னப்பன் அல்லவா நினக்கும்இன்னஞ் சொல்லவா
தாயின்மிக்க நல்லவா சர்வசித்தி வல்லவா. 4

2348 பலத்தில்தன்னம் பலத்தில்பொன்னம் பலத்தில்துன்னும் நலத்தனே
பலத்தில்பன்னும் பரத்தில்துன்னும் பரத்தின்மன்னும் குலத்தனே. 5

2349 ஆயவாய நேயஞேய மாயஞாய வாதியே
சூதவாத பாதநாத சூதஜாத ஜோதியே. 6

2350 ஆதவாத வேதகீத வாதவாத வாதியே
தூயவாய காயதேய தோயமேய ஜோதியே. 7

2351 அங்கசங்க மங்கைபங்க ஆதிஆதி ஆதியே
துங்கபுங்க அங்கலிங்க ஜோதிஜோதி ஜோதியே. 8

2352 அத்தமுத்த அத்தமுத்த ஆதிஆதி ஆதியே
சுத்தசித்த சப்தநிர்த்த ஜோதிஜோதி ஜோதியே. 9

2353 அஞ்சல்அஞ்சல் என்றுவந்தென் நெஞ்சமர்ந்த குழகனே
வஞ்சநஞ்சம் உண்டகண்ட மன்றுள்நின்ற அழகனே. 10

2354 தொண்டர்கண்டு கண்டுமொண்டு கொண்டுள்உண்ட இன்பனே
அண்டர்அண்டம் உண்டவிண்டு தொண்டுமண்டும் அன்பனே. 11

2355 கந்ததொந்த பந்தசிந்து சிந்தவந்த காலமே
எந்தஎந்த சந்தமுந்து மந்தவந்த கோலமே. 12

2356 என்றும்என்றின் ஒன்றிமன்றுள் நன்றுநின்ற ஈசனே
ஒன்றும்ஒன்றும் ஒன்றும்ஒன்றும் ஒன்றதென்ற தேசனே. 13

2357 எட்டஎட்டி ஒட்டஒட்டும் இட்டதிட்ட கீர்த்தியே
அட்டவட்டம் நட்டமிட்ட சிட்டவட்ட மூர்த்தியே. 14

2358 சேர்இகார சாரவார சீர்அகார ஊரனே
ஓர்உகார தேரதீர வாரவார தூரனே. 15

2359 வெய்யநொய்ய நையநைய மெய்புகன்ற துய்யனே
ஐயர்ஐய நையும்வையம் உய்யநின்ற ஐயனே. 16

2360 பாசநாச பாபநாச பாததேச ஈசனே
வாசவாச தாசர்நேச வாசகாச பேசனே. 17

2361 உரியதுரிய பெரியவெளியில் ஒளியில்ஒளிசெய் நடனனே
பிரியஅரிய பிரியமுடைய பெரியர்இதய படனனே. 18

2362 அகிலபுவன உயிர்கள்தழைய அபயம்உதவும் அமலனே
அயனும்அரியும் அரனும்மகிழ அருளும்நடன விமலனே. 19

2363 அகரஉகர மகரவகர அமுதசிகர சரணமே
அபரசபர அமனசமன அமலநிமல சரணமே. 20

2364 தகரககன நடனகடன சகளவகள சரணமே
சகுணநிகுண சகமநிகம சகிதவிகித சரணமே. 21

2365 அனகவனஜ அமிதஅமிர்த அகலஅகில சரணமே
அதுலவனத அசுதவசல அநிலவனல சரணமே. 22

2366 தனககனக சபயஅபய சரதவரத சரணமே
சதுரசதர சகசசரித தருணசரண சரணமே. 23

2367 உளமும்உணர்வும் உயிரும்ஒளிர ஒளிரும்ஒருவ சரணமே
உருவின்உருவும் உருவுள் உருவும் உடைய தலைவ சரணமே. 24

2368 இளகும்இதய கமலம்அதனை இறைகொள்இறைவ சரணமே
இருமைஒருமை நலமும்அருளும் இனியசமுக சரணமே. 25

2369 அடியும்நடுவும் முடியும்அறிய அரியபெரிய சரணமே
அடியர்இதய வெளியில்நடனம் அதுசெய்அதிப சரணமே. 26

2370 ஒடிவில்கருணை அமுதம்உதவும் உபலவடிவ சரணமே
உலகமுழுதும் உறையநிறையும் உபயசரண சரணமே. 27

2371 அறிவுள்அறியும் அறிவைஅறிய அருளும்நிமல சரணமே
அவசம்உறுமெய் யடியர்இதயம் அமரும்அமல சரணமே. 28

2372 எறிவில்உலகில் உயிரைஉடலில் இணைசெய்இறைவ சரணமே
எனையும்ஒருவன் எனவுள்உணரும் எனதுதலைவ சரணமே. 29

2373 நினையுநினைவு கனியஇனிய நிறைவுதருக சரணமே
நினையும்எனையும் ஒருமைபுரியும் நெறியில்நிறுவு சரணமே. 30

2374 வனையுமதுர அமுதஉணவு மலியஉதவு சரணமே
மருவுசபையில் நடனவரத வருகவருக சரணமே. 31

2375 நினைக்கில்நெஞ்சம் இனிக்கும்என்ற நிருத்தமன்றில் ஒருத்தனே
நினைக்கும்அன்பர் நிலைக்கநின்று பொருத்துகின்ற கருத்தனே. 32

2376 மயங்கிநின்று கலங்கிநின்று மலங்கினேனை ஆண்டவா
வயங்கிநின்று துலங்குமன்றில் இலங்குஞான தாண்டவா. 33

2377 களங்கவாத கலங்கொள்சூதர் உளங்கொளாத பாதனே
களங்கிலாத உளங்கொள்வாருள் விளங்குஞான நாதனே. 34

2378 தடுத்தமலத்தைக் கெடுத்துநலத்தைக் கொடுத்தகருணைத் தந்தையே
தனித்தநிலத்தில் இனித்தகுலத்தில் குனித்தஅடிகொள் எந்தையே. 35

2379 எச்சநீட்டி விச்சைகாட்டி இச்சைஊட்டும் இன்பனே
அச்சம்ஓட்டி அச்சுநாட்டி வைச்சுள்ஆட்டும் அன்பனே. 36

2380 சபாசிவா மஹாசிவா சகாசிவா சிகாசிவா
சதாசிவா சதாசிவா சதாசிவா சதாசிவா. 37

2381 வாசிவா சதாசிவா மஹாசிவா தயாசிவா
வாசிவா சிவாசிவா சிவாசிவா சிவாசிவா. 38

திருச்சிற்றம்பலம்

## 137. நடுநாடி நடுநாடி

இராகம்–மோகனம்–ஆதிதாளம்

திருச்சிற்றம்பலம்

2382 நடுநாடி நடுநாடி நடமாடு பதியே
நடராஜ நடராஜ நடராஜ நிதியே. 1

2383 நடுநாடி யொடுகூடி நடமாடும் உருவே
நடராஜ நடராஜ நடராஜ குருவே. 2

2384 நடுநாடி இடைநாடி நடமாடும் நலமே
நடராஜ நடராஜ நடராஜ பலமே. 3

# 138. தங்குறுவம்பு

இராகம்—பியாக்—ஆதிதாளம்
திருச்சிற்றம்பலம்

2385 தம்குறுவம்பு மங்கநிரம்பு சங்கம்இயம்பும் நம்கொழுகொம்பு
சங்கரசம்பு சங்காசம்ப சங்காசம்பு சங்கரசம்பு. 1

2386 சந்தம்இயன்று அந்தணர்நன்று சந்ததநின்று வந்தனம்என்று
சந்திசெய்மன்று மந்திரம்ஒன்று சங்காசம்பு சங்கரசம்பு. 2

2387 நனந்தலைவீதி நடந்திடுசாதி நலம்கொளும்ஆதி நடம்புரிநீதி
தினங்கலைஓதி சிவம்தரும்ஓதி சிதம்பரஜோதி சிதம்பரஜோதி. 3

2388 நகப்பெருஞ்ஜோதி சுகப்பெருஞ்ஜோதி
நவப்பெருஞ்ஜோதி சிவப்பெருஞ்ஜோதி
அகப்பெருஞ்ஜோதி நடப்பெருஞ்ஜோதி
அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி. 4

2389 உமைக்கொருபதி கொடுத்தருள்நீதி உவப்புறுவேதி நவப்பெருவாதி
அமைந்திடுபூதி அகத்திடும்ஆதி அருட்சிவஜோதி அருட்சிவஜோதி. 5

2390 அகரசபாபதி சிகரசபாபதி அனகசபாபதி கனகசபாபதி
மகரசபாபதி உகரசபாபதி வரதசபாபதி சரதசபாபதி. 6

2391 அமலசபாபதி அபயசபாபதி அமுதசபாபதி அகிலசபாபதி
நிமலசபாபதி நிபுணசபாபதி நிலயசபாபதி நிபிடசபாபதி. 7

2392 பரநடம்சிவ சிதம்பரடமே பதிநடம்சிவ சபாபதிநடமே
திருநடனம்பர குருநடமே சிவநடம்அம்பர நவநடமே. 8

2393 அம்பலத்தொருநடம் உருநடமே அருநடம் ஒருநடம் திருநடமே
எம்பலத்தொருநடம் பெருநடமே இதன்பரத்திடுநடம் குருநடம். 9

வேறு

2394 அஞ்சசோடஞ்சவை ஏலாதே அங்கோடிங்கெனல் ஆகாதே
அந்தோவெந்துயர் சேராதே அஞ்சோகஞ்சுகம் ஓவாதே
தஞ்சோபம்கொலை சாராதே சந்தோடம்சிவ மாம்ஈதே
சம்போசங்கர மாதேவா சம்போசங்கர மாதேவா. 10

2373 நினையுநினைவு கனியஇனிய நிறைவுதருக சரணமே
நினையும்எனையும் ஒருமைபுரியும் நெறியில்நிறுவு சரணமே. 30

2374 வனையுமதுர அமுதஉணவு மலியஉதவு சரணமே
மருவுசபையில் நடனவரத வருகவருக சரணமே. 31

2375 நினைக்கில்நெஞ்சம் இனிக்கும்என்ற நிருத்தமன்றில் ஒருத்தனே
நினைக்கும்அன்பர் நிலைக்கநின்று பொருத்துகின்ற கருத்தனே. 32

2376 மயங்கிநின்று கலங்கிநின்று மலங்கினேனை ஆண்டவா
வயங்கிநின்று துலங்குமன்றில் இலங்குஞான தாண்டவா. 33

2377 களங்கவாத கலங்கொள்சூதர் உளங்கொளாத பாதனே
களங்கிலாத உளங்கொள்வாருள் விளங்குஞான நாதனே. 34

2378 தடுத்தமலத்தைக் கெடுத்துநலத்தைக் கொடுத்தகருணைத் தந்தையே
தனித்தநிலத்தில் இனித்தகுலத்தில் குனித்தஅடிகொள் எந்தையே. 35

2379 எச்சநீட்டி விச்சைகாட்டி இச்சைஊட்டும் இன்பனே
அச்சம்ஓட்டி அச்சுநாட்டி வைச்சுள்ஆட்டும் அன்பனே. 36

2380 சபாசிவா மஹாசிவா சகாசிவா சிகாசிவா
சதாசிவா சதாசிவா சதாசிவா சதாசிவா. 37

2381 வாசிவா சதாசிவா மஹாசிவா தயாசிவா
வாசிவா சிவாசிவா சிவாசிவா சிவாசிவா. 38

திருச்சிற்றம்பலம்

## 137. நடுநாடி நடுநாடி

இராகம்—மோகனம்—ஆதிதாளம்

திருச்சிற்றம்பலம்

2382 நடுநாடி நடுநாடி நடமாடு பதியே
நடராஜ நடராஜ நடராஜ நிதியே. 1

2383 நடுநாடி யொடுகூடி நடமாடும் உருவே
நடராஜ நடராஜ நடராஜ குருவே. 2

2384 நடுநாடி இடைநாடி நடமாடும் நலமே
நடராஜ நடராஜ நடராஜ பலமே. 3

## 138. தங்குறுவம்பு

இராகம்–பியாக்–ஆதிதாளம்
திருச்சிற்றம்பலம்

2385 தம்குறுவம்பு மங்கநிரம்பு சங்கம்இயம்பும் நம்கொழுகொம்பு
சங்கரசம்பு சங்காசம்ப சங்காசம்பு சங்கரசம்பு. 1

2386 சந்தம்இயன்று அந்தணர்நன்று சந்ததநின்று வந்தனம்என்று
சந்திசெய்மன்று மந்திரம்ஒன்று சங்காசம்பு சங்கரசம்பு. 2

2387 நனந்தலைவீதி நடந்திடுசாதி நலம்கொளும்ஆதி நடம்புரிநீதி
தினங்கலைஓதி சிவம்தரும்ஓதி சிதம்பரஜோதி சிதம்பரஜோதி. 3

2388 நகப்பெருஞ்ஜோதி சுகப்பெருஞ்ஜோதி
நவப்பெருஞ்ஜோதி சிவப்பெருஞ்ஜோதி
அகப்பெருஞ்ஜோதி நடப்பெருஞ்ஜோதி
அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி. 4

2389 உமைக்கொருபதி கொடுத்தருள்நீதி உவப்புறுவேதி நவப்பெருவாதி
அமைந்திடுபூதி அகத்திடும்ஆதி அருட்சிவஜோதி அருட்சிவஜோதி.5

2390 அகரசபாபதி சிகரசபாபதி அனகசபாபதி கனகசபாபதி
மகரசபாபதி உகரசபாபதி வரதசபாபதி சரதசபாபதி. 6

2391 அமலசபாபதி அபயசபாபதி அமுதசபாபதி அகிலசபாபதி
நிமலசபாபதி நிபுணசபாபதி நிலயசபாபதி நிபிடசபாபதி. 7

2392 பரநடம்சிவ சிதம்பரடமே பதிநடம்சிவ சபாபதிநடமே
திருநடனம்பர குருநடமே சிவநடம்அம்பர நவநடமே. 8

2393 அம்பலத்தொருநடம் உருநடமே அருநடம் ஒருநடம் திருநடமே
எம்பலத்தொருநடம் பெருநடமே இதன்பரத்திடுநடம் குருநடம். 9

வேறு

2394 அஞ்சசோடஞ்சவை ஏலாதே அங்கோடிங்கெனல் ஆகாதே
அந்தோவெந்துயர் சேராதே அஞ்சோகஞ்சுகம் ஓவாதே
தஞ்சோபம்கொலை சாராதே சந்தோடம்சிவ மாம்ஈதே
சம்போசங்கர மாதேவா சம்போசங்கர மாதேவா. 10

வேறு

2395 எந்தாய் என்றிடில் இந்தா நம்பதம் என்றீ யும்பர மன்றா டும்பத
என்றோ டிந்தன நன்றா மங்கண வெங்கோ மங்கள வெஞ்சா நெஞ்சுக
சந்தே கங்கெட நந்தா மந்திர சந்தோ டம்பெற வந்தா ளந்தண
சம்போ சங்கர சம்போ சங்கர சம்போ சங்கர சம்போ சங்கர. 11

2396 நஞ்சோ என்றிடு நங்கோ பங்கெட நன்றே தந்தனை நந்தா மந்தண
நம்பா நெஞ்சில் நிரம்பா நம்பர நம்ப நம்பதி யம்பா தம்பதி
தஞ்சோ வென்றவர் தஞ்சோ பந்தெறு தந்தா வந்தன நுந்தாள் தந்திடு
சம்போ சங்கர சம்போ சங்கர சம்போ சங்கர சம்போ சங்கர. 12

திருச்சிற்றம்பலம்

## 139. பொதுநிலை அருள்வது

இராகம்–ஹிந்துஸ்தான்–பியாக்–ஆதிதாளம்–

திருச்சிற்றம்பலம்

2397 பொதுநிலை அருள்வது பொதுவினில் நிறைவது
பொதுநலம் உடையது பொதுநடம் இடுவது
அதுபரம் அதுபதி அதுபொரள் அதுசிவம்
அரஅர அரஅர அரஅர அரஅர. 1

2398 நவநிலை தருவது நவவடி வுறுவது
நவவெளி நடுவது நவநவ நவமது
சிவமெனும் அதபதம் அதுகதி அதுபொருள்
சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ. 2

2399 சந்திர தரசிர சுந்தர சுரவர
தந்திர நவபத மந்திர புரநட
சங்கர சிவசிவ சங்கர சிவசிவ
சங்கர சிவசிவ சங்கர சிவவ. 3

திருச்சிற்றம்பலம்

## 140. வானசிற்கன

இராகம்–சங்கராபரணம்–ஆதி தாளம்

திருச்சிற்றம்பலம்

2400 வானசிற்கன மந்திரதந்திர வாதசிற்குண மந்தணவந்தண
வாரசற்சன வந்திதசிந்தித வாமஅற்புத மங்கலைமங்கல
ஞானசிற்சுக சங்கரகங்கர ஞாயசற்குண வங்கண அங்கண
நாதசிற்பர வம்பரநம்பர நாததற்பர விம்பசிதம்பர. 1

2401 பாரதத்துவ பஞ்சகரஞ்சக பாதசத்துவ சங்கஜபங்கஜ
பாலநித்திய வம்பகநம்பக பாசபுத்தக பண்டிதகண்டித
நாரவித்தக சங்கிதவிங்கித நாடகத்தவ நம்பதிநங்கதி
நாதசிற்பர நம்பர அம்பர நாததற்பர விம்பசிதம்பர. 2

2402 நாத பாலசு லோசன வர்த்தன
ஜாத ஜாலவி மோசன நிர்த்தன 3

திருச்சிற்றம்பலம்

## 141. ஓத அடங்காது

சிந்து

இராகம்—மாஞ்சி—ஆதிதாளம்

திருச்சிற்றம்பலம்

2403 ஓதஅடங் காதுமடங் காதுதொடங் காது
ஓகைஒடுங் காதுமடங் காதுநடுங் காது
சூதமலங் காதுவிலங் காதுகலங் காது
ஜோதிபரஞ் ஜோதிசுயஞ் ஜோதிபெருஞ் ஜோதி. 1

2404 ஏதமுயங் காதுகயங் காதுமயங் காது
ஏறிஇறங் காதுஉறங் காதுகறங் காது
சூதமிணங் காதுபிணங் காதுவணங் காது
ஜோதிபரஞ் ஜோதிசுயஞ் ஜோதிபெருஞ் ஜோதி. 2

திருச்சிற்றம்பலம்

## 142. விரைசேர் சடையாய்

இராகம்—தீரசங்கராபரணம்—ஆதி தாளம்

திருச்சிற்றம்பலம்

2405 விரைசேர் சடையாய் விடையாய் உடையாய்
விகிர்தா விபவா விமலா அமலா
வெஞ்சேர் பஞ்சார் நஞ்சார் கண்டா விம்பசி தம்பர னே. 1

2406 அரைசே குருவே அமுதே சிவமே
அணியே மணியே அருளே பொருளே
அந்தோ வந்தாள் எந்தாய்எந்தாய் அம்பல நம்பதி யே. 2

2407 உருவே உயிரே உணர்வே உறவே
உரையே பொருளே ஒளியே வெளியே
ஒன்றே என்றே நன்றே தந்தாய் அம்பர நம்பர னே. 3

2408 அருவே திருவே அறிவே செறிவே
அதுவே இதுவே அடியே முடியே
அந்தோ வந்தாள் எந்தாய் எந்தாய் அம்பல நம்பதியே. 4

திருச்சிற்றம்பலம்

## 143. பசியாத அமுதே

இராகம்—ஆனந்தபைரவி—ஆதிதாளம்

திருச்சிற்றம்பலம்

2409 பசியாத அமுதே பகையாத பதியே
பகராத நிலையே பறையாத சுகமே
நசியாத பொருளே நலியாத உறவே
நடராஜ மணியே நடராஜ மணியே. 1

2410 புரையாத மணியே புகலாத நிலையே
புகையாத கனலே புகையாத பொருளே
நரையாத வரமே நடியாத நடமே
நடராஜ நிதியே நடராஜ நிதியே. 2

2411 சிவஞான நிலையே சிவயோக நிறைவே
சிவபோக உருவே சிவ்மான உணர்வே
நவநீதி மதியே நவநாத கதியே
நடராஜ பதியே நடராஜ பதியே. 3

2412 தவயோக பலமே சிவஞான நிலமே
தலையேறும் அணியே விரையேறு மணியே
நலவார நடமே சுவகார புடமே
நடராஜ பரமே நடராஜ பரமே. 4

2413 துதிவேத உறவே சுகபோத நறவே
துணிதீரும் இடமே தனிஞான நடமே
நதியார நிதியே அதிகார பதியே
நடராஜ குருவே நடராஜ குருவே. 5

2414 வயமான வரமே வியமான பரமே
மனமோன நிலையே கனஞான மலையே
நயமான உரையே நடுவா வரையே
நடராஜ துரையே நடராஜ துரையே. 6

49 உச்சியிலே பிச்சைஎடுத் துண்பதுவோ
பெரிதெளியேற் கோவா தோடிக்
கச்சியிலே பிச்சைகொண்டு காசியிலே
நீராடிக் கடிது போகிக்
கொச்சியிலே செபமுடித்துக் கொங்கணத்தி
லேபுசித்துக் கொள்ளென் றாலும்
மெச்சிஉளே மிகமகிழ்ந்து செய்வேன்என்
றனைஐயா விட்டி டேலே. 44

50 புல்லமுதே நல்லமுது புரைக்குடிலே
புனைமாடம் புடைக்கும் பாறைக்
கல்லணையே மெல்லணைநாள் கழிந்தபழங்
கந்தையே கலைஎன் றாலும்
அல்லலுறேன் அரசேநின் சொல்லமுதுண்
டருந்தவமா டத்தே வைகி
ஒல்லுமனோ திடஅணைகொண் டருட்போர்வை
போர்த்துநலம் உடுக்கின் மாதோ. 45

51 சைவநீ றணிவிளங்கி நகைதுளும்பி
உபசாந்தம் ததும்பிப் பொங்கித்
தெய்வநீ டருட்கருணை நிறைந்துவழிந்
தழகொழுகிச் செம்பொற் கஞ்சப்
பொய்கைவாய் மலர்ந்தசெழும் போதனைய
நின்முகத்தின் பொலிவு நோக்கும்
செய்கையேன் உலகுறுபுன் சுகம்பொசித்தல்
மிகையன்றோ தேவ தேவே. 46

52 எவ்வகைநின் திருவுளப்பாங் கிருப்பதெளி
யேன்அளவில் எந்தாய் எந்தாய்
அவ்வகைநின் றிடச்சிறிதும் அஞ்சேன்என்
றன்னைவிடேல் ஆள்க என்றே
இவ்வகையில் பலபகர்ந்து விழுந்திறைஞ்சி
எழுந்திரா திருகண் ணீரால்
செவ்வகையில் குருநாதன் திருவடிக்கீழ்
நிறையாது செய்தான் மன்னோ. 47

53 தெருளுறும்அவ் வாச்சிரமத் திருந்துதுற
வறம்காக்கும் செல்வர் எல்லாம்
அருளுறுமெய்ச் சிவகுருவின் அடிவணங்கிச்
சிறியோமை அடர்ந்த பாச

மருளுறுவன் கடல்கடத்தி வாழ்வித்த
குணக்கலமே மணியே இந்த
இருளுறும்ஓர் சிறுவனையும் காத்தருள
வேண்டுமென இரந்தார் ஐயன். 48

54 மற்றவனை எழுகஎனக் கருணைபுரிந்
தமலமுகம் மலர்ந்து நோக்கிப்
புற்றரவம் அரைக்கசைத்த ஒற்றிநகர்ப்
பெருமானைப் போது மூன்றும்
நற்றகைஅன் புடன்தரிசித் தவன்கோயிற்
பணியாற்றி நாளும் நம்பால்
கற்றவர்தம் சொல்வழியிற் கலைபயின்று
நெறிநிற்கக் கடவாய் என்று. 49

55 தனிமலர்வாய் மலர்ந்தருளிப் பின்னர்அவண்
மாணாக்கர் தம்மை நோக்கிப்
புனிதநெறி யீர் இவனைப் புதியன்எனக்
கருதாமல் புரிந்து நாளும்
கனிவுறஊண் டிவன்அகத்தில் கல்லாமை
எனும்இருளைக் கடியும் வண்ணம்
இனியகலை விளக்கிடுவீர் என்றான்சஞ்
சலன்அதுகேட் டின்பம் எய்தா. 50

56 அடியனேன் உய்ந்தனன்நின் அருள்நோக்கம்
பெறற்கேது வாய தூய
நெடியமா தவம்எதுசெய் திருந்தேன்என்
றகம்குளிர்ந்து நெஞ்சந் தேறி
முடியினால் பன்முறைதாழ்ந் துடம்பொடுக்கித்
தூசொடுக்கி முறையால் பேசும்
படியின்வாய்ப் பொத்திஎதிர் நின்றான்பின்
குருநாதன் பணித்த வாறே. 51

57 வேதமுதல் கலைஅனைத்தும் விதிப்படிகற்
றுணர்ந்தறிவால் மேலோர் ஆகிப்
போதமனச் செறிவுடைய மாணாக்கர்
சஞ்சலனைப் புரிந்து நோக்கி
மூதறிவன் தேசிகன்தன் திருவாக்கின்
படிஇன்று முதல்ஓர் கன்னற்
போதுகலை பயின்றுமற்றைப் போதெலாம்
சிவபணியே புரிதி என்றார். 52

58 என்றஅருட் சிதம்பரமா முனிவர்அவன்
தனையருகே இருத்தி அன்பால்
ஒன்றியவெண் ணீறணிந்து தூலஎழுத்
தைந்துணர்த்தி உடையான் கோயில்
சென்றுதொழும் நெறியனைத்தும் விளக்கிஅருட்
சிவபணியும் தேற்றி உள்ள
மன்றஅவன் பருவமறிந் ததற்கியைந்த
கலைபயிற்றி மகிழ்வித் தாரால். 53

## 2. முயற்சிப் படலம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்
திருச்சிற்றம்பலம்

59 அவ்வண்ணம் சஞ்சலன்தான் புரிந்தியற்றும்
முயற்சியெலாம் அளவிட் டோதச்
செவ்வண்ணம் பழுத்தஒற்றிச் சிவக்கொழுந்தின்
திருவருளைச் சேர்ந்தோர்க் கன்றி
இவ்வண்ணம் எனப்பகர்தல் பிறர்க்கரிதே
ஆயினும்அவ் விறைவன் தாளை
வெவ்வண்ணச் சிறியேன்உள் ளமர்த்திஒரு
சிறிதறிய விளம்பு வேனால். 1

60 மேலையிலே படுத்திருந்த வெஞ்சுடரோன்
குணபாலின் விழித்துப் பூவோர்
வேலையிலே முயலுறக்கீழ் வேலையிலே
எழுவதற்கு மேவு மாதி
காலையிலே எழுந்தேகிக் கங்கையிலே
மிக்கதெனக் கருதி மேலோர்
ஓலையிலே பொறித்தநந்தி ஓடையிலே
தெய்வநன்னீர் ஓடி ஆடி. 2

61 வெண்ணிலவு ததும்புதிரு வெண்ணீறைந்
தெழுத்தோதி மிகவும் பூசி
உண்ணிலவு சிவகுருவின் அடித்துணையும்
திருவொற்றி உவந்து மேவும்
கண்ணிலவு நுதற்கரும்பின் கழற்பதமும்
அன்பினொடு கருதிச் சென்றே
எண்ணிலவு குருபரன்தன் திருமுன்அடைந்
தஞ்சலிசெய் திறைஞ்சி மன்னோ. 3

62 முன்னறியான் பின்னறியான் முழுமுடன்
என்றென்னை முனியா தாண்ட
நின்னருளை என்னனயான் நிகழ்த்துறுவேன்
பெருங்கருணை நிறைவே தூய
நன்னெறியே நடக்கஅருட் போதமெனும்
செங்கோலை நடத்தா நின்ற
மன்னவனே சிவகுருவாம் வள்ளலே
நின்துணைப்பொன் மலர்த்தாள் போற்றி. 4

63 அருந்தவரும் உணவின்இயல் எதுவென்றால்
இதுஎனவும் அறிய நீநின்று
இருந்ததிசை எதுவென்றால் இதுஎனச்சுட்
டவும்தெரியா திருந்த என்னைத்
திருந்தஅருட் கடைநோக்கஞ் செய்தளித்த
பெருங்கருணைச் செல்வ மேநன்
மருந்தமுதம் அனையஅருட் சிவகுருவே
போற்றிஎன வழுத்திப் பின்னர். 5

64 ஆங்குவிடை கொண்டுகுரு அருள்நோக்கால்
சிவயோக மாதி நண்ணி
ஓங்குதிருக் கூட்டத்தைத் தனித்தனிநின்
றிறைஞ்சிஎனை உவக்கும் வண்ணம்
தீங்ககற்றும் சிவகுருவின் திருவுளத்தை
நாயேன்மேல் திருப்பி இன்பம்
வாங்கிஎனக் களித்தஅருண் மாதவரே
நும்முடைய மலர்த்தாள் போற்றி. 6

65 குருவெல்லை கடவாத குணக்குன்றம்
அனையீரே கோதில் வாய்மை
மருவெல்லை நெறிநின்ற மனத்தீரே
போற்றிஎன வழுத்திப் பின்னர்ப்
பொருவெல்லை அகன்றோங்கும் அன்பினொடும்
அவண்நின்று போந்தவ் வொற்றித்
திருவெல்லை தனைமகிழ்வில் கருவெல்லை
கடக்கவலம் செய்து மாதோ. 7

66 தொழுந்தகைய முனிவரும் கரரும்மிகத்
தொழுதேத்தத் துலங்கும் திங்கட்
கொழுந்தசையச் சடைஅசையக் கூத்தாடிக்
கொண்டேஎம் கோமான் நாளும்

எழுந்தருளும் பெருஞ்செல்வத் திருமாட
வீதிதனை இறைஞ்சி ஏத்தி
அழுந்தியசற் பத்தியுடன் மூன்றுமுறை
வலஞ்செய்தங் கதற்குப் பின்னர். 8

67 உளந்தெளிந்து விளங்குகின்ற உத்தமர்செய்
தவமேபோல் ஓங்கி வானம்
அளந்ததிருக் கோபுரம்கண் டஞ்சலிசெய்
திறைஞ்சிமுகி லாதி சூடி
இளங்கதிர்வெண் திங்கள்அணி எம்பெருமான்
சடைமுடிபோல் இலங்கும் தூய
வளங்கெழுமோர் திருமதிலை ஐந்துமுறை
வலமாக வந்து மாதோ. 9

68 உட்புகுந்து திருவாயல்இடைஓங்கும்
விடைக்கொடியை உவந்து நோக்கிக்
கட்புனலில் குளித்திரண்டு கைகுளிரத்
தொழுதிறைஞ்சிக் கருணை செய்யும்
ஒட்புடைய நம்பெருமான் மாளிகையை
வலம்ஏழின் உவந்து செய்து
நட்புடைய மனங்கசிய ஐந்தெழுத்துள்
நினைந்துமெல்ல நடந்து மாதோ. 10

69 அம்பொடித்துப் பகைதுரக்கும் கயமுகனைக்
கருணையினால் ஆளும் வண்ணம்
கொம்பொடித்து வீசிஅவன் கோளொடித்துக்
கோலொடித்துக் கோதில் விண்ணோர்
வம்பொடித்து வாழ்வித்த ஆனைமுகப்
பெருமானை வணங்கித் தன்தே
கம்பொடித்துக் கைகுவித்துக் கருத்துருகிக்
கண்களில்நீர் காணநின்றே. 11

70 தடைஉடைக்கும் தனிமுதலே தண்ணமுதே
எங்கள்பெருந் தகையே ஓங்கி
மடைஉடைக்கும் பெருங்கருணை மதமலையே
ஆனந்த மலையே உள்ளத்
திடைஉடைக்கும் துயர்நீக்கி இன்பளிக்கும்
ஐந்துகரத் திறையே மாயைக்
கடைஉடைக்கும் கழற்புனைதாட் கணபதியே
போற்றிஎனக் கனிந்து மன்னோ. 12

71 திறம்பழுத்த அருணந்தி தேவர்அடி
வணங்கிஅருட் சிவத்தின் செய்ய
நிறம்பழுத்த மலரடியை மால்முதலோர்
அழுக்காறு நிரம்ப மேற்கொண்
டறம்பழுத்த விடைஉருவத் தண்ணலே
எனப்பரவி அனுக்ஞை பெற்று
மறம்பழுத்தார்க் கரியதிரு விமானத்தை
அனந்தமுறை வலஞ்செய் தேத்தி. 13

72 வன்னிதியை மருவாத மாதவரும்
மால்அயனும் வணங்கிப் போற்றும்
சந்நிதியைச் சார்ந்துவிழி யானந்த
நீர்வெள்ளந் ததும்பப் பல்கால்
நன்னிதிபெற் றிடப்பணிந்து கரங்குவித்துப்
படம்பக்க நாதன் என்னும்
செந்நிதியிற் பரஞ்சுடரைப் பொன்னிதிகண்
டவன்போல்கண் செழிக்கக் கண்டு. 14

73 உடல்முழுதும் புளகம்எழ உளமுழுதும்
உருக்கம்எழ உவந்தா னந்தக்
கடல்முழுதும் கண்கள்எழக் கரசரணங்
கம்பமெழக் கருத்தி னோடு
மடல்முழுதும் எழமலர்ந்த மலரின்முக
மகிழ்ச்சிஎழ மலிந்த பாசத்
திடல்முழுதும் அகன்றன்பே வடிவாக
நின்றுதுதி செய்வான் மாதோ. 15

74 உடையானே எவ்வுயிர்க்கும் ஒருமுதலே
இளம்பிறைகொண் டோங்கும் கங்கைச்
சடையானே அன்பருளத் தாமரையில்
அமர்ந்தபெருந் தகையே வெள்ளை
விடையானே மறைமுடிபின் விளங்கியமெய்ப்
பொருளேமெய் விளங்கார் தம்மை
அடையானே திருவொற்றி ஆலயத்தெம்
அரசேநின் னடிகள் போற்றி. 16

75 கலைமகளும் திருமகளும் கழுத்தணிந்த
மங்கலநாண் கழற்றா வண்ணம்
அலைகடலின் எழுவிடத்தை அடக்கியருள்
மணிமிடற்றெம் அமுதே தெய்வ

மலைமகளை ஒருபுறம்வைத் தலைமகளை
முடியிட்ட மணியே மேருச்
சிலைவளைத்துப் புரம்எரித்த சிறுநகைஎம்
பெருமான்நின் திருத்தாள் போற்றி. 17

76 மறைதேட அயன்தேட மால்தேட
அன்பர்உள மலரி னுள்ளே
இறையேனும் பிரியாமல் இருந்தருளும்
பெருவாழ்வே இறையே என்றும்
குறையாத குளிர்மதியே கோவாத
ஒளிமணியே குணப்பொற் குன்றே
பொறையாளர் வழுத்தும்ஒற்றிப் பூங்கோயில்*
பெருமானே போற்றி போற்றி. 18

77 எனப்பெரிதும் துதித்திறைஞ்சி ஆடுகின்ற
பெருமான்முன் எய்தித் தூக்கும்
வனப்புடைய மலர்ப்பதமும் மாயைதனை
மிதித்தூன்றும் மலர்ப்பொற் றாளும்
மனப்பருவ மலர்மலரக் கண்குளிரக்
கண்டுமிக வணங்கிப் பல்கால்
இனப்பெரியார்க் கின்பருளும் கூத்துடைய
மாமணியே இன்ப வாழ்வே. 19

78 காரணமுக் கண்கொளும்செங் கரும்பேசெங்
கனியேஎன் கண்ணே மேலை
ஆரணத்துட் பொருளாகி அனைத்துமாய்
யாதொன்றும் அல்லா தாகிப்
பூரணசின் மயவெளியில் சச்சிதா
னந்தநடம் புரியுந் தேவே
ஏரணவு நடராயப் பெருமானே**
எம்மானே என்று வாழ்த்தி.+ 20

---

* பூங்கோயில் – ஒற்றியூர்க் கோயிலுக்குப் பூங்கோயில் என்று பெயர். திருவாரூர்க் கோயிலுக்கும் பெயர்.

** பெம்மானே – பொ.சு., பி. இரா., ச.மு.க.

\+ வள்ளற் பெருமானது தொடக்ககாலத் தனிப்பாடல்கள் சிற்சில கொண்ட ஒரு சுவடியில் ஓர் ஏட்டில் இந்தப்பாட்டு மட்டும் பின்வருமாறு காணப்படுவதாக ஆ.பா. குறிப்பிடுகிறார்.
பூரணசின் மயவெளியிற் சச்சிதா நந்தநடம் புரியுந் தேவே
காரணமுக் கண்கொள்ளும்செங் கரும்பேஎன் கண்ணேமெய்க் கடவு ளேநால்
ஆரணமும் கடந்தப்பால் அனைத்துமாய் யாதொன்றும் அல்லா தாகி
ஏரரணவு நடராஜப் பெருமானே எம்மானே என்று போற்றி

79 சடையாடச் சடைமீதிற் சலமகளும்
இளமதியும் ததும்பக் கொன்றைத்
தொடையாடக் கருணைவிழிக் கடைதுளும்பப்
புன்னகைஉள் துலங்க வெள்ளைக்
கொடையாட இமயமடக் கொடியாடத்
தனிநெடுவேற் குழந்தை மேவி
இடையாடப் பவனிவரும் எம்பெருமான்
தியாகன்எதிர் இறைஞ்சி நின்று. 21

80 இருந்தேஎன் உளத்திலங்கும் செழுஞ்சுடரே
ஓவாத இன்ப மேயா
வருந்தேறா நிலைநின்ற வான்பொருளே
பவப்பிணியை மாற்றும் தெய்வ
மருந்தேஎன் கண்ணேகண் மணியேசெம்
மணியேஎன் வாழ்வே எங்கள்
பெருந்தேவே தருந்தியாகப் பெருமானே
கடவுள்தம் பிரானே போற்றி. 22

81 என்றுதுதித் தருள்வடிவிற் கல்லாலின்
அடியமர்ந்த இறைவன் முன்னின்
றொன்றுமனத் தன்புடன்கீழ் விழுந்துபணிந்
தெழுந்திருகை உச்சி கூப்பி
நன்றுணர்ந்த நால்வருக்கன் றருள்மொழிந்த
குருமணியே நாயி னேனை
இன்றுமகிழ்ந் தாட்கொண்ட சிவகுருவே
சற்குருவே என்று வாழ்த்தி. 23

82 மயிலேறும் பெருமான் முன் இறைஞ்சிமலர்க்
கரங்கூப்பி வணங்கி நின்றே
அயிலேறும் கதிர்வேற்கை ஐயாஎன்
அப்பாஎன் அரசே அன்பர்
கையிலேறும் கனியேமுக் கண்ஏறு
பெற்றஇளங் காளாய் நீலக்
குயிலேறு மொழிக்கடவுட் குஞ்சரந்தோய்
களிறேஎன் குருவே போற்றி. 24

83 ஓடுகின்ற சிறுவர்களோ டுடன்கூடி
விளையாட்டே உவந்து நாளும்
ஆடுகின்ற பருவத்தே அடியேனுள்
அமர்ந்தருளி அன்பால் நின்னை

நாடுகின்ற வகைசிறிதே அளித்தீண்டு
குருவாகி நலந்தந் துள்கிப்
பாடுகின்ற வகைஅளித்த பரகுருவே 25
போற்றிஎனப் பரவி மன்னோ*.

84 பன்முறைநாத் தழும்பேறத் துதித்துநெடுங்
கடல்முழுதும் பருகிக் கந்நாள்
நன்முறைசெய் மணக்கோலங் காட்டியருள்
பெருமான்முன் நண்ணி நின்று
தொன்முறைமா றாமல் அருள் சுந்தரிசேர்
கல்யாண சுந்த ரர்முன்
சொன்முறைசேர் சுந்தரன்தன் தோழாஎன் 26
றகங்குளிர்ந்து துதித்து வாழ்த்தி.

85 மான்மகனை நான்முகனா வைத்தவன்றன்
சிரநகத்தால் வகிர்ந்து வாங்கித்
தேன்மலர்ப்பொற் கரத்தேந்தும் காபாலி
முன்பணிந்து திருமால் வேதன்
வான்மகனா தியர்தம்மை வருத்தியஅந்
தகன்செருக்கு மாளச் சூலத்
தூன்மலர நுழைத்தேந்தும் வயிரவநிற் 27
போற்றிஎன உவந்து வாழ்த்தி.

86 நிலையாய்நின் றுயர்ந்தவர்கட் கருள்புரியும்
பரம்பரையை நிமலை தன்னைத்
தலையால்மெய் யுறவணங்கி உலகமெலாம்
அளித்தபெருந் தாயே மேருச்
சிலையான்தன் இடத்தமர்ந்த தெள்ளமுதே
ஆனந்தத் தேனே மானே
மலையான்தன் ஒருமகளே வடிவுடைய 28
இளங்குயிலே மயிலே போற்றி.

---

* இப்பாடல் பின்வருமாறுசில பாடபேதங்களுடன் குருட்டாட்டம் எழுதியுள்ள ஏடுகளுள் ஒன்றன் ஒதுக்கிடங்களில் பெருமானாரால் எழுதப்பட்டுள்ளதாக ஆ.பா. குறிப்பிட்டுள்ளார்.
ஓடுகின்ற சிறுவர்களோ டுடன்கூடி விளையாட்டே உவந்து நாளும்
ஆடுகின்ற பருவத்தே அடியேனுள் எழுந்தருளி அன்பால் நின்னை
நாடுகின்ற வகைசிறிதே அளித்தின்று குருவாகி நலந்தந் துன்னைப்
பாடுகின்ற பணிஅளித்த பரகுருவே போற்றிஎனப் பரவி மன்னோ.

87 வான்வளர்த்த மலர்க்கொடியே மலைவளர்த்த
மடப்பிடியே மணியே வாசக்
கான்வளர்த்த மலர்க்கோதைக் கனியேமுக்
கனியேபைங் கரும்பே செங்கை
மான்வளர்த்துச் சடையிலேஇள மதிவளர்த்த
ஒருகிழவன் மகிழ வாய்த்த
தேன்வளர்த்த மொழிக்குமரி கௌரிஎன
மறைபுகழ்மா தேவி போற்றி. 29

88 போற்றிஎனப் புகழ்ந்துசண்பைப் புனிதமறைக்
குலமணியைப் போந்து போற்றி
நாற்றிசையும் புகழ்கின்ற நாவரசைப்
பணிந்துசிவ ஞானந் தேறித்
தோற்றியவூர் சங்கிலியால் துடக்குண்ட
யானைதனைத் தொழுது மாயை
மாற்றியநம் மாணிக்க வாசகப்பொன்
மலையடியை வணங்கி மாதோ. 30

89 தொண்டுநிலை சேர்ந்துயர்ந்த சண்டேசர்
முதலோரைத் தொழுது போற்றி
விண்டுமுதல் நெருங்குதிரு வாயலிடை
அன்பினொடு மேவி ஆங்குத்
தண்டுவிழுந் தெனவிழுந்து பணிந்துபணிந்
திருவிழியில் தரள மாலை
கொண்டுநடங் கொண்டுநெறி கொண்டுமகிழ்
கொண்டுமனங் குளிர்ந்தான் பின்னர். 31

90 கருவலகிட் டருள்புரியும் கண்ணுடையான்
விமானத்தின் கனகச் சூழல்
மருவலகின் மணித்திரள்மா ளிகைமண்ட
பங்கள்முதல் வகுத்த எல்லாம்
திருவலகிட் டணிசாந்தத் திருமெழுக்கிட்
டன்பினொடும் திருவா யற்கண்
ஒருவலகில் திரணமொடு புல்லாதி
களைக்களைந்தாங் குவந்து மாதோ. 32

91 புறத்தணுகித் திருமதிலின் புறத்தினும்நல்
திருக்குளத்தின் புறத்தும் ஞானத்
திறத்தர்மகிழ்ந் தேத்துகின்ற திருமாட
வீதியினும் தெரிந்து காலின்

உறத்தருமுட் கல்லொடுபுல் லாதிகளை
நீக்கிநல முறுத்திப் பாசம்
அறத்தொழுநல் அறத்தொழுகும் சிவனடியர்க்
கேவல்பல அன்பாற் செய்து. 33

92 கருமுடிக்கும் களம் உடையான் கண்ணுடையான்
எம்முடைய கருத்தன் செய்ய
திருமுடிக்கும் செங்கமலத் திருவடிக்கும்
புனைந்திடுவான் சிறப்ப வைத்த
மருமுடிக்கு மலர்நந்த வனத்தினையுள்
அன்புடனே வணங்கித் தூநீர்
உருமுடிக்கட் சுமந்துகொணர்ந் துட்குளிர
விடுத்துவிடுத் தூட்டி மாதோ. 34

93 தேங்கமழ்பொற் கொன்றைநறும் பாடலம்மா
லதிவகுளம் சிறந்த சாதிக்
கோங்குவழை மயிலைநறு மல்லிகைஒண்
தளவமலர்க் குரவம் தும்பைப்
பாங்கறுகு கூவிளநற் பத்திரமா
தியமிகுசற் பத்தி உள்ளத்
தோங்குறமெய்ப் புனிதமொடும் உவந்துபறித்
தைந்தெழுத்தும் உன்னி ஆங்கே. 35

94 பொன்மாலை யனையகொன்றைப் பூமாலை
முதற்பிணையல் புனித மாலை
என்மாலை யகற்றுடையான் திருமுடிக்குச்
சாத்துதிரு இண்டை மாலை
கன்மாலை நெஞ்சமுறான் கழல்மாலை
தோள்மாலை கன்னி மாலை
மன்மாலை தார்மாலை வகைமாலை
தொடுத்தெடுத்து வந்து மாதோ. 36

95 மீண்டுமருட் கோயிலினுட் புகுந்துச்சிப்
பூசனைசெய் வேலை தன்னில்
ஆண்டவனுக் கணிவித்து வலம்புரிந்து
தொழுதுதுதித் தாடிப் பாடி
ஆண்டமரும் பரிவாரத் தேவர்முதல்
அனைவரையும் அன்பால் ஏத்தி
வேண்டுவிருப் புடன்பிரியா விடைகொண்டு
புறத்தணுகி மேவி ஆங்கண். 37

96 சீரேனம் அறியாத திருவடியும்
குருவடியும் சிந்தித் தேகி
யாரேனும் கொலைகுறியார் எமக்குரியார்
எனஅவர்தம் இல்லந் தோறும்
போரேர்நெற் சோறேனும் புதுக்கஞ்சி
யேனும்அன்றிப் புளித்த காடி
நீரேனும் கூழேனும் கிடைத்ததுகை
யேற்றுவந்து நின்று வாங்கி. 38

97 அங்குருவின் தகைதெரிக்கும் ஆச்சிரமத்
திடைஅணுகி அன்பி னோடும்
தங்குருவின் அடிமுடிமண் ணுறவணங்கி
இருகரமும் தலைமேற் கூப்பி
எங்குருவே சிவகுருவே எழிற்குமர
குருவேஇவ் வெளியேன் தன்பால்
இங்குருவிற் கருணைபுரி திருவாக்கின்
படிபிச்சை ஏற்ற தீதால். 39

98 எனத்தொழுது நின்றானைக் கருணையொடும்
கடைக்கணித்தே இறைவன் கோயில்
கனத்தபணி புரிந்தனைநின் இளைத்தஉடல்
ஆங்கதனைக் காட்டு கின்ற
தினத்தவரோ டுண்ணுதிபின் பெய்துதிஈண்
டெனஉரைப்ப இறைஞ்சி வாழ்த்திச்
சினத்தழல்நீத் தருள்மிகுத்த திருக்கூட்டந்
தனைவணங்கிச் சிந்தித் தேத்தி. 40

99 அக்கூட்டந் தனில்உண்ணா அருந்தவரை
வினவிஅவ ரடியில் தாழ்ந்து
மிக்கூட்டும் அன்னையினும் மிகப்பரிவின்
அவர்க்கூட்டி மிகுந்த சேடங்
கைகூட்டக் காணாதே ஆயினும் மற்
றதுகுருவின் கழல்கள் எத்தி
மெய்க்கூட்டம் விழைந்தவன்றான் மிகமகிழ்ச்சி
யுடன்உண்டு விரைந்து மாதோ. 41

100 வாய்பூசிக் கைபூசி வந்துசிவ
குருவின்அடி வணங்கி நின்றான்
தாய்பூசித் தெதிர்நிற்கும் தனையனைப்பார்த்
துரைப்பதுபோல் தயவால் நோக்கிப்

பேய்பூசித் திடும்சிறிய பேதையர்போல்
அல்லாது பெரிது மிக்கன்
பாய்பூசித் திறைவனடி வணங்குகின்ற
நல்லோரைப் பணிந்து வாழ்த்தி. 42

101 அன்பிரக்கம் அறிவூக்கம் செறிவுமுதல்
குணங்கள்உற அமைந்து நாளும்
இன்புறக்கண் ணுதலான்தன் திருக்கோயில்
பணிபுரிந்தீண் டிருக்கும் நல்லோர்
துன்பறச்சொல் வழிஎந்த வழிஅந்த
வழிநடந்து துகளில் கல்வி
பொன்புரக்கும் தொழில்வணிகர் போல்பயில்க
எனக்குரவன் புகன்றான் மன்னோ. 43

102 அம்மொழியாஞ் செம்மணியை அடிமுடியின்
அணிந்துமன மலர்ந்து நாயேன்
இம்மொழிஆ ரமுதருந்த என்னஅருந்
தவமுன்னர் இயற்றி னேனோ
செம்மொழிஆ ரணம்பரவும் சிவகுருவே
எனத்துதித்துச் சினங்கொண் டோதும்
வெம்மொழிஒன் றில்லாத திருக்கூட்டத்
தவர்களொடும் மேவி னானால். 44

கலிவிருத்தம்

103 கொற்றவர் புகழும்அக் கூட்டந் தன்னில்வாழ்
முற்றவர் சிதம்பர முனிவர் தம்முனர்
உற்றிடும் சஞ்சலன் உளத்தை ஓர்ந்தவன்
கற்றிடற் கேற்றநற் கலைகள் தேற்றவே. 45

104 உளங்கொண் டங்கவன் தனைஉழை யிருத்திஒர்
வளங்கெழு கன்னலின் மட்டும் இன்சுவை
அளந்தறிந் தூட்டுநல் அன்னை போல்மனக்
களங்கறப் பருவநேர் கலைப யிற்றிட. 46

105 பயின்றனன் சஞ்சலன் பரிந்து தெள்ளமு
தயின்றனன் ஆமென அகங்க ளித்தனன்
வியந்தனன் ஆங்கவர் விடுக்க மீண்டுநல்
வயந்தரு கோயிலின் மருங்கு நண்ணினான். 47

106 அன்புடன் புனிதநீ ராடி · நீறணிந்
தின்புடன் கண்டிகை எடுத்துப் பூண்டுதன்
துன்பறக் குருபதந் துதித்துக் கோபுரம்
முன்புறப் பணிந்துமா முகனைப் போற்றியே. 48

107 அந்தியார் வண்ணனை அந்திப் பூசனை
சந்தியா நின்றஅச் சமயத் தெய்தியுட்
புந்தியால் நினைந்துடல் புளகம் போர்த்திட
வந்தியா நின்றடி வணங்கி ஏத்தியே. 49

108 பாங்கமர் சிவபரம் பரையை வாழ்த்திக்கை
ஓங்கயிற் பிள்ளையை உவந்து போற்றிநின்
றாங்கமர் மற்றுள அமல மூர்த்திகள்
பூங்கழல் வணங்கிஓர் புறத்தி ருந்தரோ. 50

109 வருநெறி மூலமாம் மந்தி ரத்தினை
மருவிய அக்கமா மணிவ டங்கெடு
இருமைகொள் ஆயிரத் தெட்டின் எல்லையாம்
உருவுறச் செபமுடித் துளத்தின் உன்னியே. 51

110 எழுந்துவீழ்ந் திறைஞ்சிநின் றேத்தி அன்பினில்
அழுந்துநெஞ் சகத்தொடு அமல மாம்சிவக்
கொழுந்தமர் தளிவலங் கொண்டு கண்ணடி
உழுந்துருள் அளவும்வே றுன்னல் இன்றியே. 52

111 மாலயற் கரியநம் வள்ள லார்வளர்
ஆலயத் திரவிடை ஆற்றத் தக்கன்
ஏலநெய்த் திருவிளக்கேறப் பார்த்திடும்
மூலமெய்த் திருப்பணி முதல ஆற்றியே. 53

112 விடைகொடு புறத்துறீஇ விமலன் அன்பர்கட்
கடைவுறப் பணிகள்செய் தகங்கு ளிர்ந்துவான்
தடைபொழில் ஆச்சிர மத்திற் சார்ந்தவண்
இடைமகிழ் குருவடி இறைஞ்சி ஏத்தியே. 54

113 எண்ணுறு தவர்அடிக் கேவல் ஆற்றியும்
கண்ணுறு பாடம்உட் கருதி யும்அவை
நண்ணுறக் கேட்டும்சொல் நயங்கள் நாடியும்
பண்ணுறு பொருள்நலம் பாங்கின் ஓர்ந்துமே. 55

114 காமமும் வெகுளியும் கடுஞ்சொல் ஆதிய
நாமமும் கனவினும் நண்ணல் இன்றியே
சேமமும் ஒழுக்கமும் செறிவும் ஆதிய
தாமமும் மணியும்போல் தாங்கி ஓங்கியும். 56

115 கண்வளர்ந் திடுதல்ஐங் கடிகை மற்றைய
திண்வளர் பொழுதெலாம் தேசி கப்பிரான்
பண்வளர் திருவடிப் பணியும் எம்பிரான்
ஒண்வளர் பணிகளும் உஞற்றி வைகினான். 57

116 மாசறு தவர்கள்உள் மகிழ்ந்து நோக்கவும்
தேசிகன் திருவுளம் திரும்பித் தேக்கவும்
ஆசறு கலைபயின் றமர்ந்து ளான்இவன்*
ஏசற இவ்வணம் இயற்று நாளினே. 58

திருச்சிற்றம்பலம்

## குடும்ப கோஷம்

இது பெருமானார் இளமையில் சென்னையில் வதிந்தபோது ஒற்றியூர் வழிபாட்டுக் காலத்தில் இயற்றத் தொடங்கிய செய்யுள் நூல். 19 படலங்களைக் கொண்டது.

1. குருதரிசனப் படலம்
2. முயற்சிப் படலம்
3. தந்தையாதியர் வரு படலம்
4. விடைகொடுத்த படலம்
5. தந்தையாதியர் புலம்புறு படலம்
6. நகர்காண் படலம்
7. விண்ணப்பப் படலம்
8. குடும்பகோஷப் படலம்
9. தேசசஞ்சாரப் படலம்
10. துயருறு படலம்
11. தூஷணப் படலம்
12. உலகியற் படலம்
13. பெண்சமுகப் படலம்
14. ஆண்சமுகப் படலம்
15. துறவுப் படலம்
16. சாதுசங்கப் படலம்
17. நிராசைப் படலம்
18. மகிழ்ச்சிப் படலம்
19. உபதேசப் படலம்

எட்டாம் படலத்தின் பெயரே நூற்பெயராக அமைந்துள்ளது. முதல் இரண்டு படலங்களே (116 பாடல்கள்) செய்யப்பெற் றுள்ளன. ஏனைய 17 படலங்களும் பாடப் பெறவில்லை. படலப்பெயர்கள் மட்டுமே குறிக்கப்பெற்றுள்ளன. இப்படலங்களும் பாடி, நூல் முற்றுப்பெற்றிருக்குமாயின் ஆயிரம் பாடல்களுக்குமேற் கொண்டதோர் அரிய சாதன நூலாக விளங்கும். பல பொருள்களும் சாதன முறைகளும் அனுபவங்களும் வெளிப்பட்டிருக்கும்.

இந்நூல் முற்றும் கற்பனை அன்று பெருமானார் உண்மை வரலாற்றையே கற்பனை நயத்துடன் கூறுகின்றார். சஞ்சலன் வரலாறும் பெருமானார் வரலாறும் பெரிதும் ஒத்திருக்கிறது. சென்னை பதிப்பு, 'இக்குடும்பகோஷம் வள்ளற்பெருமானைப் பற்றியதன்று' என்று கூறும். தம் வரலாற்றையும் அனுபவங்களையும் புனைபெயர்களில் பல படலங்களாக பெருமானார் இளமையில் பாடத் தலைப்பட்டனரோ எனக் கருத இடமுண்டு. நூலை முடிக்காது நிறுத்திவிட்டமை இக்கருத்தை மேலும் வலியுறுத்தும்.

* இவண் – பி.இரா. ச.மு.க.

# 2. குருட்டாட்டம்

## 1. குருட்டு மாணாக்கர் புல்லொழுக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1 திங்களணி சடைமவுலிச் சிவனேஇக்
கலிமகிமைத் திறத்தில் இங்கே
எங்கள்உல கியலின்உறு பிரமசரி
யத்தின்நெறி என்சொல் கேனோ
தங்கள்உப நயனவிதிச் சடங்குசெயும்
பருவமிது தானே என்றால்
உங்களுக்கிங் கெதுதெரியும் ஒன்பதுதொட்
டைம்பதுமட் டுண்டென் பாரே. 1

2 இவ்வகைஇங் காபாச உபநயன
மல்லாமல் எள்ளிற் பாதிச்
செவ்வகையும் பருவமதில் இச்சடங்கின்
விதிஒன்றும் செய்யக் காணேன்
உவ்வகையோர் நரைத்தலைக்கு விளக்கெண்ணெய்
கிடைத்தபரி சொத்து மேவும்
அவ்வகையோர் தமைச்சிவனே எவ்வகையோர்
எனக்கலியின் அறைவ தன்றே. 2

3 பெருஞ்சவுசம் செய்தல்எனும் சங்கடத்துக்
கென்செய்வோம் பேய்போல் பல்கால்
வருங்குளநீர் கொண்டலம்பல் அமையாதே
மண்ணெடுத்து வருந்தித் தேய்த்து
இருங்கரம்ஆ சனந்தேய்ந்தோம் என்பர்சில
மாணிகள்ஈ தென்னே என்னே
கருங்களமா மணியேஇக் கலிகால
மகிமை என்னால் கழறற் பாற்றோ. 3

4 (இந்தஜபம் அடி)க்கடிஇங் காராலே
செயமுடியும் அந்தோ நீரில்
(வந்துயிர்க்கும் உயி)ர்களுக்கும் சலிப்பாமே
முப்பொழுதும் மலிநீ ராட
(நிந்தைஎன்ப தெ)ங்கேநாம் இங்கேவந்
தகப்பட்டோம் நிலையல் தம்மோர்
(இந்திரவில் லா)ய்ச்சொல்வம் என்பர்சில
மாணிகள்மா தேவ என்னே. 4

5 சந்தியா வந்தனையாம் ஏழரைநாட்
சனியொன்றும் தானே போதும்
சிந்தியாப் பெருஞ்சுமைவெந் தீயினிடைச்
சமிதைகொடு செய்யுஞ் செய்கை
புந்தியால் நினைக்கில் உளந் திடுக்கிடுவ
தென்பர்சிலர் போத மிக்கோர்
வந்தியார் பிட்டருந்து மாமணியே
கலிகால மகிமை ஈதே. 5

6 (கா)கம்போல் நான்குமறை யென்னும்பே
ரவதியைநாம் கதறும் வெப்பம்
(மேகம்போல்) நெய்குடித்தும் போகாதே
என்செய்வோம் ஒவா தொத்த
(தேகமெலாம்) நோகின்ற தெம்மாலே
முடியா தீ தென்பார் சில்லோர்
(மோகமிலா) தளித்தநுதற் கண்கரும்பே
கலிகால முறைமை நன்றே. 6

7 முத்தனைய நகைமாதர் இன்பமிலை
முடிக்குமலர் முடித்தல் இல்லை
இத்தனையும் அழகுசெய்யும் தாம்பூல
தாரணமும் இல்லை அந்தோ
எத்தனைநாள் இவையெல்லாம் இல்லாமல்
இருப்பதுநாம் என்பார் சில்லோர்
சித்தனையர் உளமமர்ந்த சிவக்கொழுந்தே
இதுகலியின் சீர்மை தானே. 7

8 (முருக்கும்)நா ணரைஎங்கே பொன்னரைநாண்
வேண்டிஇவண் முயல்கின் றார்க்கு
(இருக்கன்)மர்ன் தோலுடுக்கை எங்கேபொற்
சரிகையுடை ஏற்கின் றார்க்கு
(வி)ருக்கங்கோ லென்படு நெடும்பொற்
சித்திரக்கோல் விழைகின் றோர்பால்
(கருக்க)ணிகண் டத்தோய்இக் கலிகால
மாணிகள்சீர் நவிலற் பாற்றோ. 8

9 (இந்தமட்டு)ம் போதும்இனி இல்லொழுக்கம்
சொல்லுமென இசைக்கின் றோரும்
(வந்தமட்டு)ம் சொல்வமன்றி வாராது
நிறுத்துமென வகுக்கின் றோரும்

(எந்தமட்டு)ம் நுழைந்ததென்றால் வால்மட்டும்
நுழைந்ததென இசைக்கின் றோரும்
(சிந்தைமட்டா)ம் சிவக்கொழுந்தே இக்கலியின்
உண்டுசில சீடர்க் குள்ளே. 9

10 இல்லறத்தார் ஆகளமக் கிச்சைஉமக்
கிச்சைஎன்ன என்கின் றோரும்
சொல்லறத்தில் நிற்கஇனி முடியாது
விடுகஎனச் சொல்கின் றோரும்
நல்லறத்தில் நல்லறமொன் றெமக்குரையும்
சுளுவில்என நவில்கின் றோரும்
செல்லறத்திற் சிவக்கொழுந்தே இக்கலியின்
உண்டுசில சீடர்க் குள்ளே. 10

11 (குருவின்சொ)ல் வழிநின்று பணிபுரிவ
தெங்கேஅக் குருவா னோன்தான்
(மருவினிய) நற்சொல்மொழிந் திடினும்வளை
யாதபனை மரம்போல் நிற்பார்
(கருவின்கண்) ணேஇவர்தாம் கற்றுமுடிந்
திட்டார்சொல் கபடம் பேசி
(உருவதனின்) மிகச்சிறியர் போற்பழிப்பர்
தெழிப்பர்நகைத் துலவு வாரே. 11

12 சீர்க்குருவுக் குபசாரம் செய்வதெங்கே
சிவனேஉட் சிரிப்புத் தோன்ற
வேர்க்குருவோ முகக்குருவோ நம்குருவென்
றேளனமே விரிப்பார் அன்றிப்
பார்க்குரிய மறையோது கின்றோர்போல்
மெணமெணப் பழிச்சொல் ஓதி
ஊர்க்குருவி போல்கிளைப்பர் மாணிகள்இக்
கலிகாலத் துவப்பாம் அன்றே. 12

13 (அற்பமதும்) சுதந்தரந்தான் இல்லாமல்
இக்குருவுக் கடங்கி முன்னே
(நிற்பதுவும் இவ)ன்பின்னே நடப்பதுவும்
இவன்குறிப்பில் நின்று வேதம்
(கற்பதுவும் போ) லாம்இக் கட்டையெலாம்
விட்டுமெள்ளக் கடப்போம் என்பார்
(பொற்பொதுவில்) நடமியற்றும் புனிதாஇம்
மாணிகள்தம் புதுமை என்னே. 13

14 எவ்வாறிப் பிரமசரி யாம்சனியை
இழப்போம்என் றிரங்கி நிற்பார்
இவ்வாறு நிகழ்கின்ற மாணிசிலர்
நல்லோர்காண் இவ்வா றன்றி
ஒவ்வாத கொடுஞ்சொல்லால் குருவைஎதிர்க்
கின்றோரும் உண்டே பல்லோர்
செவ்வாம்பல் கனிவாய்மா தேவிஒரு
புடையாய்இத் திறந்தான் என்னே. 14

## 2. குருட்டு ஆசிரியர் புல்லொழுக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

15 (பொய்யதனை உ)ரைப்பர்கள்இப் பிரமசா
ரிகள்நெறிதான் புதிதே முக்கண்
(ஐயனே இவ)ர்மீதிற் குறையொன்றும்
இலைஇவர்கட் கறிவு சாற்றிச்
(செய்யுமா) சிரியர்செய லுரைக்கில்பிண
மும்நின்று சிரிக்குமிகச் சிறியர்நின்று
(வையுமவர்) சீடரவர்க் கெழுகோடி
மடங்கதிகம் என்ன லாமே. 1

16 எய்கின்றான் குருஅம்பால் எறிகின்றான்
சீடன்கல் லெடுத்து வஞ்சம்
செய்கின்றான் குருஇடித்துச் சிரிக்கின்றான்
சீடன்மிகத் தீய சொல்லால்
வைகின்றான் குருஅவனை வலிக்கின்றான்
சீடன்நடு வழியில் நின்று
பெய்கின்றான் குருஓடிப் பெய்கின்றான்
சீடன்என்னோ பிறைவேய்ந் தோனே. 2

17 (வன்பிடுவார்) குருஅவர்பால் வழக்கிடுவார்
சீடர்அயல் மனையை வேண்டித்
(துன்படைவார் கு)ருத்தாம்போய்ச் சுகித்திடுவார்
சீடர்பின் சுளித்துக் கையால்
(முன்படுவார்) குருஅவரை மொத்திடுவார்
சீடர்இந்த முறைமை யன்றோ
(உன்புடையார் க)லிமகிமை கண்டாய்முக்
கண்ணுடன்என் னுளங்கொண் டோயே. 3

18 இருந்துறங்கும் ஆசிரியர் இயல்கண்டே
படுத்துறங்கியிடுவார் சீடர்
கருந்தடங்கண் பெண்முலைமேல் கண்வைப்பர்
ஆசிரியர் கண்டு சீடர்
இருந்தடங்கை வைத்திடுவார் ஆசிரியர்
சித்திரம்பே சிடுவார் கேட்டுள்
வருந்திவிளை யாடிடுவார் சீடர்கள்முக்
கண்ணுடன்என் னுளங்கொண் டோயே. 4

19 (சூதினையே )கொண்டுமறை சொல்லுவிப்பர்
ஆசிரியர் சூழ்ந்தா ரோடு
(வாதினையே) கொண்டதனை வாசிப்பார்
மாணாக்கர் வஞ்சங் கொண்டு
(காதினையே )கொண்டமணிக் கடுக்கனிட்ட
முகமன்றிக் கருணை யன்புப்
போதினையே கொண்டமுக மிலைஇவர்பால்
கலியன்றே விடையூர்ந் தோயே.✦ 5

## 3. குடும்ப கோரம்

நிலைமண்டில ஆசிரியப்பா
திருச்சிற்றம்பலம்

திருவளர் கமலக் குருமலர் தவிசினன்
முதற்பெருந் தேவர் மூவரும் பணியப்
பொதிவிடைத் திருநடம் புரியுநம் பெருமான்
அடிமலர்க் கன்புசெய் அன்பர்கட் கன்பன்
சீர்விளை தூய்மை நீர்விளை யாடிச்

சொற்றரு வாய்மைப் பொற்றுகில் உடுத்துக்
கரிசில்வெண் ணீற்றுக் கவசந் தரித்துத்
தத்துவ சிற்பர சற்குண அகண்ட
பூரண சச்சித போதா னந்த
அற்புத சிற்குண அங்கலிங் கேசனை

✦ இப் பத்தொன்பது பாடல்களும் பெருமானது தொடக்க காலத்திய பாடல்கள் கொண்ட ஒரு சுவடியில் பெருமானால் எழுதப்பட்டுள்ள தென்றும், எண் குறிப்பும் தலைப்பும் இல்லை என்றும், அடைப்புக் குறிக்குள் உள்ளவை ஏடுகள் சிதைந்துள்ள இடங்களில் ஒருவாறு காமா, சோமா என்ற வகையில் தாம் அமைத்தவை ஆ.பா. அடிக்குறிப்பெழுதுகிறார். குருட்டாட்டம் என்ற பெயரும் உள் தலைப்புகளும் ஆ.பா. அமைத்தவையே.

அகத்தும் புறத்தும் அருச்சனை புரிந்து
சிவந்தரு சுகமெனும் திருவமு துண்டு
சீலம் எனும்தாம் பூலந் தரித்தே
அளவில் இன்பம் அனுபவிக் கின்றவன்
மூதறி வாளன் முத்து சாமிஎன்

றியற்பெய ருடையஇத் திருவா ளனுக்கு
இராம லிங்கம் எழுதி விடுத்த
மயலுறு சோபன வாசகம் ஆவது
ஐயநின் புடைஇப் பொய்யனேன் போதர
தடைபல உளஅவை சாற்றிட என்றால்

ஆயிரங் கோடிநா வாயினும் முடியா
இருந்து மற்றவை எண்ணிட என்றால்
உள்ளம் உடம்பெலாம் கொள்ளினும் போதா
எழுதஎன் றாலும் ஏட்டுக் கடங்கா
என்னினும் சிறிதே எழுதத் துணிந்தனன்

குடும்பத் தலைவன்

என்னெனில் யான்ஓர் ஏழை என்பதும்
தெளிவிலாச் சிறியரில் சிறியனேன் என்பதும்
இன்புடை அறிவே இல்லை என்பதும்

எனது முதல் மனைவி : ஆணவம்

ஆணவக் கிழத்தி அநாதியில் இறுகப்
பிரமரா க்ஷசிபோற் பிடித்துக் கொண்டனள்
சிவபூ ரணத்தைச் சிறிதும் காட்டாள்
ஜெகமெனும் ஏக தேசமும் தெரிக்காள்
எவ்விடத் திருளும் என்னகச் சுவரெனக்

கனவிருள் வடிவம் காட்டும் கொடியாள்
இரவிது பகலிது இன்பிது துன்பிது
ஒளிவெளி இதுவென ஒன்றுந் தெரிக்காள்
இறுக்கும் அரக்கி இவளொடும் இருந்தே
எளியேன் முயங்கிடல் என்தவம் என்கோ

முதல் மனைவியின் பிள்ளை : அஞ்ஞானம்

முற்றும் அஞ்ஞான மூடப் பிள்ளை
ஒருவன் பிறந்தனன் ஒடிவான் அவன்தனால்
பானுவின் ஒளியைப் படரிருள் மூடல்போல்
என்அகக் கண்ணையும் என்புறக் கண்ணையும்
அங்கையால் மூடி அலக்கழிப் பான்எனைத்

தன்னைஇன் னான்எனத் தானும் காட்டான்
என்னைஇன் னான்என எண்ணவும் ஒட்டான்
ஏடுறும் எண்ணும் எழுத்தும் உணரான்
தாயினும் கொடியன் ஆயினும் என்தன்
விதியை நொந்து விருப்பின் வளர்த்தேன்

இவன்தன் வாழ்க்கையும் வாழ்க்கையோ என்ன
மதிப்பவர் ஆரெனை வையகம் மகிழ்ந்தே
வையக மகிழ்ச்சி வையகம் நெருப்பாம்
மருளுறு சிறுவன் வளர்நாள் தொடுத்தே
உறவகன் றார்யான் அறிவகன் றிட்டேன்

செப்புறும் தெய்வச் செயலென் கேனோ
இருதொ டக்குகள் இயலா தென்றே
தொடக்குப் பற்பல அடுக்கடுக் காயின

பசுபதி

ஆரோ பசுபதி அவன்வடி வழலாம்
அங்கண் மூன்றாம் அருட்சத்தி மானாம்

மண்ணும் விண்ணும் மாலய னோரால்
நேடியுங் காணா நீள்பத முடியனாம்
எழுமலை எழுகடல் எழுபுவி எழுகார்
ஆன எவையும் அளித்துநோக் குவனாம்
ஊர்தரும் மாருதம் உயிர்ப்பாய் உளனாம்

உயிரெழு வகுப்பையும் ஊட்டியுறக் குவனாம்
ஊழிகள் தோறும் உள்ள ஒருவனாம்
உரைகொண் டோதரும் உயர்வே தாகமம்
உற்ற கலைகள் உயரிய நிலைகள்
அண்ட பிண்டம் அவற்றின் துறைகள்

சாரும் இறைகள் சராச ரங்கள்
வளமுறு வர்ணா சிரம வகைகள்
வகுக்குறு வகுப்பினும் வதிவாழ்க் கையனாம்
சதிர்மா மாயை சத்திகள் கோடி
மன்னிய அரங்கிடை வதிபெற் றியனாம்

அவன்றான் யாரோ அறியேன் யானே
அறிதர வேண்டும் அப்பரு வத்தே

## எனது இரண்டாவது மனைவி : மாயை

மாயை என்னும் மாதினைக் கொணர்ந்தே
சிறுகருங் காக்கைக் குறுகுறுங் கழுத்தில்
கனம்பெறு பனங்காய் கட்டிய வாறெனக்

கட்டிப் புண்ணியங் கட்டிக் கொண்டனன்
விடுத்தெனைப் புண்ணியன் விலகலும் அவள்தான்
விண்ணவர் மண்ணவர் வியக்கும் உருக்கொடு
கொள்ளிவாய்ப் பேய்களோர் கோடி நின்றே
தடித்த குழவியைப் பிடித்தது போல

மற்றவள் என்னை மணந்து கொண்டனள்
பெண்ணடை அனைத்தும் பெருங்கதை யாகும்
அடுத்தவர் என்னை அந்தோ கொடிய
அருந்தளை ஏனென அறைந்தெனை அகன்றனர்
அகமெலாம் பகீரென அனந்த உருவாய்

அவ்வவ் வுருகொண் டணைத்துக் கெடுப்பள்
காற்றினை ஒருசிறு கரகத் தடைப்பள்
கடல்ஏ ழினையும் கடுகிடை முகப்பள்
வகைவகை யாயுடல் வனைந்து வகுப்பள்
வையக முற்றும் வாயில் மடுப்பள்

பகலிடை நள்ளிருள் இருக்கப் பண்ணுவள்
இருளில் பரனுவை எவர்க்குங் காட்டுவள்
அண்டம் எல்லாம் அணுவிற் செறிப்பள்
அணுவை அண்டமாய் ஆக்கி நகைப்பள்
பொய்யை மெய்யாப் பொருந்தி மகிழ்வள்

பொருந்தும் மெய்யைப் பொய்யாச் செய்வள்
அடர்வஞ் சகக்கழங் காடற் பிரியாள்
காணாப் பன்னிலை கலையுடன் காட்டுவள்
இருளை இரிக்கும் இந்து ரவிகளைப்
படைத்திங் கயிற்றுவள் பற்பல ஜாலம்

பிரமனை வலக்கைப் பிடிக்குள் அடக்குவள்
இடக்கையில் மால்பதி ஏந்தித் தரிப்பள்
தலையிடை உருத்திரன் தன்பதி தெரிப்பள்

குளிரெழு கடலிவள் குளிக்கும் தடமே
அண்ட மெல்லாம் கொண்டையில் முடிப்பள்.

ஜெகமெலாம் கலைக்குள் சேர்த்துக் கட்டுவள்
உடம்பிடை உரோமம் ஒவ்வொன் றிடையே
புவனமொன் றாகப் பொருந்தச் சமைப்பள்
எவரையும் கணத்தில் எய்தி மயக்குவள்
இக்கொடும் பாவி என்மனை யானது

பிடாரியைப் பெண்டாய்ப் பெற்றது போலும்
அனுகூ லச்சொலை அகத்திடை மதியாள்
அடிமடி பிடிப்பள் அரியவம் பிசைப்பள்
உறங்க விடாளவள் உறங்குபாய் சுருட்டாள்
மடிமாங் காயிடுங் கொடுமைக் கிளையாள்

சாகவும் விடாளவள் சார்பழி தளராள்
தவத்தில் இசையாள் பவத்தின் நசையால்
மருட்பேய் என்ன மதித்திட வாட்டிப்
படைத்தென் மானம் பறக்கச் செய்வள்
மான மகற்றியும் மனைவிட் டேகாள்

இரவும் பகலும் எனையிழுத் தணைப்பள்
இவளாற் படுமிடர் இம்மட் டிலவே
புகலப் படுமோ புகலின் இருசெவி
பொருந்துளங் கைத்திடும் போதும் போதும்
மல்லாந் துமிழின் மார்பின் மேலெனச்
சொல்லுவர் அதனால் சொல்வது மரபல

## மாயையின் முதல் பிள்ளை : மனம்

கொடுந்தவம் புரிந்தொரு குரங்குபெற் றாற்போல்
மலைக்கப் பெற்றிட மனம்எனும் இளைஞன்
உலக்கைக் கொழுந்தென ஒருவன் பிறந்தனன்
வருமிவன் சேட்டை வகுக்கவாய் கூசும்

விதிவிலக் கறியா மிகச்சிறிய னாயினும்
விண்மண் நடுங்க வினைகள் இயற்றிக்
காமக் குழியில் கடுகிப் படுகுழி
விழுமதக் களிறென விழுந்து திகைப்பன்
பதியை இழந்த பாவையின் செயல்போல்

கோபவெங் கனலில் குதித்து வெதும்புவன்
நிதிகவர் கள்வர் நேரும் சிறையென
உலோபச் சிறையில் உழன்று வாழ்வன்
வெற்பெனும் யானையை விழுங்கும் முதலை
முழுகிக் கடலில் முளைத்திடல் போல

மோகக் கடலில் மூழ்கி மயங்குவன்
மதுகுடித் தேங்கி மயக்குறு வார்போல்
மதத்தால் வீறி மதங்களில் வியப்பன்
பட்டினி இருக்கும் வெட்டுணி போல
மச்சரம் கொண்டு மகிழ்கூர்ந் தலைவன்

காசில் ஆசை கலங்குறா வேசை
எனினும் விழிமுனம் எதிர்ப்படில் அக்கணம்
அரிய தெய்வமென் றாடுவன் பாடுவன்
அணிகள் அணிவன் அடியும் பணிவன்
எலும்பைச் சுரண்டும் எரிநாய் போலச்

சுற்றுவன் பற்றுவன் தொழுவன் எழுவன்
கணத்தில் உலகெலாம் கண்டே இமைப்பில்
உற்ற இடத்தில் உறுவன் அம்மா
சேய்மை எல்லாம் செல்லற் கிளையான்
பித்தோங் கியஉன் மத்தனாய்த் திரிவான்

சொல்வழி நில்லான் நல்வழி செல்லான்
சேர அழைக்கில் சிரத்தே ஏறுவன்
வெட்டிலும் துணியான் கட்டிலும் குறுகான்
மலக்கி ஈன்ற மாதினும் பாவி
கள்ளது குடித்துத் துள்ளுவான் போல

மதத்தாற் பொங்கி வழிந்து துள்ளுவன்
முத்தந் தரல்போல் மூக்கைக் கடிப்பன்
மறைசொல் வான்போல் வளர்செவி கிள்ளுவன்
சற்றும் இரங்கான் தனித்துயில் கொள்ளான்
கூவிளிச் செய்வன் கூடுவன் பலரை

கூவி அதட்டினும் கோபங் கொள்வான்
இங்கு முள்ளான் அங்கு முள்ளான்
படைக்கு முன்னே பங்கு கொள்வான்
மடியில் நிறுத்தி வாய்மை வழங்கினும்
வண்ணான் கல்லிடை வறிஞர் சீலையை

ஒலித்திடல் போல உரத்திக் கத்துவன்
என்னைத் தாதையென் றெண்ணான் சொல்லும்
வாய்மை எல்லாம் வண்புனல் ஓவியம்
ஆகக் கொள்வான் அவன்பரி சுரைக்கேன்
பிறந்தஇப் பாவி இறந்தான் இலையே

சென்றநாள் எலாமிச் சிறுவனால் அன்றோ
வருசுகங் காணா வைச்சுமை நேர்ந்தேன்
திறந்திவன் செயலைத் தினைத்துணை விடாது
செப்பின் கற்கள் சிதைந்து கசியும்
கனத்த மரங்கள் கண்ணீர் பொழியும்

கடவுளர் இவன்செயல் காணு வாரேல்
இமையாக் கண்களை இமைத்திடு வாரால்.

மாயையின் இரண்டாவது பிள்ளை : புத்தி

காசிபன் மனைவிமுன் கடுந்தவம் புரிந்து
பையுடைப் பாம்பைப் பயந்தது போன்று
புத்தி என்னும் புத்திரன் தன்னை

ஈன்றனள் அவனோ எளியரில் எளியன்
வாய்மையும் தூய்மையும் வதிதரு வாழ்க்கையன்
தாயொடும் பழகான் தமையனோ டணையான்
தறுக ணாளரிற் குறுகியுற வாடான்
பாவம் என்னில் பதறி அயர்வான்

பாடு படற்குக் கூடான் உலகர்
கயங்கு நெறியில் உயங்கி மயங்குவன்
பாழ்நிகர் புந்தியர் பாலிற் பொருந்தான்
எப்பா டும்படான் எவரையும் கூடான்
கபடரைக் காணில் காதம் போவான்

கங்குலும் பகலும் கருதுவிவ காரத்
தடத்திடை வீழ்ந்து தயங்குறு நயங்கள்
சாருவன் கூறுவன் தருக்குவன் எவைக்கும்
அடங்குவன் வறிதே அமைதல் இல்லான்
இவனை மடியில் இருத்தித் திடமொழி

செப்பிடச் சோர்வு செறிவ தெனக்கே
இவன்பால் செய்வ தேதும் அறியேன்

மாயையின் மூன்றாவது பிள்ளை : சித்தம்

செறிதரு கோளுள சேயிழை யாள்பினும்
நையப் புணர்ந்து நாள்பட வருந்தி
நாடி நாடி நாயைஈன் றதுபோல்

உணர்விலி என்றே உலகர் ஓதும்
சித்தம் என்னும் சிறிய குழவியைப்
பயந்து கரத்தில் பதற எடுத்தனள்
கரைதரு விண்ணீர்க் கடிதடம் ஆகக்
கதிர்விடும் உடுக்கள் கறங்குமீ னாக

மதியைத் தாமரை மலராய் மதித்ததில்
மூழ்கப் பிடிக்க முன்னங் கொய்திட
எண்ணுவன் எழுவன் எட்டுவன் சிறிதும்
நேரா திளைத்தே நிலைகள் பற்பல
வான்கண் டவன்போல் வாயாற் கொஞ்சுவன்

எனையும் கூவுவன் இவனிடர் பலவே
இடர்பல இயற்றி இழுக்கும் கொடியன்
இவன்செயல் நிற்க இவன்தாய் வயிற்றில்

மாயையின் நான்காவது பிள்ளை : அகங்காரம்

தாருகன் என்னும் தறுகண் களிற்றைத்
தந்தமா யைக்குத் தனிமூத் தவளாய்

அகங்கா ரம்எனும் அடங்காக் காளை
அவனி மூன்றும் அதிர்ந்து கவிழக்
கடைமுறை பெற்றுக் களித்தனள் அவன்செயல்
கருதவும் பேசவும் கனிவாய் கூசுமே
கூற்றுவர் கோடி கொண்டுதித் தால்என

முளைத்து வளர்ந்தனன் மூத்தவன் மூழை
இளையவன் காளை எனும்இலக் கியமாய்
முன்னுள மூவரை முடுகி ஈர்த்தே
எண்ணில் விளையாட் டெழுப்புந் திறத்தன்
எல்லா ஆற்றலும் என்பால் உளதெனத்

தருக்குவன் இவன்தன் சங்கடம் பலவே
தன்னைத் தானே தகைமையில் மதிப்பன்
தரணியில் பெரியார் தாம்இலை என்பான்
மாதின் வயிற்றில் வந்தவன் எனாது
தானே பிறந்த தன்மைபோல் பேசுவன்

விடியும் அளவும் வீண்வா திடுவன்
வாயால் வண்மை வகைபல புரிவான்
ஓதவன் பெருமை ஈதவன் இயல்பே
சொல்லினும் கேளாத் துரியோ தனன்என
வானவர் தமக்கும் வணங்கா முடியன்

முன்வினை யாவும் முற்றும் திரண்டே
உருக்கொடிங் கியம்பொணா ஊறுகள் இயற்றுவன்.
பிள்ளையும் அல்லன் கொள்ளியும் அல்லன்
இன்னும் இவன்செயும் இடர்பல வற்றை
எவர்பால் சொல்லி என்துயர் ஆற்றுவேன்

பாதகி துன்பம் பவக்கடல் ஏழும்
மக்கள் துன்பம் மலையோர் எட்டும்
நீளல்போ தாதென நெஞ்சில் நினைத்தோ
அவளது சூழ்ச்சி அற்புதம் அற்புதம்
தொல்லை மரபில் தொழில்பல கற்ற

### எனது மூன்றாவது மனைவி : காமியம்

உலவுறு காமிய ஒண்டொடி என்னும்
கபடவஞ் சகியாம் களத்தினைக் கொணர்ந்து
பேய்பிடித் தவன்பால் பெரும்பூதம் கூட்டித்
தான் மணந் ததுபோ தாதிங் கென்றுபின்
மாற்றுகா லுக்கு மறுகால் ஆக

மாட்டி மிகமன மகிழ்ந்தாள் கூர்வேல்
கண்ணினை யாள்நெடுங் கடல்சூழ் உலகில்
நிறைந்துள யாரையும் நெருங்குவள் கணத்தில்
இவள்செயும் வீரம் எண்ணி விளம்ப
உடலெலாம் நாவாய் உறினும் ஒண்ணா

ஒருத்தியே இரண்டங் குருகொடவ் வவற்றில்
பலவாய்ப் பலவுளும் பற்பல வாய்உரு
பொருத்த முறவே புரிவள்அவ் வவற்றில்
பலகால் புணர்ந்து பயன்வலி போக்கி
ஓருருக் கரும்பும் ஓருருக் காஞ்சியும்

ஓருரு அமுதமும் உண்ண அளிப்பாள்
விட்டிவை எல்லாம் பட்டினி யாக்குவள்
ஓருரு வடிவால் உயர்பஞ் சணைமேல்
அகமகிழ் சுரதம் அளித்துக் களிப்பள்
ஓருருத் தன்னால் உறுநிலப் பாய்மேல்

என்பு நோவ இழுத்தே அணைவள்
இங்ஙனம் பற்பல ஏழைக் குறும்புகள்
இயற்றி எவருமே ஏக்கங் கொளவே
இவள்முன் நம்செபம் என்றும் சாயா
அரகர என்றே அரற்றி மெலிவேன்

மூன்று பிள்ளைகள் : முக்குணங்கள்

இவ்வா றென்னை இழைத்திடுங் கொடியாள்
முக்குணம் மூன்றும் மூவுறு எடுத்தே
வயிறு கிழிய வந்த சிறார்கள்
மூவர் தமையுமம் மூவரும் அறியார்
வெலவரும் இவரால் மேலொடு கீழ்நடு

ஆய உலகும் அவ்வுல குயிரும்
பற்பல நெறியில் பாடுபட் டாரெனில்
எளியேன் பாடிங் கியம்பவும் படுமோ
இவர்கள்தம் இயல்பை எண்ணவும் பயமாம்
பாரெலாம் தாமாய்ப் பரவும் இவர்தாம்

ஏற்றுவர் இறக்குவர் எங்கு நடத்துவர்
இயற்றுவர் கீழ்மேல் எங்கு மாக
உவகை ஊட்டுவர் உறுசெவி மூடத்
திட்டுவர் பலவாய்த் திரண்டு திரண்டே
ஆற்றுறு மாற்றலே ஆற்றல் அரிதாம்

இவ்வுல கதனில் என்கண் காண
ஆயிழை யாளை ஆய்ந்து மணந்த
நாளில் தொடங்கிஇந் நாள்பரி யந்தம்

மனஞ்சலித் திடவே வலிய விலங்கினைத்
தாளில் இட்டுத் தயங்கி அலைந்தேன்

வீண்சஞ் சலமென விளம்பும் துகளை
முடிமூழ்க வாரி முடித்திட் டேனால்
ஈட்டிய பொருளால் இற்பசு ஈந்தே
எருமை தன்னை அருமையா யடைந்தனோ
ஆற்ற முடியா தலைவேன் எனவும்

குறித்தங் கெடுத்திடும் கூவல் நீரை
விழற்கு முத்துலை வேண்டிட் டிறைத்துத்
துணைக்கரம் சலித்தே துயருற் றேனோ
காற்றினும் விரைந்தே காரான் பாலைக்
கமரிடை ஏனோ கவிழ்த்தும் கலங்குவேன்

கலநீர் தன்னைக் கண்ணிற் சிந்திக்
கழறிக் குழறிக் கனிஉடல் களைக்கச்
சிலைநேர் நுதலில் சிறுவியர் வரும்ப
அருந்தொழில் செய்திங் கடைந்த பொருளைச்
சிவபுண் ணியத்தில் செலவிற் கலவாது

பெண்சிலு குக்குப் பெரிதும் ஒத்தேன்
பகலும் இரவும் பாவிகள் அலைத்தனர்
இவர்கள் சல்லியம் ஏற்பவர் ஆரெனக்
கூக்குரல் கொண்டு குழறுவன் எழுவன்
கிணற்றில் மண்ணைக் கெல்லப் பூதம்

தோன்றிய தென்னும் சொல்லை ஒத்தது
இவரூ டாட என்னால் முடியுமோ
அவளுக் கிவள்தான் அறியவந் தாளெனும்
மூன்று மாதரும் முழுப்பாய் சுருட்டிகள்
இவர்களில் ஒருவரும் இசையவந் தாரலர்

இச்சை வழியே இணங்கி வலிவில்
மணமது கொண்டு வாழ்ந்து வருகையில்
சண்டன் மிண்டன் தலைவர் என்ன
புவிமிசைப் பாதகர் போந்திங் குதித்தனர்
இவரால் நேர்ந்த எண்ணிலாத் துயரைப்

பொறுப்ப தரிதாம் வெறுப்பது விதியே
பாவ மின்னும் பற்பல உளவே

### எனது குடிக்கூலி வீடு : தேகம்

குடும்பத் துடனே குடித்தனஞ் செய்யக்
குடிக் கூலிக்குக் கொண்ட மனையில்
கண்ட காட்சிகள் கனவிரோ தங்கள்

இராமா யணத்தும் பாரதத் தும்இலை
இழிவினும் இழிவது எண்சாண் உள்ளது
மலமும் சலமும் மாறா ஒழுக்கது
சுற்றினும் ஒன்பது பொத்தல் உடையது
சீழும் கிருமியும் சேர்ந்து கிடப்பது

என்புதோல் இறைச்சி எங்கும் செந்நீர்
ஆய்ந்து செய்த ஆகா முற்றது
அகலல் அணுகல் புகலல் இகலல்
அணிகள் துணிகள் அணிவ தாய
சால வித்தைகள் சதுரில் கொண்டது

கிடந்தும் இருந்தும் நடந்தும் பற்பல
பகரிம் மனையால் படும்பா டதிகம்

### எனது குடிக்கூலி வீட்டின் தலைவர் : வாத பித்த சிலேஷ்மம்

இம்மனைத் தலைவராய் எழுந்த மூவர்
தறுகட் கடையர் தயவே இல்லார்
பணிசிர முதலாய்ப் பாதம் வரையில்

வாது செய்திடும் வண்கால வாதி
பெருகுறு கள்ளினும் பெரிதுறு மயக்கம்
பேதைமை காட்டும் பெருந்தீப் பித்தன்
கொடுவிடம் ஏறிடுங் கொள்கைபோல் இரக்கங்
கொள்ளா திடர்செய் குளிர்ந்த கொள்ளி

இவர்கள் என்னோ டிகல்வர் இரங்கார்
எனக்கு நேரும் எழ்மையும் பாரார்

## நான் கொடுக்கும் குடிக்கூலி : பிண்டம்

பிண்ட மென்னும் பெருங்குடிக் கூலி
அன்றைக் கன்றே நின்று வாங்குவர்
தெரியா தொருநாள் செலுத்தா விட்டால்

உதரத் துள்ளே உறுங்கனல் எழுப்பி
உள்ளும் புறத்தும் எண்ணெரி ஊட்டி
அருநோய் பற்பல அடிக்கடி செய்வர்

இவர்கொடுஞ் செய்கை எண்ணுந் தோறும்
பகீரென உள்ளம் பதைத்துக் கொதித்து

வெதும்பும் என்னில் விளம்புவ தென்னே
சினமிகும் இவர்தம் செய்கைகள் கனவிலும்
நினைந்து விழித்து நேர்வதன் முன்னர்

## மதவாதிகள் வருகை

மற்போர் கருதி வந்தவர் போல
ஓதும்வே தாந்தம் உரைப்பர் சிலபேர்

வாட்போ ரினுக்கு வந்தவர் போல
வயங்குசித் தாந்தம் வழங்குவர் சிலபேர்
தண்டா யுதப்போர் தாங்குவார் போல
இதிகா சத்தை இசைப்பவர் சிலபேர்
உலக்கைப் போரை உற்றார் சிலபேர்

இலக்கண நூலை இயம்புவர் சிலபேர்
கற்போர் விளைக்கக் காட்டுவார் போலச்
சமய நூல்களைச் சாற்றுவர் சிலபேர்
வாய்ப்போ ருக்கு வந்தவர் போல
விவகா ரங்கள் விளம்புவர் சிலபேர்

மடிபிடி போர்க்கு வாய்ந்தவர் போல
மததூ ஷணைகள் வழங்குவர் சிலபேர்
கட்குடியர் வந்து கலக்குதல் போலக்
காம நூலைக் கழறுவர் சிலபேர்
விழற்கு நீரை விடுவார் போல

வீண்கதை பேச விழைவார் சிலபேர்
இவர்கள் முன்னே இவருக் கேற்ப
குரல்கம் மிடவும் குறுநா உலரவும்
அழலை எழவும் அவரவர் தம்பால்
சமயோ சிதமாய்ச் சந்ததம் பேசி
எனது நித்திய கருமம்
இயன்ற மட்டில் ஈடுதந் தயர்வேன்
பின்னர் மனையின் பின்புறத் தேகிக்
கலக்கு மலத்தைக் கடிதே கழித்துக்
கல்லில் அழுக்கைக் கழற்றுதல் போன்று
பல்லின் அழுக்கைப் பண்பின் மாற்றிச்

சோமனைப் போலவெண் சோமனைத் துவைத்து
நன்னீர் ஆடி நறுமலர் கொய்து
தேவருக் கேற்ற திரவியங் கூட்டிப்
பாவையை வைத்துப் பாடி ஆடும்
சிறாரைப் போலச் செய்பணி யாற்றி

மண்ணின் சுவர்க்கு வண்சுதை தீட்டல்போல்
வெண்ணீ றதனை விளங்கப் பூசிப்
புகழ்ருத் ராக்கப் பூனை என்ன
உற்ற செபவடம் உருட்டி உருட்டிக்
குரண்டகம் போன்று குறித்த யோகம்

செய்த பின்னர் சிறிது நேரம்
அருத்தியிற் பூசனை அமர்ந்தங் காற்றி
ஊன்பிண் டத்திற் குறுபிண்ட மீந்து
குடிக்கூ லிக்கடன் குறையறத் தீர்த்துப்
பகல்வே டத்தால் பலரை விரட்டி

நித்திரைப் பரத்தையை நேர்ந்து கூடவும்
பொழுதும் சரியாய்ப் போகின் றதுவே

---

இது, முத்துசாமி முதலியாரின் திருமணத்திற்குத் தாம் வர இயலாமையைக் குறித்து வரைந்த திருமுகம், முத்துசாமி முதலியார் வீரசைவர். பெருமானின் மாணாக்கர்களில் ஒருவர், தாம் இயற்றிய தோத்திரப் பாக்களுக்கு பெருமானிடம் சாற்றுக்கவி பெற்றவர். பெருமானார் வடலூரிலிருந்த போது சென்னையில் இவருக்கு திருமணம் நிகழ்ந்தது திருமணத்திற்கு எழுந்தருளி வாழ்த்த வேண்டுமென விரும்பினார். அவ் விருப்பம் நிறைவேறவில்லை அதனால் வருந்திய முத்துசாமி முதலியார்க்குப் பெருமானர் இக் குடும்ப கோரத்தைப் பாடி, கொந்தமூர் சீனிவாச வரதாசாரியர் மூலமாய் அனுப்பினர். முதலியார் இவ்வகவலை மனப்பாடஞ் செய்து வைத்திருந்தார். மனப்பாடமாக அவர் சொல்லக்கேட்டதனை மோசூர் கந்தசாமி எழுதி வைத்தார். அது சித்தாந்த சரபம் கலியாண சுந்தர யதீந்திரரால் பார்வையிடப் பெற்று, காஞ்சி நாகலிங்க முதலியாரால் நடத்தப்பெற்ற தொழிற்கல்வி 1914 ஜூலை (ஆனந்த, ஆடி தொகுதி 1, பகுதி 4) இதழில் ஒருபாதியும் (ஆவணி, தொகுதி 1, பகுதி 5) ஆகஸ்டு இதழில் மறுபாதியுமாக வெளியாயிற்று.

## 4. திருமுக அகவல்

நிலைமண்டில ஆசிரியப்பா

திருச்சிற்றம்பலம்

அகண்டமெய்ஞ் ஞான அற்புத அமல
பரம்பர அனாதி பவ பராபர
புண்ணிய சைவ போத பூரண
சச்சிதா நந்த சாக்ஷாத் கார
நித்திய நிரஞ்சன நிமல நிராமய

எண்குண விநோத இன்ப சுபாவ
சுத்த நிட்கள சுயம்பிர காச
சிவக்கியான சித்தி சித்தோப தேச
பதிபசு பாசப் பண்புரை தேசிக
விபூதி ருத்திராக்க பூடண வடிவ

சர்வ வல்லப சாந்த சித்த
தயாநிதி எனவளர் சாமி யவர்கள்
ஸ்ரீதிவ் வியோபய செந்தா மரையாம்
திருவடிக் கடியேன் திருச்சிற் றம்பலம்
காசறு காவிரி கங்கை யாதிய

வாச நீரால் மஞ்சனம் ஆட்டி
மல்லிகை முல்லை மாமலர்க் கொன்றை
மயிலை முதற்பூ மாலை சாத்தி
தூய வாசத் தூப தீப
நைவேத் தியமுதல் நண்ணுப சாரம்

கூடுற இயற்றிக் கூவிள பத்திரம்
ஆயிரம் அவையால் அருச்சனை செய்து
உள்ளம் குழைய உரோமம் சிலிர்ப்பப்
பாடி ஆடிப் படிமிசை வீழ்ந்து
அன்புறும் அங்கம் ஐந்தொடும் எட்டொடும்

இன்புறத் தெண்ட னிட்டவிண் ணப்பம்
திருவளர்உலகில் சீர்பூ ரணமென்று
ஒருபெயர் நிறீஇ ஓங்கிய தணிகைக்
குன்றிடை விளங்கும் குமார தணிகைக்
நன்றிடை யாவகை நவின்மணி வார்த்தை

கார்நிகர் வண்கையும் கல்விப் பெருக்கும்
பார்நிகர் பொறையும் பண்பும் பான்மையும்
சீரும் சிறப்பும் திறனும் செல்வமும்
யாரும் புகழ்தரு மியல்புநல் லறிவும்
எம்பால் அன்பும் எமதருள்உடையோர்

தம்பால் சார்பும் தணப்புறாத் தன்மையன்
தானமீ ரெட்டும் தருவோர் நாண
ஈனமில் அவற்றின் எல்லைமேல் ஒன்றின்
நான்கிலோர் பாகம் நண்ணிய தானம்
தான்கிளர் உலகில் சால்புடை யவர்தம்

கண்களிப் புறவும் காதிசை பெறவும்
ஒண்களிப் பொடுமன முவந்துவந் துருகவும்
தருபவன் புரசைச் சபாபதி எனும்பெயர்
மருவிய கலைவலோன்* மகிழ்வொடும் கேட்க
எம்மிடை ஒருவன் எளிமையில் சிறந்தோன்

செம்மையிற் போந்தென் சிறுமனைக் கிழத்தி
எந்தாய் நுந்தமை ஈன்றநற் றாயின்
நந்தா அருள்திரு நாமம் கொண்டனள்
ஆங்கவள் தன்னை அப்பெய ரால்அழைத்து
ஈங்கெவ் வேலையும் இடுதற் கஞ்சினேன்

ஈதல தும்க்கும்ஓர் இழிவுண் டிதனால்
ஆதலின் அப்பெயர் அகற்றுதற் காயிரம்
பொன்வேண்டும் என்றனன் பொன்வடி வல்லது
பொன்வே றிலையால் பொன்னுடை யவன்எம்
மாதுலன் ஆதலின் வலிவிற் கைக்கடன்

வாதுறக் கேட்டலும் வாங்கலும் ஈனம்
தரம்பெறும் உமது தந்தையோ எனில்அவர்
இரந்துழல் கின்றதை யாவரும் அறிவர்
நின்மல ராகிய நீரோ என்றால்
நென்மலி உலகின் நின்கண் காண

---

* புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார். மேல் ஆறு அடிகளில் அட்டாவதானம் குறிப்பிடப்பெற்றது.

ஒருமணஞ் செய்தோர்க் குறுதுயர் பலஉள
இருமணஞ் செய்த எமக்கெத் தனையோ
சங்கடம் அதுநின் றனக்குந் தெரியும்
எங்கணும் நின்போல் எமக்கன்பினர் இலை
அதனால் நின்பால் அவனை அனுப்பினம்

இதமே அன்றி அகிதம் இசையா
நெடும்பொற் புடையோய் நீயும் எம்போல்
குடும்ப பாரம் கொண்டனை ஆதலின்
ஆயிரம் என்றதில் அரைப்பங் கேனும்
காயகம் அறியோய் காற்பங் கேனும்

இல்லைஎன் னாமல் எம்முகம் நோக்கி
நல்லைநீ அவர்க்கு நல்குவிப் பாயே.

திருச்சிற்றம்பலம்

## 5. திருமுகப் பாசுரம்

**மதுரை திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம்**
**288வது குருமகாசந்நிதானம்**
**ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகத் திருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களுக்கு வரைந்த திருமுகப் பாசுரம்.**

நிலைமண்டில ஆசிரியப்பா
திருச்சிற்றம்பலம்

திருவளர் மார்பனும் திசைமுகத் தவனும்
உருவளர் தேவரும் உணர்ந்திடப் படாத
சச்சிதா னந்த சாக்ஷாத் கார
சொச்ச நித்திய சுயம்பிர காச
நிர்க்குண நிச்சல நிமல நிராமய

சிற்குண தற்பர சிற்பர சின்மய
அகள அற்புத அனந்தா னந்த
சகள மத்திய சத்திய சத்துவ
அகண்ட பூரண அருளா னந்த
மகண்ட விண்டல வாணர்கள் வந்தித

தத்துவ சொரூப தத்துவா தீத
தத்துவ காரண தத்துவ ரகித
விச்சுவ சொரூப விச்சுவ காரண
விச்சுவ ரகித விச்சுவா தீத
பிரணவ சொரூப பிரணவ காரண

பிரணவ ரகித பிரணவா தீத
பஞ்சாக் கரப்பொருட் பாங்குறு வடிவ
எஞ்சாக் கருணை யெனுந்திரு வுருவ
நாத வடிவ நாதநா தாந்த
வேத வடிவ வேதவே தாந்த

உள்ளமர் ஒளிய ஒளியினுள் ஒளிய
கள்ளமில் அன்பர் கண்ணமர் வெளிய
பெரியதில் பெரிய பெருங்குணக் கடல
அரியதில் அரிய அனாதி போதக
ஆகம வடிவ ஆகம முடிவ —

ஆகம நிலய ஆகம காரண
சைவசித் தாந்த ஸ்தாபகஞ் செய்த
தெய்வ மகத்துவ சிறப்புறு நெறிய
ஞான காரண ஞானமெய்ச் சொருப
ஞான நாடக ஞானசம் பந்த

தேவ தேவ சிவசிவ சிவஎன
யாவரும் துதிக்க இனியதென் பாண்டி
நாட்டிடை மதுரா நகர்த்திரு மடாலயத்து
ஈட்டிய அருளால் எழிலருள் வடிவங்
கொண்டமை அடிமை கொண்டருள் புரிந்த

தண்டமிழ் மறைமொழி தருந்தனி முதலே
மூவாண் டதனில் மூவுல கும்தொழத்
தேவாண்ட ஞானத் தெள்ளமு தருந்திய
மணியே என்கண் மணியே சைவ
மணியே தெய்வ மணியே அணியே

முத்துச் சிவிகையின் முளைத்தெழும் இளங்கதிர்
ஒத்துத் தனியமர்ந் தருளிய ஒளியே
சைவந் தழைக்கச் சமண்கழு வேறத்
தெய்வநீ றளித்த திருவருட் குன்றே
பிழைத்தலில் என்பைப் பெண்ணுரு வாக

அழைத்தருள் புரிந்த அற்புத அமுதே
சரியை யாதிய சாதுர்ப் பாதமும்
தெரியநல் லோர்க்குத் தெரித்தருள் தெளிவே
பாலொடு கலந்த பழம்போல் இனிக்க
நூலொடு மெய்ம்மொழி நுவன்றருள் பதியே

தவமே தவத்திற் சார்தரும் பயனே
நவமே சாந்த நகைமுக மதியே
செவ்விய கரும்பே தேனே கனியின்
திவ்விய சுவையே தெவிட்டா மருந்தே
அஞ்செழுத் துண்மையை அறிந்திட அடியேன்

நெஞ்சழுத் துறஅருள் நீள்தயா நிதியே
என்னொரு தாயே என்னையீன் றோனே
என்னுயிர்க் குயிரே என்பெரும் பொருளே
என்னுடை அறிவே என்னுளத் தன்பே
என்னுயர் கதியே என்னுடைக் குருவே

அடியேன் புரியும் ஆயிரம் பிழையும்
படியாற் பொறுத்துப் பாங்கருள் பரமே
எல்லாம் வல்ல இறையே அடைந்தவர்
பொல்லாங் கெல்லாம் பொறுத்தருள் பொறையே
முற்றும் உணர்ந்த முதலே உலகப்

பற்றை அகன்றநற் பண்பினர் உறவே
ஆனசம் பந்தநல் ஆறு முகத்திரு
ஞானசம் பந்த ஞானதே சிகனே
போற்றிநின் சேவடி போற்றிநின் பூம்பதம்
போற்றிநின் தாள்மலர் போற்றிநின் கழற்கால்

குற்றமும் குணமாக் கொண்டருள் புரியும்
போற்றிநின் கருணைப் பெரும்பெயல் அதற்கு
அட்ட மாக அனந்தந் தெண்டன்
இட்டமா வடியேன் இட்டவிண் ணப்பம்
திருச்செவிக் கேற்றுத் திருவுளத் தெளியேன்

உருச்செவி அறியா உறுபிழை பொறுத்திட
வேண்டு நின்னருள் வேண்டுநின் கருணை
வேண்டும் வேண்டும் வேண்டும் என்னெனில்
என்னென உரைக்கேன் என்னென உரைக்கேன்
பொன்னன நினது பூம்பதம் தரிசித்து

அன்பர்கள் எல்லாம் அவ்விடை வாழ
நன்பயன் அறியா நாயேன் ஒருவனும்
நன்னிதி அனையநின் சந்நிதி அதனில்
மன்னுநின் கருணை வடிவக் காட்சியைத்
தரிசித் தின்பத் தனிக்கடல் ஆடப்

பிரியத் துடனே பெற்றிலா தந்தோ
தகவிலேன் நெடுநாள் தனித்துச் சேய்மையில்
புருடனைப் பிரிந்த பூவையைப் போல
வாழ்விற் குறைந்து மனந்தளர் வெய்தித்
தாழ்வுறு நாணந் தலைக்கொள நின்றேன்

ஆதலாற் சுவாமிகள் அருளிற் புரிந்த
தீதிலாத் திருமுகத் தெய்வந் தன்னை*
தரிசித் துள்ளந் தழைத்து வணங்கிப்
பரிசித் தன்பொடு பரவிப் போற்றி
வணங்கி வணங்கி வாசித் துடம்பும்

உயிருந் தழைக்க உவந்தா னந்தக்
கூத்தினு வரையிற் குயிற்றிநிற் கின்றேன்
என்னினும் அந்தோ என்செய்வேன் பிரிந்த
புன்னெறி நினைத்துப் போந்த நாணமும்
அச்சமும் என்னை அடிக்கடி தகைக்க

நச்சிய வித்தனை நாளும் விண்ணப்
பத்திரஞ் செய்து பரவத் தாழ்த்தேன்
குத்திர மனத்துக் கொடியேன் செய்பிழை
மலையினும் கடலினும் மண்ணினும் பெரிதே
நிலையினும் அறியா நெடும்பிழை எந்தாய்

என்செய்தால் தீரும்என் செய்வேன் எளியேன்
பொன்செய்தா லன்னநின் பொன்மலர் அடியை
இரவும் பகலும் இடைவிடா துன்னிப்
பரவும் பரிசே பரிசென அருளே.

சென்னைப்பட்டணத்தைச்
சார்ந்த மயிலையில்
ஆனந்த வருடம் புரட்டாசி மாதம் 21 தேதி
5–10–1854

அடியேன்
சிதம்பரம்
**இராமலிங்கம்.**

---

* சுவாமிகள் வள்ளற் பெருமானாருக்கு அனுப்பியதாக இங்குக் குறிப்பிடப்பெறும் திருமுகம் கிடைக்கவில்லை

# 6. திருமுகப் பாசுரங்கள்

## திருவாவடுதுறை ஆதீனம்
## வித்துவான் தாண்டவராயத் தம்பிரான் சுவாமிகளுக்கு
## வரைந்த திருமுகப் பாசுரங்கள்

நூற்றுப்பன்னிரு சீரான் வந்த கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

அணிவளரும் உயர்நெறிகொள் கலைகள்நிறை மதிமகிழ்வை
அடையும்ஒளி யுடைய சடையோய்
அருளொழுக அமுதொழுக அழகொழுக இளநிலவின்
அளியொழுக ஒளிர்மு கத்தோய்
அமலநிலை உறவும்உறு சமலவலை அறவும்உணர்
வருள்கருணை மிகுகு ணத்தோய்
அடியர்வினை அகலஒரு பரமசுக நிலையருளு
மதுகருது திருவு ளத்தோய்
அநகசுப விபவசுக சரிதரக சிரகமந
அதுல அதுலித பதத்தோய்
அகிலசர அசரஅப ரிமிதமித அணுவும்அணு
வணுவும்இவை எனஉ ரைத்தோய்
அகிதவித விவிதபரி சயசகல விகலஜக
வரஸரஜ தளம்இ ழைத்தோய்
அகளமன ரமணவபி நிகடவபி நிபிடதட
அநதிசய சுகம்அ ளித்தோய்
அனுபக்ஷம் இதுசம்பு பக்ஷம்இது காண்கஎன்
றன்புடன் உரைத்த பெரியோய்
அதிக்கிராந் தத்தியல்பு திக்கிராந் தத்தியல்பின்
அமைதிஇஃ தென்ற அறவோய்
அதிகார போகஇல யங்கள்இரு வகைஇயல்
அறிந்திட உணர்த்தும் உணர்வோய்
அருவம்இஃ துருவம்இஃ தருவுருவம் இஃதென
அறைந்தறி வுறுத்தும் அறிவோய்
அபதேசம் வேதந கயஞ்சத்தி இயல்எலாம்
அலைவற விரித்த புகழோய்
அநநிய பரிக்கிரக சத்திவிளை வெல்லாம்கை
ஆமலகம் எனஇ சைத்தோய்
அத்துவா நெறிஆறும் ஒத்துவா னெறியா
றடைந்திடுக என்ற பரிசோய்
அவுத்திரியின் உத்திரம் உனக்கிசைவு றுத்துதும்
அமர்ந்திடுக என்ற இனியோய்

பணிவளரும் நிபுணகண பணகரண பரணவண
பரதயுக சரண புரண
பரம்பர சிதம்பர திகம்பர நிரந்தர
பரந்தர விளங்கு பரம
படகபட தடவிகட கரடகட கரியுரிகொள்
பகவ அரகர என்னவே
பவன்தகு சிவன்தனை உவந்தனை சுவந்தனை
பகர்ந்திடுக என்ற அமுதே
பகர்அகர உகரபர மகரகுண குணிகள்உறு
பரிசறிய உரைசெய் அரசே
பயன்தரு வயிந்துவ துவந்திகழ் சிவம்புகல்
பதம்தெளிய அருள்செய் இறையே
பதசிகர வகரநெறி அகரநக ரமகரஉ
பயஅபய நிலைசொல் மலையே
பவந்தெறு நவந்தரு குவம்பரி பவம்பொடி
படும்படி எனும் புனிதமே
பதியுதவு பதிதனது பரிசும்அஃ தடையும்ஒரு
பசுஇயலும் அருள்செய் பொருளே
பந்தநிலை அந்தநிலை இந்தநிலை என்றுபர
பந்தமொழி தந்த மணியே
படியும்இடர் வடியும்இருள் விடியுமணி மொழிமறைகள்
படியும்என நொடிம ருந்தே
பஞ்சமல கஞ்சுகமும் எஞ்சும்வகை பஞ்சம்இலை
பஞ்சமகம் என்ற நிதியே
பதிதநெறி விடுகஒரு பதிதனெறி தொடுகஒளி
படரும்வகை எனும்என் உறவே
பங்கம்அற அங்குமுள இங்குமுள எங்குமுள
பண்டைவெளி என்ற ஒளியே
பலிதஅநு சிதஉசித யுகளஇக பரம்இரவு
பகல்என விளம்பு வளமே
பன்னிலையும் முன்னிலையும் நின்னிலையும் என்னிலை
படிந்துவிடு கென்ற நன்றே
திணிவளரும் அறிவுகொடு தொடர்வரிது பெரிதுபர
சிவம்அது வெனும் செல்வமே
சிவசா தனம்பெறார் பவசா தனம்பெறுவர்
தெளிகஎனும் அளிகொள் குருவே
திருநீறு காண்நினது கருநீறு காணுவது
தேர்ந்துணர்க என்ற தெளிவே
சிவமேவு சமயம்அது தவமேவு சமயம்இது
சித்தம்என ஓது முதலே

சிவனடியை வாழ்த்தாத வாய்ஊத்தை வாய்கொடிய
செவ்வாய் எனச்சொல் நிறைவே*
சிவமான்மி யம்புகாக் காதுகா தென்னும்
தெலுங்கமொழி என்ற ஒன்றே
சிவனடி வணங்காத தலைசிதலை அவன்விழாத்
தெரிசியாக் கண்கள் புண்கள்
சிவனைநினை யாச்சிந்தை நிந்தையாம் இதுநமது
சித்தாந்தம் என்ற திருவே
திகழ்பரம னடவும்விடை மனையினமும் அவன்முனோர்
செறிகமரின் அமுதுண்ட நாள்
சேர்வுற விடேல்என்ற ஒருமரக் கறியும் அச்
சிவபிரான் விடய மாகத்
திருவாத வூரடிகள் திருவாய் மலர்ந்தருள்
திருக்கோவை யார்செய். கையுஞ்
செப்புகள னக்கடாஅய் நின்றவர்க் கிறைமொழி
தெரிக்கும் சிறப்பு வாய்ந்தே
சீரைந் தெழுத்தினால் இலகுநக ரின்கண்ஓர்
திருவைந் தெழுத்தின் ஓங்கும்
தேசிகத்✤ தண்ணமுத வான்கடல் படிந்தருள்
தெள்ளமுதம் உண்டு தேக்கிச்
செறிபவக் கோடையற அருண்மழை பொழிந்தொளி
சிறந்தோங்கு சீர்க் கொண்டலே
செய்யதாண் டவராய தூயவாழ் வேநினது
திருவடிக் கன்பு கொண்டே
தணிவளர் விராகமது பெற்றிலேன் காமரந்
தானும்அறி யேன் துன்பினைத்
தலிதஞ்சே யேன்மங்கு லங்கொண்டு நகபதந்
தன்னிற் பருத்து வினையைத்
தாங்குசும் மாடாயி னேன்நவ விராகமுதல்
சாற்றுசும் மாடு மட்டுந்
தங்குமொழி முதலைஉடை யேன்முதற் கயலில்
தயங்குமொரு நாமம் உடையேன்
தகுமுறைக் கடைமூன்றி னுஞ்சுவசி யுற்றிலேன்
சதுரிலேன் பஞ்ச நயவேன்
சட்டியில் இரண்டின்ஒன் றேய்ந்திலேன் ஒன்றுபோற்
றானுழைத் துழலு கின்றேன்

---

* நிறைவே – ச.மு.க. பதிப்பு.

✤ சீரைந் தெழுத்தினால் இலகும்நகர் – (திரு) ஆவடுதுறை
திருவைந்தெழுத்தின் ஓங்கும் தேசிகர் – நமசிவாய தேசிகர் திருவாவடுதுறை ஆதினத்தின் ஆதி குருமூர்த்திகள்

தண்டன் ஆயிரமிட் டுரைக்கும்வின் ணப்பமது
தான்என்னை யெனில் உன்னடியார்
சைவயோ கஞ்செய்வர் யானுமொரு கால்போன
சைவ யோகஞ் செய்குவேன்
தட்டுறா ஞானம்உடை யார்நினது தொண்டர்யான்
தானும்அது சுட்ட உடையேன்
சாந்தநெஞ் சுடையர்நின தன்பர்யான் மணம்வீசு
சாந்தநெஞ் சதுவும் உடையேன்
சகசநிய மம்பெறுவர் நின்அடியர் அடிமையும்
சகச நியமம் பெற்றுளேன்
தனிவீடு விழைவர்நின் அன்பர்யான் பலகூட
சாலையுள வீடு விழைவேன்
சார்புலக் கள்வர்வரின் அஞ்சுவர்நின் அடியர்யான்
தனிவரினும் மிக அஞ்சுவேன்
தாழ்பொறி அடக்குவர்நின் அன்பர்யான் உயர்பொறிகள்
தமைஅகம் அடக்க வல்லேன்
தமியனேன் தன்னைநீ கைவிடேல் விடினும்நின்
தன்னைநான் விடுவ னல்லேன்
தகுவழக் கிட்டெனினும் நின்பால் எனக்குமொரு
சார்புறச் செய்கு வேனே. 1

வெண்பா

பண்டு குலம்பேசப் பரிந்ததில்லை ஈண்டென்னைக்
கொண்டு குலம்பேசக் குறிப்பானோ – தொண்டுசெய
நீண்டவரா யப்பெருமா னீக்குந் திருத்துறைசைத்
தாண்டவரா யப்பெருமான் றான். 2

கட்டளைக் கலித்துறை

வானேர் அமரர் வருந்திக் கடைந்த மருந்துவந்து
தானே ஒருசிறு நாய்க்குக் கிடைத்த தகவெனஎம்
மானேர் துறைசைநற் றாண்டவ ராய மணிஎனது
பானேர் கிடைத்தும் பயன்கொள்கி லேன்வெறும் பாவியனே. 3

மின்னேர் சடைமுடித் தாண்டவ ராய வியன்றவநின்
றன்னேர் அடைதற் கெளிதாக நான்பெற்றுந் தாழ்த்துகின்றேன்
பொன்னே கொடுத்தும் ஏனுநா லடியின்* பொருட்கிலக்காய்
என்னே இருந்துழல் என்ஏழை வன்மதி என்மதியே. 4

* இங்கு மேற்கொண்டுள்ள நாலடியார்ச் செய்யுள் :
பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும் – அன்னோ
பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல
நயமில் அறிவி னவர்.
– பெரியாரைப் பிழையாமை 2 (162)

வருந்துக் கனவினுஞ் சோறறி யானை மணத்தி
விருந்துக் கழைப்பது போலேநின் பொற்பத
மருந்துக்கு மெய்சொல வாராத வென்றனை
தருந்துக்க ஊழ்விட மாட்டாது தாண்டவ 5

வாய்மட் டுமோமன் மட்டோஎன் ஆருயிர்ம
போய்மட் டுறுமின் சுவைமய மாக்குநின் பொன்மலர்
ஆய்மட் டமுதஞ் செவிக்கேற முன்முய லாமையிந
நாய்மட் டுமோதந்தை தாய்மட்டு மாஞ்சைவ நி* 6

திருச்சிற்றம்பலம்

# 7. திருமுகப் பாடல்கள்

## அன்பர்களுக்கு எழுதி விடுத்த திருமுகப் பாடல்கள்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

படிப்பதுநன் றெனத்தெரிந்த பாங்குடையாய்
மன்றுள்வெளிப் பரம னன்பே
தடிப்பதுநன் றெனத்தேர்ந்த சதுருடையாய்
அறநவின்ற தவத்தாய் வீணில்
துடிப்பதிலாத் தூயமனச் சுந்தரப்பேர்
உடையாய்என் தோழ கேள் நீ
அடிப்பதுமச் சிறுவர்களை அடிப்பதுநன்
றலஎன்மேல்ஆணை ஆணை.* 1

திருவோங்கு பொற்சபையும் சிற்சபையும்
நம்பெருமான் செய்யா நின்ற
உருவோங்கும் ஆனந்தத் தாண்டவமும்
கண்டினிதாங் குறைக யானும்
தருவோங்கு தில்லைநகர்க் கோரிருபால்
நாள்வரைக்குட் சார்கின் றேன்நம்
இருவோங்கள் குறையும்இறைக் குரைத்தகற்றிக்
கொளலாம்நீ இளையேல் ஐயா.✪ 2

---

* தாண்டவராய சுவாமிகளுக்கு எழுதிய ஆறுபாடல்களில் முதல் இரண்டு பாடல்களும் ஒரு திருமுகம் பின் நான்கு பாடல்களும் வேறோர் சமயம் எழுதியவை. 5, 6ஆம் பாடல்களில் புள்ளியிட்ட இடங்களில் ஏடுகள் சிதைந்துள்ளதாக ஆ.பா. குறிக்கிறார்.

* படிக்கும் பிள்ளைகளை அடிக்க வேண்டாம் எனப் பொன்னேரி சுந்தரம் பிள்ளைக்கு எழுதி அனுப்பியது.

✪ பொன்னேரி சுந்தரம் பிள்ளை வறுமைதீர வழிகேட்டபோது பாடி அளித்தது.

பண்ப னேகமும் திரண்டுரு
வாகிஎம் பாக்கியம் போல்வந்த
நண்ப னேநினைப் பிரிந்தநாள்
முதல்இந்த நாள்வரை உணவெல்லாம்
புண்ப னேர்ந்தபோ துண்டவாம்
கண்டுநிற் புல்லிநின் னுடனிங்கே
உண்ப னேல்அஃ துணவென
மதிப்பன்ஈ துண்மைஎன் றுணர்வாயே.✤ 3

திருவளருந் திறத்தாய் என்கண் ணனையாய்
நீ அனுப்பச் சிறியேன் தன்பால்
வருகடிதந் தனைஎ திர்கொண் டிருகைவிரித்
தன்பினொடு வாங்கி நின்றேன்
உருவளரு மணிமுடியாய்ச் சூட்டினேன்
கண்களிலே ஒற்றிக் கொண்டேன்
பொருவருமோர் முத்தமிட்டேன் பூசித்தேன்
வாசித்தேன் புளகுற் றேனே. 4

திருமயிலா புரியீசன் திருவருளால்
வேலெனும்பேர் சிறக்க வாழ்வோய்
ஒருமையிலா மற்றவர்போல் எமைநினைத்தல்
வேண்டாம்எம் உள்ளம் நின்றன்
கருமையிலாக் கருணைமுகம் காண்பதற்கு
விழைந்தங்கே கலந்த திங்கே
அருமையிலாப் பெருமையிலே இருக்கின்றேம்
இதுகடவுள் ஆணை என்றே.★ 5

---

✤ இதுவும் அடுத்த பாட்டும் இன்னார்க்கு எழுதியது என்பது விளங்கவில்லை

★ இராயல் ஹோட்டல் புதுவை வேலு முதலியார்க்கு எழுதியது மதுரைத் தமிழ்ச்சங்கம் ம.ரா. கந்தசாமிக் கவிராயர் தொகுத்த தனிச்செய்யுட்சிந்தாமணியில் (1908) உள்ளது. கொட்டாம்பட்டி, கருப்பையா பாவலர் தொகுத்து ஊ. புஷ்பரதசெட்டி & கம்பெனி வெளியிட்ட தனிச்செய்யுட்சிந்தாமணியில் (1901) இது சில பாட பேதங்களுடன் பின்வருமாறு காணப்படுகிறது.

திருமயிலா புரியீசன் திருவருளால்
வேலெனும்பேர் சிறக்க வாழ்வோய்
ஒருமையிலா மற்றவர்போல் எனைநினைத்தல்
வேண்டாம்என் உள்ளம் நின்றன்
கருமையிலாக் கருணைமுகம் காண்தற்கு
விழைந்ததிங்கே கலந்த தங்கே
அருமையிலாப் பெருமையிலே இருக்கின்றேன்
இதுகடவுள் ஆணை என்றே

ஆ.பா. இதனை இவ்வாறே திருமுகப் பகுதியில் சேர்த்துள்ளார் பாவலர் பாடத்தினும் கவிராயர் பாடமே பொருட்பொருத்த முடையது. சிறந்தது.

### நிலைமண்டில ஆசிரியப்பா

இறையருள் நிரம்ப இருத்தலான் மகிழ்ந்து
பிறையென வளருநம் பிள்ளை மணிக்கு
ஊருவிற் கட்டி உடனே உடையும்
அதுகுறித் தையநீ அஞ்சலை அஞ்சலை
இதுகுறித் தருள்நீ றிதற்குள் அடக்கஞ்
செய்துவைத் தனன்அத் திருநீ றெடுத்து
எய்துமுப் போதும் இடுகமற் றதன்மேல்
கொவ்வைச் சாறும் கோள்வெடி யுப்பும்
கவ்வக் கலந்து காய்ச்சிப் பூசுக
பூசுக உடைந்தபிற் பூரம் பூசுக
பாசுறு முருங்கைப் பட்டைச் சாற்றினில்.✹ 6

கல்வியிற் கேள்வியிற் கடவினுஞ் சிறந்து
அன்பறி வொழுக்கம் அமைந்தென் னிரண்டு
கண்போன் றென்பாற் கனிவுகொண் டமர்ந்த
குணரத் தினநீ குடும்பத் துடனே
தீர்க்க ஆயுளும் செல்வப் பெருக்கும்
நோயற்ற வாழ்வும் நுவலரும் கீர்த்தியும்
சிவந்திகழ் ஞானமும் சித்தியும் பெற்று
வாழ்க வாழ்க மகிழ்ந்து அருள்துணையால்
வாழ்க வாழ்க வளம்பெற வாழ்க.✦ 7

திருச்சிற்றம்பலம்

---

✹ கூடலூர் பேரை தேவநாத பிள்ளைக்கு எழுதியது. பிறைஎன வளரும் நம்பிள்ளை மணி எனக் குறிப்பிடப் பெறுபவர் தேவநாத பிள்ளையின் மகன் அய்யாசாமிப்பிள்ளை.

✦ இறுக்கம் இரத்தின முதலியார்க்கு எழுதிய 20ஆவது திருமுகத்தின் தலைப்பில் காணப்படுகிறது. (19–05–1864)

# 8. சாற்றுக் கவிகள்

## 1. நிட்டானுபூதி உரைக்கு

### அருளிய சாற்றுக்கவி✢

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

நலங்கொள்சிவ யோகமணம் நாற்றிசையு மணக்கும்
ஞானமணம் கந்திக்கும் மோனமணம் நாறும்
விலங்கலில்சித் தாந்தமணம் பரிமளிக்கும் இன்பா
வேதாந்த மணங்கமழும் வேதமணம் வீசும்
தலங்கொளுமெய் அத்துவிதத் திருமணமும் பரவும்
தனிமுத்துக் கிருட்டினப்பேர் தங்கியநம் பிரமம்
வலங்கொளுநன் னிட்டானு பூதியெனு நூற்கே
வாய்மலர்ந்த உரையெனுமோர் மாமலரி னிடத்தே.

திருச்சிற்றம்பலம்

## 2. சிதம்பரபுராணப் பதிப்புக்கு

### அருளிய சாற்றுக்கவிகள்❀

காப்பு

குறள்வெண் செந்துறை

திருச்சிற்றம்பலம்

சிதம்பர புராணம் இதம்பெறத் திருத்திய
சிதம்பர முனிவன் பதம்பர வியது.

---

✢ நிட்டானுபூதி சிறந்த அனுபூதி நூல். அருளியவர் திருக்கோவலூர் ஆதீனம் ஞானியார் மடாலயம், முதல் குருமூர்த்திகளாகிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகமெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள். உரைசெய்தவர் முத்துக்கிருஷ்ணபிரம்மம். இவ்வுரை மிகச் சிறந்த உரை 91 நூல்களிலிருந்து 410 செய்யுள்களை மேற்கோளாக உரையாசிரியர் எடுத்துக் காட்டுகிறார். இவ்வுரை பெருமானாரின் சாற்றுக் கவியுடன் 1851 இல் (விரோதிகிருதி, மார்கழி) அச்சாயிற்று.

❀ புராணத் திருமலைநாதர் இயற்றிய சிதம்பரபுராணத்தை மதுரை ஆதீனம் சிதம்பர சுவாமிகள் 1885இல் (இராட்சத, ஆவணி) அச்சிற் பதிப்பித்தார். இவை அப்பதிப்புக்கு அடிகள் அருளிய சாற்றுக்கவிகளாம். இச் சிதம்பர சுவாமிகள் பெருமானாருடன் பழக்கமிக்குடையவர். 1867இல் திருவருட்பா முதன் முதலில் அச்சிடப்பெற்றபோது. "**தண்ணீர் விளக்கெரித்த**", என்னும் வெண்பாவை நூற்சிறப்பாகப் பாடியவர்.

நிலைமண்டில ஆசிரியப்பா

செம்மலர்ச் செம்மலுந் திருத்தகு நிறத்தனும்
அம்மலர்க் கரத்திற் கம்மலர்க் கடவுளும்
படைத்திடல் முன்னாப் பயனுறு பெருந்தொழில்
நடைத்திற மூன்று நடாஅய்ப் பிறங்கிய
தத்தந் தலைமையிற் றாழ்வின்றி ஓங்குபு

சித்தந் திறமுறத் திருவருட் சார்த்திச்
சின்மய வடிவில் சிதாகா யத்திடைத்
தன்மய இன்பத் தனிநடம் புரியும்
காரண எண்குணா கார அகண்ட
பூரண பாரபர புனித சிற்பர

சிவநிலை இஃதெனத் தெளிவித் தழியா
நவநிலை ஞாங்கர் நண்ணி அனுபவத்
தனிச்சிவ ஞானந் தன்னைமூ வாண்டிற்
பனிப்புறச் சிவைமுலைப் பாலொடு மளாஅய்
ஊட்டிட உண்டிவ் வுலகெலாந் தழைப்ப

வாட்டமில் அமுத வாய்மலர் மலர்ந்து
தோடுடை எனுமறைச் சொல்லமு தளித்து
நாடுடைத் தாதையை நயப்பித் தருளிப்
பற்பல சைவப் பதிதொறும் அணுகிச்
சொற்பல பதிகச் சுருதிகள் புனைந்து

பொற்றிருத் தாளமும் புதுமணிச் சிவிகையும்
கொற்றவர் புகழ்மணிக் குடையும் சின்னமும்
சுந்தரக் காளமும் சந்தநற் றாரையும்
சிந்தரும் வெண்மணிப் பந்தரும் காசும்
பரம்பரன் அளிக்கப் பண்புடன் பெற்றோன்

வரம்பெறு மழவன் மகட்பிணி சவட்டி
மருகலில் வசியன் வல்விடந் தீர்ந்து
வருநெறி பற்பல மகத்துவம் புரியாக்
கூடலில் தென்னன் கூனும் குற்றமும்
வாடலில் அமணர்தம் மதமும் வாழ்க்கையும்

எளிதினின் முருக்கி இயல்புறும் ஆண்பனை
அளியுறு பெண்பனை யாகக் காட்டிஒண்
மயிலையில் என்பினை மங்கை யாக்கியுள்

அயர்வறு திருமணத் தடைந்தவர் தமக்கெலாம்
பெறலருஞ் சோதிப் பேருரு வளித்திவ்

வையமும் வானமும் மறையும் சைவமும்
உய்ய ஓங்கிய ஒருபெருங் குரவன்
ஞான சம்பந்த நாயகன் அருளால்
ஈன சம்பந்த மெல்லாம் ஒழித்தோன்
நரைவரும் என்றெணி நல்லறி வாளர்

இரைவறு குழவி யிடத்தே துறந்தார்
என்று நாலடிக்◆ கிலக்கிய மானவன்
மன்னுமா தவரெலாம் வழுத்தும் அருந்தவன்
எல்லா உயிர்க்கும் இதஞ்செய லன்றிப்
பொல்லாமை ஒன்றும் புணராப் புண்ணியன்

வாய்மையும் மாண்பும் வயம்பெறு மனனும்
தூய்மையும் தெளிவும் சுற்றமாக் கொண்டோன்
கனவினும் உலகைக் கருதாக் கருத்தினன்
நனவினிற் சுழுத்தி நண்ணிய திறத்தோன்
முப்பொருட் டிறனும் முழுதுணர் முனிவன்

எப்பொருட் கண்ணும் மெய்ப்பொருள் உணர்ந்தோன்
சிவமலா தொன்றும் சிந்தைவைத் தறியான்
பவமிலா நெறியே பற்றிய நிலையினன்
காமம் வெகுளி மயக்கெனும் கரிசினை
நாமங் கெடஉள் நலிவித்த வித்தகன்

துறவரில் துறவன் சுத்தமெய்ஞ் ஞானி
அறவரின் அறவன் அன்பரின் அன்பன்
திகழ்சிவ யோகி ஜீவன் முக்தன்
புகழ்இகழ் ஒன்றும் பொருந்தாப் புனிதன்
சிவநூல் முழுதும் தெளிந்த சத்துவன்

---

◆ இங்கு மேற்கொண்டுள்ள நாலடியார்ச் செய்யுள் :

நரைவரும் என்றெண்ணி நல்லறி வாளர்
குழவி யிடத்தே துறந்தார் – புரைதீரா
மன்னா இளமை மகிழ்ந்தாரே கோல்ஊன்றி
இன்னாங் கெழுந்திருப் பார். – இளமை நிலையாமை 1 (11)

பவநூல் மறந்தும் பாராத் திறலோன்
என்போன் றவர்க்கும் இன்னருள் புரிவோன்
தன்போன் றவரிலாச் சாந்த வேந்தன்
சைவம் பழுத்த தனித்தரு நங்குல
தெய்வமாம் மதுரைச் சிதம்பர தேவன்

புண்ணிய சிதம்பர புராணந் தன்னை
நுண்ணிய அறிவால் நோக்குபு திருத்தம்
ஏர்பெற இயற்றி யாவரும் பயின்றுயப்
பாருறும் அச்சிற் பதிப்பித் தருளிய
உதவியை நினைந்துளம் உவந்து முப்பொழுதும்
பதமருள் அவனருட் பதமிறைஞ் சுதுமே

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

உலகெலாம் புகழும் சிதம்பர வரலா
றுயிரெலாம் உணர்ந்துவீ டடைவான்
அலகுறா மடற்கண் எழுதுறா எழுத்தின்
அமைவித்த அருட்பெருங் கடலே
இலகுசீர்க் கூடன் மடாலயத் தமர்ந்த
எழிற்றிரு ஞானசம் பந்தத்
திலகசற் குருவின் அருள்பெறும் பொருளே
சிதம்பர மாதபோ நிதியே. 1

சிதம்பர வரலா றுலகெலா முணரத்
திருத்திஎம் போன்றவர் தமக்கும்
இதம்பெறும் அழியாப் பதம்பெற அளித்த
இன்பமே என்தனி அன்பே
கதம்பெறு மதங்கள் அதம்பெறப் புரிந்த
கவுணியற் கினியஉட் களிப்பே
சிதம்பெறு ஞானா முதம்தரு மதுரைச்
சிதம்பர மாதபோ நிதியே. 2

சத்திறை உயிர்தான் சத்தசத் தாகும்
தடைமல மசத்திவற் றிடைநீ
இத்திறை அபர நோக்கலை பரநோக்
கெய்துதி இறைநிறை வுறைவாய்
புத்திஈ தெனஎன் புத்தியைத் திருத்தும்
போதசின் மயஒளி மணியே
சித்திஎண் வகையும் பெறத்தரு மதுரைச்
சிதம்பர மாதபோ நிதியே. 3

மறைநெறிப் பொதுவும் ஆகமச் சிறப்பும்
வகுப்பது சிவத்தொடு மருவிக்
குறைநிறை வகலக் கூடுதல் இதனைக்
குறிப்பறக் குறியெனக் குறிக்கக்
கறைமிடற் றொளித்துச் சடைமுடி யோடும்
காட்சிதந் தருள்செழுங் கதிரே
சிறைமலம் அகற்றி அருள்தரு மதுரைச்
சிதம்பர மாதபோ நிதியே 4

ஒன்றெனில் இரண்டாங் குறுமயல் அதனால்
ஒன்றெனக் குறித்தலும் ஒழித்தே
நின்றனை யெனில்நீ நின்றனை அறிதி
நெறியிதென் றுணர்த்திய நிறைவே
மன்றிலா னந்த வாரிவா யமுதம்
வாரியுண் டெழுஞ்செழு முகிலே
தென்றிசைக் கணிகொண் டோங்கிய மதுரைச்
சிதம்பர மாதபோ நிதியே. 5

திருச்சிற்றம்பலம்

### 3. வேதநாயகம் பிள்ளை நீதிநூலுக்கு அருளிய சாற்றுக்கவி°

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

வளங்கொள்குளத் தூர்அமர்ந்த வேதநா
யகன்அருளால் வயங்க முன்னாள்
உளங்கொள்மனு உரைத்தனன்ஓர் நீதிநூல்
அந்நூற்பின் உறுநூ லாக
தூளங்கிடும்அவ் வூர்உறைஅத் தோன்றல்ஓர்
நீதிநூல் சொன்னான் இந்நாள்
விளங்கும் இந்நூல் முன்னர்மற்றை
நூல்எல்லாம் கிழிபடத்தின் வெண்ணூல்அன்றே.

திருச்சிற்றம்பலம்

° மாயூரம் முன்சீப் வேதநாயகம் பிள்ளை (11–10–1826–21–7–1889) கிறித்தவர். ஆயினும் சமய சமரச நோக்கம் உடையவர். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் நண்பர். சைவ ஆதீனங்களுடன் பழக்கமுடையார். இவரது நீதிநூல் 1859 இல் (காளயுத்தி, தை) அச்சாயிற்று. இரண்டாம் பதிப்பு –1860. பெருமானாரின் சாற்றுக்கவி, சென்னபட்டணம் வித்வான் ஸ்ரீ இராமலிங்க பிள்ளையவர்க ளியற்றியது என அச்சிடப் பெற்றுள்ளது.

## 4. தேவநாத பிள்ளை தோத்திரங்களுக்கு அருளிய சாற்றுக்கவி*

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

இரும்புருக்க உலைக்களந்தோ றுழல்கின்றீர்
இரும்பொன்றோ இளகாக் கல்லும்
விரும்பிஒரு கணத்துருக்கும் உளவொன்று
கேட்கவள மேவு கூடற்*
பெரும்புகழான் தேவநா தன்பரனைக்
குறித்தன்பு பிறங்கப் பாடும்
கரும்பியைந்த சுவைப்பாட்டில் ஒன்றவைக்கு
முன்பாடிக் காணு வீரே.

திருச்சிற்றம்பலம்

## 5. முத்துசாமி முதலியார் தோத்திரங்களுக்கு அருளிய சாற்றுக்கவி *

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

ஒருவகைப் பொருள்தெரித் துயவுதீர்
மறைகள்நான் கொன்றி வாழ்க
உயரரன் தரும் ஏழு நான்கதாம்
ஆகமம் உலகின் மல்க
இருகைப் பவம்ஒழித் திலகும்வெண்
நீற்றினம் எங்கும் ஓங்க
இணையில்நல் அறமுன்ஆம் பயன்ஒரு
நான்கும்ஈ டேறி வெல்க
பொருவலற் றரையர்எத் திசையுளும்
நீதியால் பொலிக யாரும்
புகழ்சிவாத் துவிதசித் தாந்தமெய்ச்
சரணர்எண் புல்க நாளும்
திருவருட் பனுவல்சொற் றிடும்அவர்க்
கெண்திரு சேர்க வாதைச்
செப்பு முத்துச்சுவா மிக்கவிக்
குரிசில்சீர் செழிக மாதோ.

திருச்சிற்றம்பலம்

**பல்வகைய தனிப்பாடல்கள் முற்றும்.**

---

* இறையருள் நிரம்ப இருத்தலான் என்னும் திருமுகப் பாடல் இத் தேவநாத பிள்ளைக்கு எழுதப் பெற்றதே.

* கூடல் – கூடலூர்

* குடும்பகோரம் எழுதப்பெற்றது இம்முத்துசாமி முதலியார்க்கே.

திருச்சிற்றம்பலம்

# 1. சுத்த சன்மார்க்க சத்தியச் சிறு விண்ணப்பம்*

இயற்கை உண்மையர் என்றும், இயற்கை அறிவினர் என்றும், இயற்கை இன்பினர் என்றும், நிர்க்குணர் என்றும் சிற்குணர் என்றும், நித்தியர் என்றும், சத்தியர்என்றும், ஏகர் என்றும், அனேகர் என்றும், ஆதியர் என்றும், அனாதியர் என்றும், அமலர் என்றும், அருட்பெருஞ்ஜோதியர் என்றும், அற்புதர் என்றும், நிரதிசயர் என்றும், எல்லாம் ஆனவர் என்றும், எல்லாம் உடையவர் என்றும், எல்லாம் வல்லவர் என்றும் குறிக்கப்படுதல் முதலிய அளவு கடந்த திருக்குறிப்புத் திருவார்த்தைகளால் சுத்த சன்மார்க்க ஞானிகள் துதித்தும், நினைத்தும், உணர்ந்தும், புணர்ந்தும் அனுபவிக்க விளங்குகின்ற **தனித்தலைமைப் பெரும்பதியாகிய பெருங்கருணைக் கடவுளே!** தேவரீர் திருவருட் சமுகத்தில் துரும்பினும் சிறியேமாகிய யாங்கள் சிற்றறிவால் செய்து கொள்ளும் சிறு விண்ணப்பங்களைத் திருச்செவிக்கு ஏற்பித்தருளி எங்களை இரக்ஷித்தருளல் வேண்டும்.

எல்லாச் சத்திகளும், எல்லாச்சத்தர்களும், எல்லாத் தலைவர்களும் அறிந்து கொள்ளுவதற்கு மிகவும் அரியதாய் எல்லாத் தத்துவங்களுக்கும் எல்லாத் தத்துவிகளுக்கும் அப்பால் அப்பாலாய் விளங்கும் ஓர் சுத்தஞான வெளியில் தமக்கு ஒரு விதத்தாலும் ஒப்புயர்வு சிறிதும் குறிக்கப்படாத தனிப்பெருந்தலைமை அருட்பெருஞ்ஜோதியராகி விளங்குகின்ற தேவரீரது தனிப்பெருந் தன்மைக்கு மெய்யறிவுடையோரால் விதிக்கப்பட்ட வேதாகமங்களும் பெருந்தகை வாசகத்தைப் பெறாது சிறுதகை வாசகங்களைப் பெற்றுத் திகைப்படைகின்றன என்றால் மலத்திற் புழுத்த புழுவினும் சிறியேமாகிய யாங்கள் திருச்சமுகத்தில் விண்ணப்பித்தற்குரிய பெருந்தகை வாசகத்தை எவ்வாறு அறிவோம்! எங்ஙனம் செய்வோம்! ஆகலில், **கருணாநிதியாகிய கடவுளே!** யாங்கள் விண்ணப்பிக்கின்ற அற்பவாசகத்தில் உரிமை நோக்காது அங்கீகரித்தருளி எங்களைக் காத்தருளல் வேண்டும்.

**தாயினும் சிறந்த தயவுடைக் கடவுளே!** இயற்கையே அஞ்ஞான இருளில் அஞ்ஞான உருவில் அஞ்ஞானிகளாய் அஞ்ஞானத்தில் பயின்று ஏதுந் தெரியாது கிடந்த எங்களைத் தேவரீர் பெருங்கருணையால் பவுதிக உடம்பில் சிறிது அறிவு தோற்றிவிடுத்த அஞ்ஞான்றுதொட்டு இஞ்ஞான்று வரையும் அதுகொண்டு அறிவே வடிவாய், அறிவே உருவாய், அறிவே பொறியாய், அறிவே மனமாய், அறிவே அறிவாய், அறிவே அநுபவமாய் அநுபவிக்கத் தெரிந்துகொள்ளாது, குற்றமே வடிவாய்க், குற்றமே உருவாய்க், குற்றமே

* வள்ளற்பெருமானார் திருக்கரத்தால் எழுதிய மூலமே இதற்கு ஆதாரம். இதன் தலைப்பு, பெருமானாரால் அருளப்பெற்றதாகும்.

பொறியாய்க் குற்றமே மனமாய்க், குற்றமே அறிவாய்க், குற்றமே அநுபவமாய் அநுபவிக்கின்ற சிறியேங்கள் திருச்சமுகத்தில் விண்ணப்பிக்கின்ற விண்ணப்பமும் குற்றமே வடிவாய்க் குற்றமே குறிக்கும் என்று அறிந்தோமாயினும் குற்றங் குறியாதவகை விண்ணப்பஞ் செய்தற்கு ஒருவாற்றானும் உணர்ச்சியில்லோ மாதலில் துணிவுகொண்டு விண்ணப்பிக்கின்றோம். குற்றங்களையே குணங்களாகக் கொள்ளுதல் தேவரீர் திருவருட் பெருமைக்கு இயற்கையாதலின் இவ் விண்ணப்பங்களில் குற்றங் குறியாது கடைக்கணித் தருளிக் கருணை செய்தல் வேண்டும்.

அஞ்ஞான இருளில் ஒன்றும் தெரியாது உணர்ச்சியின்றிக் கிடந்த காலம்போக, அவ்விருளை விட்டு நீங்கிய காலத்தே, இவ்வுலகினிடத்து புல்நெல் மரம் செடி, பூடு முதலியவாகவும், கல் மலை குன்று முதலியவாகவும் பிறந்து பிறந்து, களையுண்டல், வெட்டுண்டல், அறுப்புண்டல், கிள்ளுண்டல், உலர்ப்புண்டல், உடைப்புண்டல், வெடிப்புண்டல் முதலிய பல்வேறு அவத்தைகளால் இறந்து இறந்து அத் தாபரயோனி வர்க்கங்களெல்லாம் சென்று சென்று உழன்று உழன்று அலுப்படைந்தேம்; பின்னர், எறும்பு, செல், புழு, பாம்பு, உடும்பு, பல்லி முதலியவாகவும்,தவளை, சிறுமீன், முதலை, சுறா, திமிங்கிலம், முதலியவாகவும், பிறந்து பிறந்து, தேய்ப்புண்டல், நசுக்குண்டல், அடியுண்டல், பிடியுண்டல் முதலிய பலவேறு அவத்தைகளால் இறந்து இறந்து அவ்வூர்வன நீர்வாழ்வன யோனிவர்க்கங்களெல்லாம் சென்று சென்று, உழன்று உழன்று, அலுப்படைந்தேம்; பின்னர், ஈ, வண்டு, தும்பி, குருவி, காக்கை, பருந்து, கழுகு முதலியவாகப் பிறந்து பிறந்து, அடியுண்டல், பிடியுண்டல், அலைப்புண்டல், உலைப்புண்டல் முதலிய பல்வேறு அவத்தைகளால் இறந்து இறந்து அப் பறவையோனி வர்க்கங்களெல்லாம் சென்று சென்று உழன்று உழன்று அலுப்படைந்தேம்; பின்னர், அணில், குரங்கு, நாய், பன்றி, பூனை, ஆடு, மாடு, யானை, குதிரை, புலி, கரடி முதலியவாகப் பிறந்து பிறந்து, பிடியுண்டல், அடியுண்டல், குத்துண்டல், வெட்டுண்டல், தாக்குண்டல், கட்டுண்டல், தட்டுண்டல் முதலிய பல்வேறு அவத்தைகளால் இறந்து இறந்து அவ் விலங்குயோனி வர்க்கங்களெல்லாம் சென்று சென்று உழன்று உழன்று அலுப்படைந்தேம்; பின்னர், பசாசர், பூதர் இராக்கதர், அசுரர், சுரர் முதலியராகப் பிறந்து பிறந்து, அலைப்படுதல் அகப்படுதல், அகங்கரித்தல், அதிகரித்தல், மறந்து நிற்றல், நினைந்து நிற்றல் மயக்குறுதல், திகைப்புறுதல், போரிடுதல், கொலைபடுதல் முதலிய பல்வேறு அவத்தைகளால் இறந்து இறந்து அத் தேவயோனி வர்க்கங்களெல்லாம் சென்று சென்று உழன்று உழன்று அலுப்படைந்தேம், பின்னர், காட்டகத்தார், கரவு செய்வார், கொலை செய்வார் முதலியராகப் பிறந்து பிறந்து, பயப்படல், சிறைப்படல், சிதைபடல் முதலிய அவத்தைகளால் இறந்து இறந்து அந்நரகயோனி வர்க்கங்களெல்லாம் சென்று சென்று உழன்று உழன்று அலுப்படைந்தேம்.

அங்ஙனம் யாங்கள் அப்பிறவிகள் தோறும் அடைந்த அலுப்பும் அச்சமும் அவலமும் களைப்பும் துன்பமும் திருவுளத்தடைத்து இரங்கியருளி அழியாப்

பெருவாழ்வைப் பெறுதற்குரிய உயரறிவுடைய இம்மனித தேகத்தில் செலுத்தியருளிய தேவரீரது பெருங்கருணைக்கு யாங்கள் செய்யும் கைம்மாறு ஒன்றுந் தெரிந்தோ மில்லை.

உயிர்களின் அகத்தும், புறத்தும், அகப்புறத்தும், புறப்புறத்தும் நீக்கமின்றி நிறைந்து விளங்குகின்ற **அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே!**

இம்மனித தேகத்தில் செலுத்திய காலத்திலும் தாய் வயிற்றிலும் சிசுப் பருவத்திலும் குமாரப் பருவத்திலும், பலவேறு அவத்தைகளால் அறிவின்றி இருந்தோமாகலில், தேவரீர் பெருங்கருணைத் திறத்தை அறிந்து கொள்ளாமல் வீண்போது கழித்தோம். அப்பருவங்கழிய இப்பருவத்தினிடத்தே எல்லா அண்டங்களையும், எல்லா உலகங்களையும், எல்லா உயிர்களையும், எல்லாப் பொருள்களையும், மற்றை எல்லாவற்றையும் தோற்றுவித்தும், விளக்கஞ் செய்வித்தும், துரிசு நீக்குவித்தும், பக்குவம் வருவித்தும், பலன் தருவித்தும்* எங்கும் பூரணராகி விளங்குகின்ற ஓர் உண்மைக் கடவுள் உண்டென்றும், அக்கடவுளை உண்மை யன்பால் கருத்தில்கருதி வழிபாடுசெய்யின், அக்கடவுள் திருவருள் நமது கருத்தின்கண் வெளிப்பட்டு விளங்குமென்றும், அத்திருவருள் விளக்கத்தால் மரணம், பிணி, மூப்பு, பயம், துன்பம் முதலிய அவத்தைகள் எல்லாவற்றையும் தவிர்த்து எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் எவ்வளவும் தடைபடாத பேரின்ப சித்திப் பெருவாழ்வை அடைதல் கூடுமென்றும், எங்கள் அறிவில் தேவரீர் திருவருளால் உண்மைப்பட உணர்த்தியருளப் பெற்றோம். அவ்வுணர்ச்சியைப் பெற்றது தொடங்கிக் கடவுள் வழிபாடு எஞ்ஞான்று செய்வோம்? கடவுள் திருவருள் விளக்கம் எந்நாள் அடைவோம்? மரணம், பிணி, மூப்பு முதலிய அவத்தைகள் எப்போது நீங்கும்? என்றும் அழியாத பேரின்ப சித்தி எக்காலங் கிடைக்கும்? என்று எண்ணியெண்ணி வழிதுறை தெரியாமல் வருந்தி நின்ற தருணத்தே, –

**களைப்பறிந்து உதவும் கருணைக் கடலாகிய கடவுளே!** தேவரீர் நெடுங்காலம் மரணம் முதலாகிய அவத்தைகளால் துன்பமுற்றுக் களைப் படைந்த எங்களை, அவ்வவத்தைகளினின்றும் நீக்கிக் களைப்புங் கலக்கமுந் தவிர்த்து அழியாத பேரின்ப சித்தியை அடைவித்தற் பொருட்டாகவே பூர்வஞான சிதம்பரத்தின் வடபால் பார்வதிபுரம் என்று குறிக்கப்படுகின்ற உத்தரஞானசித்திபுரத்தில் யாம் அளவுகடந்த நெடுங்காலம் சித்தியெல்லாம் விளங்கத் திருவருள் நடஞ் செய்வோம் என்றும், அது தருணம் மிகவும் அடுத்து சமீபித்த தருணம் என்றும், அப் பதியினிடத்தே யாம் அருணடம் புரிதற்கு அடையாளமாக ஓர் ஞானசபை காணுதல் வேண்டும் என்றும்

---

* இவை ஐந்தொழில் (பஞ்ச கிருத்தியம்) எனப்படும். பஞ்சகிருத்தியமாவன : 1. சிருட்டி 2. திதி, 3. சங்காரம், 4. திரோபவம், 5. அனுக்கிரகம். இவற்றை பெருமானார், தோற்றுவித்தல் (சிருட்டி) விளக்கஞ் செய்வித்தல் (திதி), துரிசு நீக்குவித்தல் (சங்காரம்) பக்குவம் வருவித்தல் (திரோபவம்), பலன் தருவித்தல், (அனுக்கிரகம்) எனக் கூறுதல் அருமைப்பாடுடையது.

திருவருட் குறிப்பால் அறிவித்தது மன்றி, அருளுருவாகி எங்கள் அகத்தும் புறத்தும் அமர்ந்தருளி யாதொரு தடையுமின்றி அத்திருஞானசபையும் தோன்றி விளங்கச் செய்வித்தருளிய தேவரீர் பெருங்கருணையைக் கருதுந்தோறும் பெருங்களிப்படைகின்றோம்.* இனி அத்திருஞானசபையை அலங்கரித்தல் வேண்டுமெனக் குறிப்பித்த வண்ணம் அலங்கரிக்கத் தொடங்குகின்றோம். **அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே!** தேவரீர் அருளுருவாகி எங்கள் அகத்தும் புறத்தும் அமர்ந்தருளி யாங்கள் செய்யும் இவ்வலங்காரத் திருப்பணியில் எவ்விதத்தாலும் யாதொரு தடையும் வாராத வண்ணஞ் செய்வித்து அவ்வலங்காரத் திருப்பணியை முற்றுவித்தருளல் வேண்டும்.

**சர்வ வல்லபராகிய தனித்தலைமைக் கடவுளே!** அத் திருவலங்காரத் திருப்பணி முற்றிய தருணத்தே தேவரீர் அமர்ந்தருளி அற்புதத் திருவருள் விளக்கத்தால் எங்களையும், இவ்வுலகில் இத்தேகத்தைப் பெற்ற மற்றவர்களையும் உண்மை அடியர்களாக்கி உண்மையறிவை விளக்கி, உண்மையின்பத்தை அளித்துச் சமரச சுத்த சன்மார்க்க நிலையில் வைத்துச் சத்திய வாழ்வை அடைவித்து நித்தியர்களாக்கி வாழ்வித்தல் வேண்டும். **எல்லாம் உடைய அருட்பெருஞ்ஜோதி அற்புதக் கடவுளே!** இது தொடங்கி எக்காலத்தும் சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய தடைகளாகிய சமயங்கள், மதங்கள், மார்க்கங்கள் என்பவற்றின் ஆசார சங்கற்ப விகற்பங்களும், வருணம் ஆசிரமம் முதலிய உலகாசார சங்கற்ப விகற்பங்களும் எங்கள் மனத்தில் பற்றாத வண்ணம் அருள் செய்தல் வேண்டும். சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லக்ஷியமாகிய ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை எங்களுக்குள் எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் எவ்வளவும் விலகாமல் நிறைந்து விளங்கச் செய்வித்தருளல் வேண்டும்.

எல்லாமாகிய தனிப்பெருந் தலைமை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே ! தேவரீர் திருவருட் பெருங்கருணைக்கு வந்தனம்! வந்தனம்!

திருச்சிற்றம்பலம்

இங்ஙனம்

சிதம்பரம்

இராமலிங்கம்

சுத்த சன்மார்க்க சத்தியச் சிறு விண்ணப்பம்

முற்றிற்று

---

* ஞானசபை இறைவன் திருவருளாணையால் ஏற்பட்டதென்பது இதனாற் போதரும். திருவருட் குறிப்பின் வண்ணமே, திருவருளாணைப்படியே பெருமானார் ஞானசபையை நிறுவியருளினார்கள்.

## 2. சமரச சுத்த சன்மார்க்க சத்தியப் பெரு விண்ணப்பம்*

திருச்சிற்றம்பலம்

இயற்கை உண்மை நிறைவாகியுள்ள ஒரு சுத்த சிவானுபவ வெளியில், இயற்கை விளக்க நிறைவாகி விளங்கிய அருட்பெருஞ்ஜோதி சொரூபராய், இயற்கை இன்ப நிறைவாகி ஓங்கிய சிவானந்த ஒருமைத் திருநடச் செய்கையை எல்லா உயிர்களும் இன்பமடைதற் பொருட்டுத் திருவுளக் கருணையாற் செய்தருளுகின்ற சர்வ வல்லபராகிய தனித் தலைமைக் கடவுளே!

அறிவு என்பது ஒரு சிறிதுந் தோற்றாத அஞ்ஞானம் என்னும் பெரிய பாசாந்தகாரத்தில் நெடுங்காலம் சிற்றணுப்பசுவாகி அருகிக்கிடந்த அடியேனுக்குள் உள்ளொளியாகி இருந்து அப் பாசாந்தகாரத்தினின்றும் எடுத்து எல்லாப் பிறப் புடம்புகளிலும் உயர்வுடைத்தாகிய ஆறறிவுள்ள இம்மனிதப் பிறப்புடம்பில் என்னை விடுத்துச் சிறிது அறிவு விளங்கச் செய்த தேவரீரது திருவருட் பெருங்கருணைத் திறத்தை எங்ஙனம் அறிவேன்! எவ்வாறு கருதுவேன்! என்னென்று சொல்வேன்!

எல்லாம் வல்ல இயற்கை உண்மைக் கடவுளே! உபசாரத்தால் பெற்ற தந்தை என்பான் ஒருவனது சுக்கிலத் துளியின்கண் என்னை ஒரு பகுதிப் பேரணு உருவில் பெருகி வெளிப்பட இருத்திய காலத்திலும் எனக்குள் உள்ளொளியாகி இருந்து அப் பகுதிப் பேரணு உருவைச் சிருட்டித் தருளினீர். அன்றிப் புறத்தில் யாவராலும் சகிக்கப்படாத அதன் அருவருப்பையும் அசுத்தத்தையும் தீ நாற்றத்தையும் சகித்து அச்சுக்கிலத் துளியினிடத்து ஓர் ஆவியுருவாகியிருந்து அத் துளியின்கண் உள்ள பல்வகை விரோத தத்துவங்களாற் சிறிதுந் தடைபடாமல் என் உருவையுங் காத்தருளினீர். அன்றி, அங்ஙனம் அரும்பிய ஆன்மசத்திக் கலைகள் வெளிப்பட விளக்கி வளர்த்தும் அருளினீர்.

உபசாரத்தால் பெற்ற தாயென்பாள் ஒருத்தியின் சோணிதத்திரளில் என் உருவைச் சேர்க்கும் வரையில் அப்போது அப்போது என் உருவைச் சிதைப்பதற்கு எதிரிட்ட துரிசுகள் எல்லாவற்றையும் நிக்கிரகம் செய்தருளினீர். இங்ஙனம் புரிந்த தேவரீரது திருவருட் பெருங்கருணைத் திறத்தை எங்ஙனம் அறிவேன்! எவ்வாறு கருதுவேன்! என்னென்று சொல்வேன்!

---

* பெருமானார் திருக்கரத்தால் எழுதிய மூலமே இதற்கு ஆதாரம் என்றும், இதற்காகக் கிடைத்த அன்பர்கள் கையெழுத்துப் பிரதிகள் ஆறு என்றும், இது இரண்டாவது உரைநடை விண்ணப்பமாக எல்லாப் பிரதிகளிலும் கொண்டிருக்கிறது என்றும், இதன் பெயர் மூலத்தில் குறிக்கப்பெறவில்லை என்றும் ஆ.பா. குறிப்பிட்டுள்ளார்.

எல்லாம் உடைய இயற்கை விளக்கக் கடவுளே! தாய் கருப்பையில் சோணிதத் திரளில் சேர்த்து என்னை ஓர் பூதப் பேரணு உருவில் பெருகி வெளிப்பட இருத்திய காலத்திலும் எனக்குள் உள்ளொளியாகியிருந்து அப்பூதப் பேரணு உருவைச் சிருட்டித் தருளினீர். அன்றிப் புறத்தில் எவராலும் சிறிதும் சகிக்கப்படாத அதன் அசுத்தம் அருவருப்பு துற்கந்தம் முதலியவற்றைப் பொறுத்து அச்சோணிதத் திரளில் ஓர் ஆவி உருவாகியிருந்து அத்திரளினுள்ள பல்வகை விரோத தத்துவங்களால் சிறிதும் தடைபடாமல் என்னுருவைக் காத்தருளினீர்.

அன்றியும், அவ்விடத்து எதிரிட்ட துரிசுகள் எல்லாவற்றையும் நிக்கிரகஞ் செய்தருளினீர். அன்றி அங்ஙனம் பூத்த ஆன்ம சத்திக் கலைகள் வாட்டமடையாது வெளிப்பட்டு விளங்க வளர்த்தருளினீர்.

அன்றியும், தாய் கருப்பையினிடத்துப் பூதப் பேரணு உருவில் கிடந்த என்னை அக்கருப்பையில் பவுதிக பிண்ட வடிவில் இருத்தும் வரையில் நச்சுக்கிருமி நச்சுக்காற்று நச்சுச்சுவாலை முதலிய உற்பாத வகைகளால் எனது பூதப்பேரணு உருச் சிதறி வேறுபடாமலும் காத்தருளினீர். அன்றியும் தாய் கருப்பையில் பவுதிக பிண்ட வடிவில் என்னை இருத்திய காலத்திலும் எனது இச்சை ஞானக் கிரியைகளை வெளிப்படுத்துல் முதலிய உபகரிப்பு அதிகரிப்புகளுக்கு உரிய உபயோக தத்துவ உறுப்புகள் எல்லாவற்றையும் குறைவின்றி வகுத்தமைத்து வளர்த்துக் காத்தருளினீர்.

அன்றியும், அடியேன் தாய் கருப்பையில் பிண்ட வடிவில் கிடந்த காலத்து இரும்பில் பெரிதும் கடினமுடையதாய் இருட்குகையில் பெரிதும் இருளுடையதாய் மிகவும் சிற்றளவுடையதாய் அசுத்தம் முதலியவற்றால் நிரம்பிய அக்கருப்பையினுள் நெருக்கத்தாலும் வெப்பத்தாலும் புழுங்கிய புழுக்கத்தினால் வருந்தி வருந்திக் களைத்தபோதெல்லாம் அங்ஙனம் அமுதக் காற்றை அடிக்கடி மெல்லென வீசுவித்து அவ்வருத்தமும் களைப்பும் தவிர்த்துக் காத்தருளினீர்.

அன்றியும், தாய் கருப்பையில் பிண்ட வடிவில் கிடந்து பசியினால் பரதவித்து மூர்ச்சித்த போதெல்லாம் பூதகாரிய அமுதத்தை எனக்கு ஊட்டுவித்துப் பசியை நீக்கி மூர்ச்சை தெளிவித் தருளினீர். அன்றியும் தாய் கருப்பையில் பிண்ட வடிவில் கிடந்து பேய்வெருட்டாலும் பேரிருட்டாலும் பயந்த போதெல்லாம் நாத ஒலியால் பேய்வெருட்டையும் விந்து விளக்கத்தால் பேரிருட்டையும் தவிர்த்து என் பயத்தை நீக்கியருளினீர். அன்றி, தாய் கருப்பையின்கண் நேரிட்ட பெருந் தீ பெருங்காற்று பேரோசை பெருவெள்ளம் பெரும்புழு முதலிய உற்பாத துரிசுகள் அனைத்தையும் தவிர்த்துக் காத்து அப்பிண்ட வடிவில் எனக்கு ஓரறிவையும் விளக்கி அருளினீர்.

அன்றியும், உலகினிடத்தே பிறந்து அனுபவிப்பதற்குரிய சுப அனுபவப் பெருக்கம் ஆயுட்பெருக்கம் முதலிய நன்மைகளையும் எனக்கு அப்பிண்ட வடிவின்கண்ணே அமைத்தருளினீர்.

அன்றியும், சோணிதக்காற்றின் அடிபடல், யோனி நெருக்குண்ணல் முதலிய அவத்தைகளால் அபாயம் நேரிட ஒட்டாமற் காத்து இவ்வுலகினிடத்தே தோற்றுவித் தருளினீர்?✦ இங்ஙனம் புரிந்த தேவரீரது திருவருட் பெருங்கருணைத் திறத்தை எங்ஙனம் அறிவேன்! எவ்வாறு கருதுவேன்! என்னென்று துதிப்பேன்!

எல்லாமாகிய இயற்கை இன்பக் கடவுளே ! தந்தை என்பவனது சுக்கிலப் பையின்கண், யான் வந்தமைந்த கணப்போது தொடங்கி தாய் என்பவளது சோணிதப் பையின்கண் சென்றடைந்த கணப்போதிற்கு முன்கணப்போது வரையுமாக என்னால் ஒருவாறு அளவிடப்பட்ட ஒரு கோடி ஒன்பது லக்ஷத்து அறுபதினாயிரம் கணப்போது பரியந்தம் எவ்வகைத் தடைகளும் வாராதபடி, பகுதிப் பேரணு உருவிற்கிடந்த எனது அகத்தினும் புறத்தினும் அருவாகியும் உருவாகியும் சலித்தல் முதலிய இன்றி அன்பொடும் அருளொடும் பாதுகாத்திருந்த தேவரீரது திருவருட் பெருங்கருணைத் தன்மைக்கு இவ்வுலகில் ஒருவாறு ஒருகணப்போது பாதுகாத்தலில் சலிப்படைந்தும் தளர்ச்சியடைந்தும், அருவருப்புற்றும், சுதந்தரமற்றும், பராக்கிலிருந்தும் தடைபடுகின்ற தந்தை முதலிய ஜீவர்கள் கருணைத் தன்மையை ஒப்பென்று சொல்வதற்கு எவ்விதத்தினும் சிறிதாயினும் மனம் துணியாமையால் அங்ஙனம் உபசரியாதவனாகி இருக்கின்றேன். ஆகலில் தேவரீரது திருவருட் பெருங்கருணையை என்னென்று கருதுவேன்! என்னென்று துதிப்பேன்!

அருட்பெருஞ்ஜோதித் தனித்தலைமைக் கடவுளே! தாய் என்பவளது சோணிதப் பையின்கண் யான் வந்தமைந்த கணப்போது தொடங்கி,

---

✦ மானிடப் பிறபினுள் மாதா உதரத்து
ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களில் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களில் ஊறுஅலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களில் தாழ்புவி பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படும்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும். – போற்றித் திருஅகவல் 13–25.

என்னும் திருவாசகப் பகுதி ஈண்டு ஒப்புநோக்குதற் குரியது.

இவ்வுலகில் தோன்றிய கணப்போதிற்கு முன்கணப்போது வரையுமாக என்னால் ஒருவாறு அளவிடப்பட்ட ஆறுகோடி நாற்பத்தெட்டு லக்ஷங்கணப்போது பரியந்தம் எவ்வகைத் தடைகளும் எவ்வகை ஆபத்துகளும் வாராதபடி பூதப்பேரணு உருவிலும் பிண்டப்பெருவடிவிலும் கிடந்த எனது அகத்தினும் புறத்தினும் அருவாகியும் உருவாகியும் சலித்தல் முதலிய இன்றிப் பெருந்தயவினோடு பாதுகாத்திருந்த தேவரீரது திருவருட் பெருங்கருணைத் தன்மைக்கு இவ்வுலகில் ஒருவாறு ஒரு கணப்போது பாதுகாத்தலில் சலித்தும் தளர்ந்தும் அருவருத்தும் பரதந்திரித்தும் பராக்கடைந்தும் தடைபடுகின்ற தாய் முதலிய ஜீவர் கருணைத் தன்மையை ஒப்பென்று சொல்வதற்கு எவ்வகையினும் எத்துணையும் மனம் துணியாமையால் அங்ஙனம் உபசரியாதவனாகி இருக்கின்றேன். ஆகலில் தேவரீரது திருவருட் பெருங்கருணையை என்னென்று கருதுவேன்! எங்ஙனந் துதிப்பேன்!

யாவராலும் பிரித்தற்கு ஒருவாற்றானும் கூடாத பாசம் என்னும் மகாந்தகாரத்தில் யான்அது என்னும் பேதந் தோன்றாது அருகிக் கலந்து அளவிறந்த காலம் முன்பின் என்பதின்றி மூர்ச்சித்துக் கிடந்த என்னை அம்மகாந்தகாரத்தி னின்றும் ஒரு கணப்பொழுதினுள் அதுகாரணக் கிரியையால் அதிகாரணப் பகுதி உருவில் பிரித்தெடுத் தருளிய தேவரீரது திருவருட் பேராற்றலை என்னென்று கருதி என்னென்று துதிப்பேன்!

சத்திய ஞானானந்தத் தனித்தலைமைக் கடவுளே! காரணக் கிரியையால் காரணப்பகுதி உருவினும், அதிசூக்குமக் கிரியையால் அதிசூக்குமப் பகுதி உருவினும், சூக்குமக் கிரியையால் சூக்குமப்பகுதி உருவினும், பரத்துவ சத்திசத்தரால் பூத உருவினும், அபரத்துவ சத்தி சத்தரால் பவுதிக வடிவினும், ஒரு கணப்போதினுள் என்னைச் செலுத்தாமல் செலுத்திய தேவரீரது திருவருட் பேராற்றலை என்னென்று கருதி என்னென்றும் துதிப்பேன்.

அகண்ட பூரணானந்தராகிய அருட்பெருஞ்ஜோதிக் கடவுளே! ஜீவனை ஆதரிப்பிக்கும் பூதப் பிருதிவித் தோற்றமும், ஜீவனை விருத்திசெய்விக்கும் பூத நீர்த் தோற்றமும், ஜீவனை விளக்கஞ் செய்விக்கும் பூதாக்கினித் தோற்றமும், ஜீவனை அதிகரிப்பிக்கும் பூத வாயுத் தோற்றமும், ஜீவனை வியாபகஞ் செய்விக்கும் பூதவெளித் தோற்றமும், உபப்பிருதிவி உபநீர் உபாக்கினி உபவாயு முதலிய தோற்றங்களும், அவைகள் இருக்கும் இடங்களும், தொழிலிடம் முதலிய இடங்களும், ஒலி அறிவு சுவை அறிவு, நாற்ற அறிவு, பரிச அறிவு என்னும் ஐவகைக் குணஅறிவுகளும், அவைகள் இருத்தற்குரிய செவி, கண், நாக்கு, மூக்கு, மெய் என்னும் உள்ளிடப் பொறிகளும், அவைகள் உத்தியோகித்தற்குரிய வெளியிடப் பொறிகளும், வசனித்தறிதல், நடந்தறிதல், கொடுத்தெடுத் தறிதல்,மலம் விடுத்தறிதல், சலம் விடுத்தறிதல் என்னும் ஐவகைத் தொழிலவறிவுகளும், அவைகள் இருத்தற்குரிய வாக்கு பாதம் கை, நீர்வாயில் அபானவாயில் என்னும் கரும உள்ளிடப் பொறிகளும், அவைகள் தொழிற்படற்

குரிய கருமப் புறவிடப்பொறிகளும், நினைத்தல் விசாரித்தல் நிச்சயித்தல், அகங்கரித்தல், என்னும் சூக்குமக் கரணத்தொழில்களும், அவைகளை இயற்றும் மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் சூக்கும கரணங்களும், அவைகளை இயற்றுவிக்கும் அதிசூக்கும கரணங்களும், அக்கரணங்களின் உபகரணங்களாகிப் பலபல பேதப்பட்டு விரிந்த சத்துவம் ராஜதம் தாமச முதலிய குணங்களும், அவைகள் இருத்தற்கும் உத்தியோகித்திற்கும் இடங்களும், பருவஞ்செய்தல், தகுதிசெய்தல், தெளிவு செய்தல், இச்சை செய்தல், அதிகாரஞ் செய்தல், காரணஞ்செய்தல், காரியஞ்செய்தல், முதலிய இடைப்பாட்டுத் தொழில்களும், அவைகளை இயற்றும்பொழுது இயைபு இச்சை அறிவு முதலிய கருவிகளும், அக்கருவிகளுக்குரிய இடங்களும், அவைகள் உத்தியோகித்தற்குரிய இடங்களும், துரிசு நீக்குவித்தல் சுகம் விழைவித்தல் தூய்மை செய்வித்தல் இன்பமடைதற்கு வழியாயிருத்தல், துணையாயிருத்தல் முதலிய பரத்துவத் தொழில்களும், அவைகளை இயற்றுதற்குரிய தத்துவங்களும், அவைகளிருத்தற்குரிய இடங்களும், பிரேரித்தற்குரிய இடங்களும், அறிதல் அறிவித்தல் அனுபவித்தல் அனுபவிப்பித்தல் முதலிய முக்கியத் தொழில்களும், அவைகளை இயற்றுகின்ற சத்தி சத்தர்களும், அவர்கள் இருத்தற்குரிய இடங்களும், அவர்கள் அதிகரித்தற்குரிய இடங்களும், வாதவிருத்தி பித்தவிருத்தி சிலேட்டுமவிருத்திகளும், அவைகள் இருக்குமிடங்களும், உத்தியோகிக்குமிடங்களும், சூரியசத்தி, சந்திரசத்தி அக்கினிசத்தி, தாரகைசத்தி, பிரமசத்தி, மாயாசத்தி ருத்திரசத்தி முதலிய சத்திகளும், அவர்கள் இருத்தற்கும் அதிகரித்தற்கும் உரிய இடங்களும், அச்சத்திகளை நடத்தும் சத்தர்களும், அவர்கள்இருத்தற்கும் அதிகரித்தற்கும் உரிய இடங்களும், நனவு கனவு சுழுத்தி முதலிய அவத்தைகளும் அவைகள் இருத்தற்குரிய இடங்களும் இங்ஙனம் இன்னும் பற்பல அக உறுப்புகளும், அகப்புற உறுப்புகளும். மீத்தோல் புடைத்தோல் வன்தோல் மென்தோல் முதலிய தோல்வகைகளும், வெண்ணரம்பு, செந்நரம்பு, பசு நரம்பு, சிறு நரம்பு, பெருநரம்பு முதலிய நரம்பின் வகைகளும் பேரென்பு, சிற்றென்பு, நீட்டென்பு, முடக்கென்பு முதலிய வகைகளும், நல்லிரத்தம், புல்லிரத்ம் கலவையிரத்தம் கபிலையிரத்தம் முதலிய இரத்த என்பின் வகைகளும், மெல்லிறைச்சி, கல்லிறைச்சி, மண்ணிறைச்சி, நீரிறைச்சி முதலிய இறைச்சி வகைகளும், மேல்நிலைக்சுக்கிலம் கீழ்நிலைச்சுக்கிலம் முதலிய சுக்கில வகைகளும், ஓங்காரமூளை, ஆங்காரமூளை முதலிய மூளைவகைகளும், தலையமுதம் இடையமுதம் முதலிய அமுதவகைகளும், வெண்மை, செம்மை, பசுமை, கருமை, பொன்மை என்னும் வண்ண வகைகளும், வெண்மையிற் செம்மை, வெண்மையிற் பசுமை, வெண்மையிற் கருமை, வெண்மையிற் பொன்மை, செம்மையின் வெண்மை, செம்மையிற் பசுமை, செம்மையிற் கருமை, செம்மையிற் பொன்மை, பசுமையின் வெண்மை, பசுமையிற் செம்மை, பசுமையிற் பொன்மை பசுமையிற் கருமை, கருமையின் வெண்மை, கருமையிற் செம்மை,

கருமையிற் பசுமை, கருமையிற் பொன்மை, பொன்மையின் வெண்மை, பொன்மையிற் செம்மை, பொன்மையிற் பசுமை, பொன்மையிற் கருமை என்னும் வண்ணபேதவகைகளும் இவைகள், இருத்தற்குரிய இடங்களும் செயல் வகைகளும், பயன் வகைகளும் இங்ஙனம் இன்னும் பற்பல புறஉறுப்புகளும் புறப்புற உறுப்புகளும் எனக்கு உபகரிக்கும் பொருட்டு இப்பவுதிக வடிவின்கண் ஒருங்கே உள்நின்று தோன்ற உள்நின்று தோற்றாது தோற்றுவித்த தேவரீரது திருவருட்பேராற்றலை எங்ஙனம் அறிந்து எவ்வாறு கருதி என்னென்று துதிப்பேன்.

சுத்த சன்மார்க்க லக்ஷிய சத்திய ஞானக் கடவுளே! ஜீவர்களாற் கணித்தறியப்படாத பெரிய உலகின் கண்ணே, பேராசை, பெருங்கோபம், பெருமோகம், பெருமதம், பெருலோபம், பேரழுக்காறு, பேரகங்காரம், பெருவயிரம், பெருமடம், பெருமயக்கம் முதலிய பெருங்குற்றங்களே பெரும்பாலும் விளைவதற்குரியமையாகிய மற்றை இடங்களிற் பிறப்பியாமல், குணங்களே பெரும்பாலும் விளைதற்குரிய இவ்விடத்தே உறுப்பில் குறைவுபடாத உயர் பிறப்பாகிய இம்மனிதப் பிறப்பில் என்னைப் பிறப்பித்தருளிய தேவரீரது பேரருட் பெருங்கருணைத் திறத்தை என்னென்று கருதி என்னென்று துதிப்பேன்.

அருட்பெரு வெளியின்கண்ணே அருட்பெருஞ்ஜோதி வடிவராகி விகற்பமில்லாது விளங்குகின்ற மெய்ப்பொருட் கடவுளே! சிசுப் பருவந் தொடங்கிக் குமாரப் பருவம் வரையில் பேய்வெருட்டல், தோஷந்தாங்கல், பால் எதிரெடுத்தல், சவலைக்குருந்தாதல், நோய்ப்பிணிப்புண்டல், பசியால் அரற்றல், பயத்தால் உலம்புதல், உண்டி உவட்டல், உடம்பொடுநேர்தல் முதலிய எவ்வகைத் தடைகளாலும் தடைபடாமல், எனது அகத்தும் புறத்தும் காத்திருந்து வளர்த்தருளிய தேவரீரது பேரருட் பெருங்கருணைத் திறத்தை என்னென்று கருதி என்னென்று துதிப்பேன்!

அறிவார் அறியும் வண்ணங் களெல்லாம் உடைய பேரருட்பெருஞ் ஜோதிப் பெருந்தகைக் கடவுளே! குமாரப் பருவத்திற்றானே உலகில் சிறுவர்களுடன் கூடிச் சிறுவிளையாட்டியற்றல், சிற்றுண்டி விழைதல், சித்திரம்பயிறல், அதிசயம்பார்த்தல் அசங்கியம்பேசல், அவலித்தழுதல், சிறுசண்டை செய்தல், சிறுகுறும்பியற்றல், தன்வசத்துழலல், தாய்வயிற்சலித்தல் முதலிய குற்றங்களில் என்னைச் சிறிதும் செலுத்தாமல், ஒரு சிறிது அறிவு விளங்கப் புரிந்து இடந்தனித்திருத்தல், இச்சையின்றி நுகர்தல், ஜெபதபஞ் செய்தல், தெய்வம் பராவல், பிறவுயிர்க்கிரங்கல், பெருங்குணம் பற்றல், பாடிப்பணிதல், பத்தி செய்திருத்தல் முதலிய நற்செய்கைகளில் என்னைச் செலுத்திய தேவரீரது பேரருட் பெருங்கருணைத் திறத்தை என்னென்று கருதி என்னென்று துதிப்பேன்!

எல்லாம் ஆனவராயும் ஒன்றும் அல்லாதவராயும் எல்லா அண்ட சராசரங்களின் அகத்தும் புறத்தும் நிறைந்து விளங்குகின்ற தனித்தலைமைக் கடவுளே! குமாரப்

பருவத்தில் என்னைக் கல்வியில் பயிற்றும் ஆசிரியரை யின்றியே என் தரத்தில் பயின்று அறிதற்கருமையாகிய கல்விப் பயிற்சியை எனதுள்ளகத்தே இருந்து பயிற்றிவித்தருளினீர்.*

இடம்பத்தையும் ஆரவாரத்தையும் பிரயாசத்தையும் பெருமறைப்பையும் போது போக்கையும் உண்டுபண்ணுகின்ற ஆரியம் முதலிய பாஷைகளில் எனக்கு ஆசை செல்லவொட்டாது. பயிலுதற்கும் அறிதற்கும் மிகவும் இலேசுடையதாய்ப் பாடுதற்கும் துதித்தற்கும் மிகவும் இனிமை உடையதாய்ச் சாகாக்கல்வியை இலேசில் அறிவிப்பதாய்த் திருவருள் வலத்தாற் கிடைத்த தென்மொழி ஒன்றினிடத்தே மனம் பற்றச்செய்து அத் தென்மொழியில் பல்வகைத் தோத்திரப் பாட்டுக்களைப் பாடுவித்தருளினீர்.*

அச்சிறு பருவத்திற்றானே ஜாதிஆசாரம் ஆசிரம ஆசாரம் என்னும் பொய்யுலக ஆசாரத்தைப் பொய்யென்றறிவித்து அவைகளை அனுட்டியாமல் தடை செய்வித்து அப்பருவம் ஏறுந்தோறும் ஏறுந்தோறும் எனது அறிவை விளக்கஞ் செய்து செய்து என்னை மேல்நிலையில் ஏற்றி ஏற்றி நிலைக்கவைத்தருளினீர்.*

வாலிபப் பருவம் அடுக்குந் தருணத்திற்றானே அப்பருவத்திற்கு மிகவும் உரிய விடய இச்சைகளைச் சிறிதும் தலையெடுக்க வொட்டாது அடக்குவித்தருளினீர்.*

அவ் வாலிபப் பருவம் தோன்றுவதற்கு முன்னரே எல்லா உயிர்கட்கும் இன்பந் தருவதற்கு அகத்தும் புறத்தும் விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி உண்மைக் கடவுள் ஒருவரே உள்ளார் என்று அறிகின்ற மெய்யறிவை விளக்குவித்தருளினீர். வாலிபப்பருவம் தோன்றியபோதே சைவம், வைணவம், சமணம், பவுத்தம் முதலாகப் பலபெயர் கொண்டு பலபட விரிந்த அளவிறந்த சமயங்களும் அச் சமயங்களில் குறித்த சாதனங்களும் தெய்வங்களும் கதிகளும் தத்துவ சித்தி விகற்பங்கள் என்றும், அவ்வச் சமயங்களில் பலபட விரிந்த வேதங்கள்,ஆகமங்கள், புராணங்கள், சாத்திரங்கள் முதலிய கலைகள் எல்லாம் தத்துவ சித்திக் கற்பனைக்கலைகள் என்றும், உள்ளபடியே எனக்கு அறிவித்து அச்சமயா சாரங்களைச் சிறிதும் அனுட்டியாமல் தடைசெய்வித் தருளினீர். அன்றியும் வேதாந்தம் சித்தாந்தம் போதாந்தம் நாதாந்தம் யோகாந்தம் கலாந்தம் முதலாகப் பலபெயர் கொண்டு பலபட விரிந்த மதங்களும் மார்க்கங்களும் சுத்த சன்மார்க்க அனுபவ லேச சித்தி பேதங்கள் என்று அறிவித்து அவைகளையும் அனுட்டியாதபடி தடைசெய்வித் தருளினீர்.

---

* பெருமானார்க்கு இறைவனே கல்வி பயிற்றினார். வேறு ஆசிரியரிடம் பயின்றதில்லை என்பதற்கு இஃது ஆதாரமாம்.

* தமக்குத் தமிழ்ப்பற்றை உண்டாக்கியதற்காக பெருமானார் இறைவனுக்கு நன்றி கூறுவது ஈதாம்.

* இளமையிலேயே சாதி ஆசாரம் முதலியன பெருமானாரிடத்தில் இல்லை என்பது இது.

* வாலிபப் பருவத்தில் விடய இச்சைகள் இல்லை என்பதற்கு இஃது ஆதாரம்.

அங்ஙனம் செய்வித்ததுமன்றி, உலகியற்கண் பொன்விஷயஇச்சை பெண்விஷயஇச்சை மண்விஷயஇச்சை முதலிய எவ்விஷய இச்சைகளிலும் என் அறிவை ஓரணுத்துணையும் பற்றுவிக்காமல் எல்லா உயிர்களையும் பொதுமையில் நோக்கி எல்லா உயிர்களும் இன்பமடைதல் வேண்டுமென்னும் கருணை நன்முயற்சியைப் பெறுவித்துச் சுத்த சன்மார்க்கத் தனிநெறி ஒன்றையே பற்றுவித்து எக்காலத்தும் நாசமடையாத சுத்த தேகம், பிரணவதேகம், ஞானதேகம் என்னும் சாகாக் கலானுபவ தேகங்களும் தன் சுதந்தரத்தால் தத்துவங்கள் எல்லாவற்றையும் நடத்துகின்ற தனிப்பெரு வல்லபமும் கடவுள் ஒருவரே என்று அறிகின்ற உண்மை ஞானமும் கருமசித்தி, யோகசித்தி, ஞானசித்தி முதலிய எல்லாச் சித்திகளும் பெறுகின்ற அருட்பேறும் பெற்று வாழ்கின்ற பேரின்பப் பெருவாழ்வில் என்னை அடைவிப்பதற்குத் திருவுளங் கொண்டு அருட்பெருஞ் ஜோதியராகி நான் எவ்விதத்தும் அறிதற்கரிய உண்மைப் பேரறிவை அறிவித்தும், நான் எவ்விதத்தும் காண்பதற்கரிய உண்மைப் பெருங்காட்சிகளைக் காட்டுவித்தும், நான் எவ்விதத்தும் செய்தற்கரிய உண்மைப் பெருஞ்செயல்களைச் செய்வித்தும், நான் எவ்விதத்தும் அடைதற்கரிய உண்மைப் பெருநன்மைகளை அடைவித்தும், நான் எவ்விதத்தும் அனுபவித்தற்கரிய உண்மைப் பேரனுபவங்களை அனுபவிப்பித்தும் எனது அகத்தினும் புறத்தினும் இடைவிடாது காத்தருளி எனது உள்ளத்திலிருந்து உயிரிற்கலந்து பெருந்தயவால் திருநடஞ்செய் தருளுகின்றீர்.

இங்ஙனஞ் செய்தருள்கின்ற தேவரீரது திருவருட் பெருங்கருணைத் திறத்தை என்னென்று கருதி என்னென்று துதிப்பேன்!

திருச்சிற்றம்பலம்

இங்ஙனம்

சிதம்பரம்

இராமலிங்கம்

சமரச சுத்த சன்மார்க்க சத்தியப் பெரு விண்ணப்பம்

முற்றிற்று

## 3. சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞான விண்ணப்பம்

திருச்சிற்றம்பலம்

இயற்கை விளக்கம் என்கின்ற சத்திய ஞானசபைக் கண்ணே, இயற்கை உண்மை என்கின்ற சத்தியத் திருவுருவினராய், இயற்கை இன்பம் என்கின்ற சத்தியத் திருநடஞ் செய்தருள்கின்ற, இயற்கைத் தனிப்பெருங் கருணைத் தனிப்பெரும்பதியாய தனித்தலைமைக் கடவுளே!

தேவரீர் திருவருட் சமுகத்தை அடைந்த உண்மை ஞானிகளின் சித்திவல்லப தரத்தை வகுத்தறிந்து வாழ்த்துதும் என்று அளவிகந்த முகங்களைக் கொண்டு அளவு கடந்த நெடுங்காலம் தத்தம் அளவைகளால் தனித்தனி அளந் தளந்தும் ஒருமித்து அளந்தளந்தும் ஒருவாற்றினும் முடிவு தோற்றாமையின் வேதாகமங்கள் அனைத்தும் ஆங்காங்கு கோடித்து அதிசயிக்கின்றன என்றும், அண்ட சராசரங்கள் எல்லாவற்றையும் படைத்தல், காத்தல், துரிசுநீக்கல் முதலிய தொழில்களால் நிகழ்த்துகின்ற அதிகாரத் தலைவர்களும் எவ்வகைத் தத்துவங்களையும் காரண காரிய திறத்தால் நடத்துகின்ற சத்தி சத்தர்களும் உணர்ந் துணர்ந்தும் உணர்ச்சி செல்லாமையின் முயற்சி பற்றாது மயங்குகின்றன ரென்றும், பேரறிவாற் சிறந்த பெரியர்களெல்லாம் வியந்து வியந்து விளம்புகின்றனர். அதனால் திருவருட் சமுகத்தையடைந்த உண்மை ஞானிகளின் சித்தி வல்லப தரத்தை ஒருவராலும் ஒருவாற்றானும் உணர்ந்து கொள்ளுதல் கூடா வென்று ஐயுறவின்றி அறிந்து கொண்டேன். இங்ஙனம் அறிந்துகொண்ட சிறியேன் அவ்வுண்மை ஞானிகளுக்குச் சித்தி வல்லப தரத்தைக் கொடுத்தருளிய திருவருட் சமுகத்தின் இயற்கை உண்மை விளக்கத் தரத்தை எங்ஙனம் அறியத் தொடங்குவேன்!

மலத்திற் புழுத்த புழுவினஞ் சிறியேன் பொய்யறிவாற் புனைந்து உரைத்த பொய்யுரைகளையும் மெய்யுரைகளாகக் கருணையினாற் கடைக்கணித்தருளிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே! தேவரீரது திருவருட் சமுகத்தின் இயற்கைப் பெருங்கருணைப் பெருந்தன்மையைக் கருதுதற்கு விரும்பிய ஐந்தொழிற் கருத்தர் முதலியோர் தூய்மையுடைமை அன்புடைமை முதலியசுபகுணங்களைக் கருதுதற் கருவியாய தமது கரணங்கள் முற்றுப் பெற்றிலவென்று கருதுதலின்றி எண்ணி எண்ணி இரங்குகின்றனர் என்று அறிவுடையோர் வியந்துரைத்தலைப் பலகாற் பயின்று கேட்டறிந்தேன். இங்ஙனங் கேட்டறிந்த சிறியரிற் சிறியேன் அத்திருவருட் சமுகத்தின் இயற்கைப் பெருங் கருணைப் பெருந்தன்மையைக் காமம், வெகுளி முதலிய அவகுணங்கட் கெல்லாம் வைப்பிடமாகிய பராய் முருட்டன்ன கருங்கற் கரணத்தால் எங்ஙனங் கருதத் தொடங்குவேன்!

நாயிற் கடையேன் செய்த குற்றங்களை எல்லாம் குணங்களாகக் கொண்டு என்னுள்ளகத்தே அமர்ந்து உயிரிற் கலந்த பெருங்கருணைப் பெருமானே! தேவரீரது திருவருட்சமுகத்தின் இயற்கைப் பெருங்குணப் புகழைத் துதித்தற்கு விரும்பிய மூர்த்திகள் முதலியோர் துதித்தற் கருவியாய தத்தஞ் செந்நாவுறுப்புகள் வாய்மைகூறல், இன்சொற்புகறல் முதலிய ஒழுக்கங்களிற் சான்றில என்று துதித்தல் இன்றி அச்சுற்று நிற்கின்றனர் என்று அறிஞர் உண்மை வாசகத்தால் அறிந்தேன். இங்ஙனம் அறிந்த கடையேன் பொய்யுரைத்தல் பயனிலகூறல் முதலிய தீமைக்கட் பயின்று தடித்த எனது அசுத்த நாவினால் தேவரீர் திருவருட் சமுகத்தின் இயற்கைப் பெருங்குணப் பெரும்புகழை எங்ஙனம் துதிக்கத் தொடங்குவேன்!

அண்ட பிண்ட முதலிய எல்லாவற்றிற்கும் அகத்தும் புறத்தும் நிறைந்து விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதித் தனிப்பெரும் பதியாய பூரணரே ! தேவரீர் திருவருட் சமுகத்தின் இயற்கை உண்மைத் தரத்தை அறிதல் வேண்டுமென்றும், இயற்கைப் பெருங் கருணைப் பெருந் தன்மையைக் கருதுதல் வேண்டுமென்றும், இயற்கைப் பெருங்குணப் பெரும் புகழைத் துதித்தல் வேண்டுமென்றும், எனது உள்ளகத்தே ஓவா துறைந்து ஊற்றெழுந்து விரைந்து விரைந்து மேன்மேற் பெருகுகின்ற பேராசைப் பெருவெள்ளம் அணைகடந்து செல்கின்றதாகலின், அறிவர் அறிகின்ற வண்ணங்களும் கருதுவார் கருதுகின்ற வண்ணங்களும், துதிப்பார் துதிக்கின்ற வண்ணங்களும் ஆகிய எல்லா வண்ணங்களையும் உடையவர் அருட்பெருஞ்ஜோதித் தனிப்பெருங் கடவுள் என்ற சத்தியஞானிகளது உண்மை வாசகத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு, தன்மை சாலாத் தமியேன் அறிதற்கும் கருதுதற்கும் துதித்தற்கும் தொடங்கினேன்.

இங்ஙனந் தொடங்குதற்கு முன்னர், எனது அறிவிற்கும் கருத்திற்கும் நாவிற்கும் இயல்வனவாகத் தோன்றிய வண்ணங்களுள் ஒன்றேனும் ஈண்டு இயற்படத் தோற்றாமையின், அருட்பெருஞ்ஜோதித் தனிப்பெருங் கடவுளே ! தேவரீர் திருவருட் சமுகத்தின் இயற்கை வண்ணங்கள் எத்தன்மையவோ ! எத்தன்மையவோ என்று உணர்ந்து உணர்ந்து கருதிக் கருதி உரைத்து உரைத்து அதிசயிக்கின்ற வனானேன்.

இயற்கை உண்மைத் தனிப்பெரும் பொருளாயும் இயற்கை விளக்கத் தனிப்பெரும் பதமாயும் இயற்கை இன்பத் தனிப்பெரும் சுகமாயும் பிரிவின்றி நிறைந்த பெருந் தன்மையராய அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே ! தேவரீர் திருவருள் வலத்தால் பொறி புலன் கரண முதலிய தத்துவங்கள் அனைத்தையும் வென்று நின்மலராகித் தத்துவாந்தத்தில் நின்று தம் உண்மை உணர்ந்து இயற்கை உணர்ச்சியைப் பெற்று இயற்கை உண்மைக்கண் இயற்கை இன்பானுபவஞ் செய்கின்ற சுத்த யோகாந்தர்களும் சுத்த கலாந்தர்களும் சுத்த போதாந்தர்களும் சுத்த நாதாந்தர்களும் சுத்த வேதாந்தர்களும்

சுத்த சித்தாந்தர்களுமாகிய சுத்த சன்மார்க்க ஞானிகளின் திருக்கூட்டங்களை நன்முயற்சியால் தனித்தனி அடைந்து பத்தியாற் பணிந்து, அற்புதப் பெருஞ்செயல் புரிகின்ற ஐயர்களே ! அருட்பெருஞ் ஜோதித் தனிப்பெரும் பதியாய கடவுளின் இயற்கைத் திருவருட்சமுகம் இருந்த வண்ணம் உள்ளம் உவந்துரைத் தருளல் வேண்டும் என்று விண்ணப்பிக்கின்ற தோறும், எல்லாப் பொருள்கட்கும் எல்லாக் குணங்கட்கும் எல்லாச் செயல்கட்கும் எல்லாப் பயன்கட்கும் எல்லா அனுபவங்கட்கும் மற்றெல்லாவற்றிற்கும் உருவ சொரூப சுபாவ முதலிய இலக்கணங்கள் அனைத்தும் தாமேயாகியும் தாமல்லராகியும் தாக்கியும் தாக்கற்றும் அகத்தும் அகப்புறத்தும் புறத்தும் புறப்புறத்தும் நீக்கமின்றி நிறைந்து விளங்குகின்ற இயற்கை உண்மைக் கடவுளது இயற்கைத் திருவருட் சமுகம் இருந்த வண்ணம் அந்தோ ! அந்தோ !! எங்ஙனம் அறிவோம்! எவ்வாறு கருதுவோம்! என்னென்று கூறுவோம்! என்று அவ்வக்கூட்டங்களினுந் தனித்தனி உரைத்து உரைத்து நெகிழ்ந்து நெகிழ்ந்து நெட்டுயிர்க்கின்றார்கள் என்றும், எல்லாத் தத்துவங்களையும் எல்லாத் தத்துவிகளையும் தோற்றுவித்தலும் இயக்குவித்தலும் அடக்குவித்தலும் மயக்குவித்தலும் தெளிவித்தலுமாகிய தொழில்களை எளிதிற் கொடுத்ததற்குரிய பூரண சுதந்தரத்தவர்களாய், இயற்கைச் சத்தியஞான சுகானுபவ பூரண சொரூப சாத்தியர்களாய், எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் தடைபடாத நித்திய சுத்த சத்த ஞானதேகிகளாய், பூதசித்தி, கரணசித்தி, இந்திரிய சித்தி, குணசித்தி, பிரகிருதிசித்தி, புருடசித்தி, விந்துசித்தி, பரசித்தி, சுத்தசித்தி, காலசித்தி, கலாசித்தி, விசுவசித்தி, வியோமசித்தி, பிரமசித்தி, சிவசித்தி முதலிய பிண்டசித்தி, அண்டசித்தி, பகிரண்டசித்தி அண்டாண்ட சித்தி என்கின்ற அந்தரங்க பகிரங்க தத்துவ தத்துவி சித்திகளெல்லாவற்றையும் திருக்கடைக் கணிப்பாற் செய்யவல்லவராய், சடாந்த சமரச சத்தியராய் விளங்குகின்ற சமரச சுத்த சன்மார்க்க ஞானிகளது சித்விலாசத் திருச்சபைக் கண்ணே, புண்ணிய வசத்தால் புகுதப் பெற்று மனங்கனிந்து வணங்கி நின்று, சர்வ சுதந்தரராய சத்தியர்களே ! இயற்கை உண்மைத் தனிப்பெரும் பதியாய கடவுளின் இயற்கைத் திருவருட் சமுகம் இருந்த வண்ணம் திருவுளம் பற்றித் திருவாய் மலர்ந்து திருவார்த்தை அளித்தருளல் வேண்டும் என்று விண்ணப்பிக்கின்ற தோறும் திரு வார்த்தை அளித்தலின்றிப் பெருங்கருணைத் திருக்கண்களில் ஆனந்தநீர் பொழிந்து சும்மா இருக்கின்றனர் என்றும், உணர்ந்தோர் வியந்துரைப்பக் கேள்வியுற்று, இயற்கைத் திருவருட் சமுகம் இருந்த வண்ணம் என்னையோ !! என்னையோ !! என்று குலாவிக் குலாவிக் கூவுகின்றவ னானேன்.

அடிநிலைக் கருமஞானசித்தி அனுபவங்களினும், முடிநிலைக் கரும ஞானசித்தி அனுபவங்களினும், அடிநிலை யோகஞானசித்தி அனுபவங்கிளலும், முடிநிலை யோகஞானசித்தி அனுபவங்களினும், அடிநிலைத் தத்துவஞானசித்தி அனுபவங்களினும், முடிநிலைத் தத்துவஞானசித்தி அனுபவங்களினும், அடிநிலை ஆன்மஞானசித்தி அனுபவங்களிலும் முடிநிலை ஆன்மஞானசித்தி அனுபவங்களிலும் சுத்தஞானசித்தி

அனுபவங்களினும், சமரசசுத்த ஞான சித்தி அனுபவங்களினும் அதுஅதுவாகி நிறைந்தும் அதுஅதுவாகி விளங்கியும், அதுஅதுவாகி இனித்தும், ஆங்காங்கு அதீதமாகிக் கலந்தும், இவை அனைத்துமாகி ஒருமித்தும், அதீதா தீதமாகித் தனித்தும் வயங்குன்ற பெருங் கருணைப் பெரும் பதியாய கடவுளே ! எல்லாச் சத்திகளுக்கும், எல்லாச் சத்தர்களுக்கும், எல்லா மூர்த்திகளுக்கும், எல்லா மூர்த்தர்களுக்கும், எல்லாத் தேவிகளுக்கும், எல்லாத் தேவர்களுக்கும், எல்லாச் சாதனர்களுக்கும், எல்லாச் சாத்தியர்களுக்கும், எல்லா உயிர்களுக்கும், எல்லாத் தத்துவங்களுக்கும், எல்லாப் பொருள்களுக்கும், எல்லாக் குணங்களுக்கும், எல்லாச் செயல்களுக்கும், எல்லா அனுபவங்களுக்கும், மற்றெல்லாவற்றிற்கும் முதற்காரணமாகயும் நிமித்த காரணமாயும் துணைக் காரணமாயும் இவை அல்லவாயும் விளங்குகின்ற திருவருட்சமுகம் இருந்த வண்ணம் அறிந்துகொள்ளுதல் இங்ஙனமானால், திருவருட்சமுகப் பெருங்கருணைப் பெரும் பதியாய தேவரீர் இயற்கைத் திருவண்ணம் அறிந்துகொள்ளுதல் எங்ஙனமோ ! எங்ஙனமோ !!

ஓ ! ஒப்புயர்வின்றி விளங்குகின்ற ஒருவரே ! தேவரீர் திருவண்ணமும் திருவருட் சமுகத் திருவண்ணமும் அறிதற்கும் கருதுதற்கும் துதித்தற்கும் எத்திறத்தாலும் கூடாவாயினும் அடிமை அளவிற்கு இயன்றபடி அறியாது அறிந்தும், கருதாது கருதியும் துதியாது துதித்தும் எனது உரிமையை ஊற்றஞ் செய்கின்றவனானேன். வந்தனம்! வந்தனம்!!

திருச்சிற்றம்பலம்

இங்ஙனம்

சிதம்பரம்
இராமலிங்கம்

சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞான விண்ணப்பம்

முற்றிற்று

## 4. சமரச சுத்த சன்மார்க்க சங்க சத்திய விண்ணப்பம்

திருச்சிற்றம்பலம்

உத்தர ஞான சித்திபுரம் என்றும் உத்தர ஞான சிதம்பரம் என்றும் திருவருளால் ஆக்கப்பட்ட ஆக்கச் சிறப்புப் பெயர்களும், பார்வதிபுரம் என்றும் வடலூர் என்றும் உலகியலாற் குறிக்கப்பட்ட குறிப்புப் பெயர்களும் பெற்று விளங்குகின்ற தெய்வப் பதியினிடத்தே, இயற்கை விளக்க நிறைவாகியுள்ள ஒரு சுத்த சிவானுபவ ஞானசபையில், இயற்கை உண்மை நிறைவாகிய திருவுருவைத் தரித்து, இயற்கை இன்ப நிறைவாகிய சிவானந்த ஒருமைத் திருநடச் செய்கையை எவ்வுயிரும் இன்பமடைதற் பொருட்டே செய்தருளுகின்ற எல்லாம் வல்ல தனித்தலைமைக் கடவுளாகிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே ! தேவரீரது திருவருட் சமுகத்தில் யான் செய்து கொள்ளுகின்ற சமரச சுத்த சன்மார்க்க சங்க சத்திய விண்ணப்பம்.

இவ்வுலகினிடத்து ஆறறிவுள்ள உயர்வுடைத்தாகிய தேகத்தைப் பெற்றயான் இத்தேகத்திற்கு இடைக்கிடை நேருகின்ற மரணம் பிணி மூப்பு பயம் துன்ப முதலிய அவத்தைகள் எல்லாவற்றையும் நிவர்த்தி செய்து. இத்தேகத்தையே நித்தியதேகமாக்கிக்கொண்டு எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் எத்துணையும் தடைபடாத பேரின்ப சித்திப் பெருவாழ்வைப் பெற்று வாழ்தல் வேண்டும் என்பதே எனது சத்தியமான அதிதீவிர விருப்ப முயற்சியாக இருக்கின்றது.

எனது விருப்ப முயற்சி இங்ஙனமாக, அவத்தைகள் எல்லாவற்றையும் நீக்கி இத்தேகத்தை நித்தியதேகமாக்கி எக்காலத்தும் அழியாத பேரின்ப சித்திப் பெருவாழ்வைப் பெற்று வாழ்தல் எதனால் பெறுதல் கூடுமென்று அறியத் தொடங்கிய தருணத்து வேறு எந்த வழியாலும் பெறுதல் கூடாது, எல்லாமுடைய கடவுளது திருவருட் சுதந்தரம் ஒன்றாலே பெறுதல் கூடுமென்று தேவரீர் திருவருளால் அறிவிக்க உள்ளபடி அறிந்தேன்.

பின்னர், திருவருட்சுதந்தரம் நமக்கு எந்த வழியில் கிடைக்கும் என்று அறியத் தொடங்கிய தருணத்து, எனது யான் என்னும் தேகசுதந்தரம் போகசுநத்தரம் ஜீவசுதந்தரம் என்னும் மூவகைச் சுதந்தரங்களும் நீங்கியவிடத்தே கிடைக்கும் என்று தேவரீர் திருவருளால் அறிவிக்க உள்ளபடி அறிந்தேன்.

ஆகலில், எனது சுதந்தரமாகக் கொண்டிருந்த தேசுதந்தரத்தையும் போகசுதந்தரத்தையும் ஜீவசுதந்தரத்தையும் தேவரீர் திருவருட்கே சர்வ சுதந்தரமாகக் கொடுத்து விட்டேன். கொடுத்த தருணத்தே, இத்தேகமும் ஜீவனும் போகப்பொருள்களும்

சர்வசுதந்தரராகிய கடவுள் பெருங்கருணையாற் கொடுக்கப் பெற்றனம் அன்றி, நமது சுதந்தரத்தாற் பெற்றனவல்ல என்னும் உண்மையை அருளால் அறிவிக்கவும் அறிந்து கொண்டேன். இனி, இத்தேகத்தினிடத்தும் ஜீவனிடத்தும் போகப் பொருள்களிடத்தும் தேவரீர் திருவருள் சாட்சியாக எனக்கு எவ்விதத்தும் யாதோர் சுதந்தரத் தோற்றமும் தோற்றமாட்டாது. தேவரீர் திருவருட் சுதந்தரத்தை என்னிடத்தே வைத்தருளி, மரணம், பிணி, மூப்பு, பயம், துன்பம் முதலிய அவத்தைகள் எல்லாவற்றையும் தவிர்த்து, இத்தேகத்தையே நித்திய தேகமாக்கி எக்காலத்தும் அழியாத பேரின்ப சித்திப் பெருவாழ்வில் என்னை வாழ்வித்தல் வேண்டும்.

இத் தேகத்தைப் பெற்ற எல்லாச் சீவர்களுக்கும் எனக்கு அறிவித்த வண்ணமே அறிவித்து, அவரவர்களையும் உரிமையுடைவர்களாக்கி வாழ்வித்தல் வேண்டும்.

தேவரீர் பெருங்கருணை ஆட்சிக்கு வந்தனம்! வந்தனம்!

திருச்சிற்றம்பலம்

இங்ஙனம்

இராமலிங்கம்

சமரச சுத்த சன்மார்க்க சங்க சத்திய விண்ணப்பம்
முற்றிற்று

சன்மார்க்க விண்ணப்பங்கள் முற்றும்

பின் இணைப்பு : ஆதாரப்பதிப்புகளின் முகப்பேடுகள்

ஆறாம் திருமுறை முதற் பதிப்பின் முகப்பேடு

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

---

# திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்

சிதம்பரம்

# இராமலிங்கசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருவருட்பா

❖❖❖❖

## *ஆறாவது திருமுறை*

❋❋❋❋❋❋❋❋❋

இஃது

சமரச வேதசன்மார்க்க சங்காபிமானிகளாகிப

**வேலூர் – பத்மநாப முதலியார்**

**பெங்களுர் – இராகவலு நாயகர்**

வேண்டுகோளின்படி

---

சென்னைக்கவர்ன்மெண்டு நார்மல்பாடசாலைத் தமிழ்ப்புலவர்

சோடசாவதானம்

**தி–க. சுப்பராயசெட்டியார் பார்வையிட்டு**

மேற்படி சமரசவேதசன்மார்க்கசங்காபிமானி

**திரிசிரபுரம் – ம. லோகநாத செட்டியாரால்**

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது

---

கலியுகாதி – சகூஅசு – ல் நிகழும் தாரண ஸு கும்பரவி

PRINTED AT THE AUTHIKALANITHI PRESS :- MADRAS

MARCH 1885.

Registered Copy - Right

ஆறுதிருமுறைகளும் சேர்ந்த முதற் பதிப்பின் முகப்பேடு.

உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ் சித்தராயமர்ந்த
திருவருட் பிரகாச வள்ளலாரென்னும்
சிதம்பரம்

## இராமலிங்க பிள்ளை அவர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருவருட்பாத் திருமுறைத் திரட்டு

---

இஃது
**கா. திருவேங்கட முதலியார்**
விருப்பத்தின்படி
பிள்ளையவர்கள் மருகரும் சமரச வேத சன்மார்க்க சங்க
வித்வான்களி லொருவருமாகிய
புராணிகர்
**பொ. சுந்தரம் பிள்ளையவர்கள்**
திரட்டித்தர,
அஷ்டாவதானம்
**பூவை. கலியாணசுந்தர முதலியாரால்**
பார்வையிடப்பட்டு,
பிருங்கிமா நகரம்
**இராமசாமி முதலியாரால்**

---

சென்னை :
ஆல்பீனியன் அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது.
கலியாப்தம் [illegible]ல் நிகழும் நந்தன ௵
1892

---

பிருங்கிமாநகரம் இராமசாமி முதலியார் பதிப்பின் முகப்பேடு.

உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்

---

அருட்பெருஞ்சித்தராயமர்ந்த
திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்
சிதம்பரம்

***இராமலிங்கபிள்ளை அவர்கள்***

திருவாய்மலர்ந்தருளிய

# திருவருட்பாத் திருமுறை

இதனுள்
ஆறுதிருமுறைகளுடன் இதுகாறுமச்சிடாத
*பற்பலபதிகங்களும், நித்தியவிதியென்னும் உலகியலும்*
*நாமாவளிகளும்*
நூதனமாகச் சேர்க்கப்பட்டு,

---

சமரசவேத சன்மார்க்க சங்கத்தி லொருவராகிய
பிருங்கிமாநகரம்
இராமசாமி முதலியாரவர்களால்

தமது
இந்துயூனியன் அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.
சென்னை

கலியாப்தம் **௪௯௯௮** நிகழும் துர்முகி ௵

---

1896

சமரசபஜனை ச.மு. கந்தசாமி பிள்ளை பதிப்பின் முகப்பேடு.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ்ஜோதி - தனிப்பெருங்கருணை

திருவருட்பிரகாச வள்ளலார்
என்னும்
சிதம்பரம் இராமலிங்கசுவாமிகள்
திருவாய்மலர்ந்தருளிய

# திருவருட்பா

திருவருட்பிரகாச வள்ளலாரை
உபாசனா மூர்த்தியாகக் கொண்டொழுகும்
காரணப்பட்டு - சமரஸ பஜனை
***ச.மு. கந்தசாமி பிள்ளை அவர்களால்***
பார்வையிடப்பட்டு

❀ ❀ ❀ ❀ ❀

இதுகாறும் வெளிவராத பாடல்கள்
குறிப்புகளுடன்

---

புதுக்கோட்டைச்சீமை - இராமச்சந்திரபுரம்
***தீ.நா. முத்தையா செட்டியார்,*** F.R.S.A.
அவர்களால்
சென்னை சூளை, ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸில்
பதிப்பித்தது.

---

ருத்ரோத்காரி ஹூ )      1924      (ரிஜிஸ்டர் செய்தது

